# முகவுரை.

ஸ்ரீ பகவத் கீதையில் ஏராளமான புத்தகங்கள் இருக்கும் போது இப்புத்தகம் ஒன்று வெளியிடுவது ஏன் எனில் தமிழ் நாட்டுப் பெண்மக்களாம் எனது சகோதரிகள் ஒவ்வொருவரும், கிறிஸ்தவர்கள் பிரதிதினமும் பைபிள் படிப்பதுபோல், இப்புத்தகத்தைப் படித்து கீதையின் ஸாரத்தை யறிந்து அவ்வானந்தத்தில் ஈடுபட்டுத் தம்தமது குழந்தைகளுக்கும் இதைப் படிக்கும் பழக்கத்தைச் செய்யவேண்டுமென்னும் பேரவாவினுலேயே. தற்காலத்தில் ஸம்ஸ்க்ருத பாஷையும் ஆங்கில பாஷையும் தெரியாதவர் அநேகர் இருக்கின்றனர். பகவத் கீதைகள் இப்போது இருப்பவை பெரும்பான்மை ஆங்கிலத்திலேயே பதவுரை முதலியவற்றுடன் இருக்கின்றன. கோயமுத்தூர் ஸ்ரீமான் குப்புசாமி அய்யரவர்களது கீதையில் தமிழில் பதவுரை யிருப்பினும் ஸம்ஸ்க்ருதம் தெரிந்தவர்களுக்கு (கிரந்தம் தெரியாமல்) உபயோகமில்லாததுடன் ரூ. 9 கொடுத்து அதை வாங்கிப் படிப்பதற்கு அநேகருக்கு இயலாததாயிருக்கிறது—பள்ளி மாணவர்கள் அநேகரது வேண்டுகோளின்பேரில் இது வெளியிடப்பட்டது. வேதங்கள், உபநிஷத்துக்கள் இவற்றின் சாராம்சங்கள் எல்லாம் அடங்கினது கீதை—ஹிந்து மதத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் கீதையைத் தினமும் பாராயணம் செய்யவேண்டியது அவசியம்.

தற்காலக் கல்வியில் ஒரு பெருங்குறை மத போதனையும் நீதி மார்க்க போதனையும் இல்லாமை. கிறிஸ்தவர் பள்ளிக்கூடங்களில் இவற்றைக் கட்டாயப் படிப்பாய் ஏற்படுத்தி யிருக்கின்றனர்—கவர்மெண்ட் பள்ளிக்கூடங்களில் அது இல்லாமையால் அந்தக் குறையை நீக்கும்பொருட்டு மத விஷயமும் சன்மார்க்க விஷயமும் வீட்டில் பெற்றோர்களால் குழந்தைகளுக்குக் கற்பிக்கப்பட வேண்டும். இந்தக் குறையினுல் ஏற்படும் விபரீதமான பலன்[illegible]கும் நன் காலோசித்து குழந்தைகளை பக்தியுடன் கூடிய [illegible] தில் நடக்கும்படி செய்வதற்கு ஒவ்வொரு த[illegible]ரு தோற்றம் வீட்டில் பிரதிதினமும் பகவத்கீதை, த[illegible] பலஜன்மங்களை நாம்

அரிய நூல்களைக் குழந்தைகளுக்குக் கட்டாயமாகக் கற்பிப்பாராக. இவ்வித ஊக்கமுள்ள பெற்றோருக்கு இப்புத்தகம் பயன்படுமென நம்புகிறேன்.

ஸ்ரீமத் கீதைக்குப் பலர் பாஷ்யம் எழுதியிருக்கின்றனர். இச் சிறு புத்தகம் பள்ளிச் சிறுவர்களுக்கேயாதலின் சுலோகங்களின் கருத்துத் தெரியுமாறு அவற்றின் பதவுரை மாத்திரம் எழுதி ஒவ்வொரு அத்தியாயத்தின் விஷயத்தையும் சுருக்கி எழுதியிருக்கிறேன். கீதையைப் பலமுறை படித்தபோது அதனுடைய உட்கருத்து எவ்விதமாக இருக்கக்கூடும் என்று என் சிற்றறிவிற்கு எட்டிற்றோ அதை எழுதியிருக்கிறேன். ஒரு நூலைப்படிக்கும் போது அவரவர்களது மனோபரிபக்குவத்துக்குத் தகுந்தபடி அதை கிரகிப்பார்கள். என் அற்ப அறிவினால் நான் கிரகித்ததை எழுதியுள்ளேன். அது மற்றவர்கள் முற்றிலும் ஒப்புக்கொண்டு ஏற்றுக்கொள்ள முடியாமலிருக்கலாம். அபிப்பிராய பேதங்களிருப்பதே ஒரு மதத்தின் அபிவிருத்திக்குச் சாதனம் என்பர் பெரியோர். ஆதலின் அறிஞர் இச் சிறு புத்தகத்தில் உள்ள பல பிழைகளையும் மன்னித்து குற்றத்தைத் தள்ளி குணத்தைக் கொள்ளுமாறு வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

என் முன்னறி தெய்வமாம்

அன்னை பிதாவுக்கு

இச் சிறு புத்தகத்தை

அர்ப்பணம் செய்கிறேன்.

# ஸ்ரீ பகவத்கீதையின் சாரம்.

நமது புராணாதிகள் பலவற்றுக்கும் இருவிதக் கருத்து உண்டு. பஹிர் அர்த்தம் என்றும் இரஹஸ்யார்த்தம் என்றும் இரண்டு. இவ்விதமாய் இருவிதக் கருத்தமைத்து எழுதுவது ஏன் எனில் அது மனோபரிபக்குவத்தில் பல படிகளிலிருக்கும் பலருக்கும் உபயோகப்படவேண்டுமென்றே. ஹிந்து மதத்தில் மத சம்பந்தமான உயர்ந்த உண்மை விஷயங்களை அப்படியே எழுதினால் அவற்றின் ஆழ்ந்த கருத்து பலருக்கும் விளங்காது, ஆதலின் அதே விஷயத்தைக் கதாரூபமாய் எல்லாருக்கும் ரஸிக்கும்படி எழுதினால் முதலில் அதன் பஹிர் அர்த்தமாகிய கதையைப் படித்து ஆநந்தித்துப் பிறகு மனோ பரிபக்குவம் சிறிது சிறிதாய் விருத்தியாகும்போது அதன் ரஹஸ்ய அர்த்தத்தை கிரகித்து அதன் உண்மையை அறிய முயற்சி செய்வார்கள்.

நமக்குக் கடவுளால் அளிக்கப்பட்டிருக்கும் இத்தேகம் ஒரு க்ஷேத்ரம் அல்லது புரி அல்லது பட்டணம். இதில் கடவுளது அம்சமாய் வந்து தங்கியிருக்கும் ஆத்மாவே க்ஷேத்ரஜ்ஞன் அதாவது இந்தப்பட்டணத்தின் அரசன். இவ்வரசன் தனது சௌக்கியத்துக்கு வேண்டியதைச் செய்து கொள்ளுவதற்கும் அறிவை விருத்தி செய்து கொள்ளுவதற்கும் பலவித ஸாதனங்கள் இந்த க்ஷேத்ரத்தில் அமைந்திருக்கின்றன. அன்றன்று கர்மங்களைச் செய்யவும் இடம் விட்டு இடம் செல்லவும், ஆகாரத்தை யுண்ணவும் பொதுவாய் இந்த க்ஷேத்ரத்தை சுத்தமாய், சுகமாய் வியாதியின்றி வைத்துக் கொள்ளுவதற்குமாக கர்ம இந்திரியங்களாகிய கை, கால், வாய் முதலானவை கொடுக்கப்பட்டிருக்கிறது. இவை மிருகங்களுக்கும் மனிதனுக்கும் ஒன்றே. உண்பது, உறங்குவது முதலான க்ஷேத்ரத்தை காப்பதற்கு வேண்டிய தொழில்கள் எல்லாம் மிருகம், மனிதன் முதலான எல்லாப் பிராணிகளுக்கும் பொதுவானதே.

ஹிந்து மதக்கொள்கையின்படி இந்த ஒரு தோற்றம் (ஜந்மம்) மாத்திரம் முடிவானதல்ல. பலஜன்மங்களை நாம்

எடுக்கிறோம். இந்த தேகம் (ஸ்தூல தேகம்—நமது கண்ணுக்குப் புலப்படுகிற இந்த வெளி தேகம்) அநேகம் நூற்றுக் கணக்கான தனிப்பொருட்கள் (elements) சேர்த்து கட்டப்பட்ட ஒரு கலப்புப் பொருள் (Compound) சிசு கர்பத்தில் உண்டாகும் போது முதலில் மிக நுட்பமான கண்ணுக்குப் புலப்படக்கூடாத (ஜீவ அணு) பொருளாயிருந்து பிறகு தாய் உண்ணும் அன்ன பானாதிகளின் உதவியால் சிறிது சிறிதாய் வளர ஆரம்பிக்கிறது. கை, கால் மற்றும் பல உறுப்புகளெல்லாம் அமைந்து குழந்தை வெளி வருகிறது. பிறகு அது உண்ணும் ஆகாரத்தினால் அது வளர்ந்து பெரிய மனிதனாகிறது. அதாவது நாமுண்ணும் ஆகார பதார்த்தம் நம் தேகத்தில் சென்று பல தனிப் பொருட்களாக மாறி அவை யொன்றோடொன்று வேறுவித அளவில் சேர்ந்து மாம்சம், கொழுப்பு, ரத்தக்குழாய், நரம்பு முதலான கலப்புப் பொருட்களாய் மாறி நமது தேகத்தை வளரச் செய்கிறது.

இவ்விதம் வளர்ந்து சிசுப்பருவம் தாண்டி, பால்யம், கௌமாரம் (குமரன்—அழகிய சிறு வயது, சுமார் 25 வயது வரைக்கும்), யௌவநம் முதலான தன்மைகளை யடைந்து 60, 70 வயதுக்குப் பிறகு இந்த தேகமாகிய யந்திரம் மேன்மேலும் இன்னும் வளரும் சக்தியற்று சிறிது சிறிதாய் க்ஷீணிக்க ஆரம்பித்து ஜரை, மூப்பு இவற்றை யடைந்து சக்தியற்று முடிக்கி கடைசியில் அது உயிருடனிருப்பதற்கு வேண்டிய சக்தியைக் (Energy) கொடுக்கும் சத்துப் போய்விடுகிறது. (செத்துப்போகிறது). அப்படி சத்துப் போன தேகத்தை புதைத்தோ, எரித்தோ விடுகின்றனர். அப்போது அது ரூபமற்று அதன் பல கலப்புப் பொருள்கள் தனிப் பொருட்களாக மாறி பூமியிலும் ஆகாயத்திலுமுள்ள அந்தந்த வஸ்துக்களுடன் கலந்து விடுகிறது. வாயுக்கள் வாயுக்களுடனும், பூமியுடன் சேரவேண்டியவை பூமியுடனும் சேர்ந்துபோகின்றன (Decomposition).

தேகம் (க்ஷேத்ரம்) பல மாறுதல்களை யடையும் போதெல்லாம் (பால்யம், யௌவனம், கௌமாரம் முதலானவை) இந்தத் தேகத்திலுள்ள க்ஷேத்ரஜ்ஞனாகிய 'நான்' என்னும் பொருள் மாறு

தல் அடையவில்லை. குழந்தையாயிருக்கும்போதும் வயதான போதும் நான் நான் என்னும் உணர்ச்சி ஒரேவிதமாய்த்தானிருக்கிறது. இந்த 'நான்' என்னும் க்ஷேத்ரஜ்ஞன் (Ego), நமது வெளிக்கண்களுக்குப் புலப்படும் இந்த ஸ்தூல தேகத்தைத் தவிர இன்னும் நான்கு ஸூக்ஷ்ம தேகத்தினால் சூழப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தூல தேகம் நாம் உட்கொள்ளும் அன்னத்தினால் வளருவதால் அதற்கு அன்னமய கோசம் என்று பெயர், அதாவது அன்னத்தினால் கட்டப்பட்ட மேல் உறை அல்லது கவசம்.

நாம் ஸ்வாஸிக்காமலிருக்கவே முடியாது. 5 நிமிஷத்துக்கு ஸ்வாஸிப்பதற்கு வேண்டிய பிராணவாயு இல்லாவிட்டால் நாம் இறந்தே போகிறோம். நாம் ஜீவித்திருப்பதற்கு இந்தப் பிராண வாயு அதிமுக்கியமானது. ஆதலால் இந்தப் பிராணவாயு முதலிய ஸூக்ஷ்ம வாயுக்களால் கட்டப்பட்டு ஸ்தூல தேகத்துக்கு அடுத்த உள் உறை அல்லது கோசமாக இருப்பது பிராணமய கோசம்.

சரீவர ஆகாரம் சாப்பிட்டுக்கொண்டு, ஸ்வாஸித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும்போது நாம் சும்மா இருப்பதில்லை. நமக்குள் மனது என்று ஒன்றிருக்கிறது. அது நிம்மதியென்பதேயின்றி எப்போதும் சலித்துக்கொண்டேயிருப்பது. ஸ்தூல சரீரமாகிய அன்னமய கோசத்திலிருக்கும் ஐந்து சாளரங்களின் வழியாக (கண், காது, மூக்கு, நாக்கு, மேல் தோல்) வெளியுலகில் நடக்கும் விஷயங்களை யெல்லாம் கிரகித்து அவற்றை யனுபவிக்கவும், அடையவும், நீக்கவும் வேண்டிய ஆசை, கோபம், எண்ணங்கள் இவற்றுக்கெல்லாம் இருப்பிடமாயிருக்கிறது. சங்கல்பம், காமம், வெகுளி, மோஹம், லோபம் முதலானவற்றால் கட்டப்பட்ட மனது தான் மனோமய கோசம். இவ்வுலகிலிருக்கும் காலத்தில் நாம் பலவித அனுபவங்களை, அறிவை, ஞானத்தை யடைகிறோம். மனோமய கோசத்தின் வழியாய் பலவித வெளி விஷயங்களை அனுபவிக்கிறோம். அதனால் நமக்குப் பலவித சுகதுக்கங்கள், லாப நஷ்டங்கள், கஷ்டநிஷ்டூரங்கள் ஏற்படுகின்றன. சுகமே யனுபவிக்கும்போது நம்மை மறந்து மமதையுடன் இருக்கிறோம். அதற்கு விரோதமாய் மனதிற்குக் கசப்பாய் ஏதேனும் கஷ்டம்,

துக்கம் வரும்போது வெளி விஷயங்களில் சற்று வைராக்கியம் (வி+ராகம்=ஆசையின்மை) ஏற்பட்டு வெளியிலேயே வேடிக்கை பார்ப்பதை விட்டு நம் உள்ளுக்குள்ளேயே அறிவாகிய கண்ணை உள்நோக்கிப் பார்த்து அல்ப சந்தோஷத்தையே கொடுத்து துக்கத்துடன் கலந்துமிருக்கும் இந்த உலக சுகங்களைக்காட்டிலும் உயர்ந்த வஸ்து அல்லது உத்தமமான சுகம் ஒன்று இருக்கிறதா என்று ஆராய ஆரம்பிக்கிறோம் (உபநிஷத்—சிறந்த கனிகளை யுடைய ஒரு விருக்ஷத்தில் இரண்டு பக்ஷிகளிருக்கின்றன. மேல் கிளையில் ஒன்று, அது ஒன்றுமே செய்யாமல் மௌனமாய் நிம் மதியாயிருக்கிறது. அதன் சாயையாகவே யிருக்கும் கீழுள்ள பக்ஷி கிளைக்குக்கிளை தாவி கனிகளை இங்கு கொஞ்சம் அங்கு கொஞ்சமாக உண்டு களிக்கின்றது. மற்ற விஷயங்களொன்றும் அதற்கு ஞாபகமேயின்றி கனியை யுண்ணும் களியாட்டிலேயே தன்னை மறந்திருக்கிறது. அப்போது இதுவரையும் இது சாப் பிட்ட கனிகளின் ருசிக்கு மாறாக ஒரு கனி கசக்கின்றது. உடனே இந்த பக்ஷி வெறுப்புற்று கனி யுண்பதைச் சற்று நிறுத்தி சுற்று முற்றும் பார்த்து மேல் கிளையில் உள்ள பக்ஷியைப்பார்த்து அதைப் போல் தானும் நிம்மதியாயிருக்க எண்ணி மேல்நோக்கிப் பறந்து ஒரு கிளை உயரப்போகிறது. அதற்குள் அந்தக் கிளையில் ஒரு சிறந்த பழுத்த கனியைக்கண்டு அதை அனுபவிக்க ஆரம்பித்து தான் மேலேபோக வேண்டுமென்று ஆரம்பித்த முயற்சியை மறந்து போகிறது.) இப்படியேதான் நமது வாழ்க்கையும். நமக் குள் ஏதோ ஒன்று உயரப்போகவேண்டும் என்று அடிக்கடி விரும்புகிறது. ஆனால் உலகவிஷயங்களை அனுபவிக்கும் மயக்கத் தில் அந்த விருப்பம் நீடித்திருப்பதில்லை. இந்த அனுபவத்தால் நமக்கு சிறிது சிறிதாய் ஏற்படும் "மேலே போகவேண்டும், நீடித்த தான பேரின்பத்தைக் கண்டறியவேண்டும்" என்றும் உயர்ந்த எண்ணங்களுடன்கூடிய உரைக்கு விஜ்ஞானமய கோசம் என்று பெயர். அதாவது, மனோமய கோசம் என்பது உலக விஷயங்களை யே பற்றியது. விஜ்ஞானமய கோசம் என்பது உலக விஷய அனுபவங்களினால் (Experience) ஏற்பட்ட அனுபவ அறிவின் மயமாய் நாம் கீழ்ப்படிகளிலிருந்து மேற்படிகளுக்குச் செல்லவும்,

உயர்ந்த அறிவையும் உயர்ந்த ஞானத்தையும் (Ideal Wisdom) ஜீவாத்ம பரமாத்ம தத்துவங்களை (Truth) அறிய வேண்டிய முயற்சியையும் கொடுப்பதாயு மிருக்கிறது.

இவ்விதமான உயர்ந்த ஞானத்தை யடைவதற்கு சில வருஷங்களேயான ஒரு ஜன்மம் போதாது. அவ்வுயர்ந்த படியை எட்டுவதற்குள் இந்த ஸ்தூல தேகம் (அன்னமய கோசம்) கிழப் பட்டு உபயோகமற்றுப் போகிறது. உபயோகமில்லாத சக்தியற்ற இந்தக் கோசத்திலிருந்துகொண்டு மேற் செல்ல முடியாமலிருப்ப தால், நான் (Ego) என்னும் க்ஷேத்ரஜ்ஞனாகிய ஜீவாத்மா கிழிந்து போன பழைய வஸ்திரங்களை எறிந்து புதிய வஸ்திரங்களைத் தரிப் பது போல், கிழப்பட்டுப் பழையதாகப் போய்விட்ட இந்த ஸ்தூல சரீரத்தை விட்டு விட்டு ஞானமார்க்கத்தில் மேற்செல்லுவதற்கு ஸாதனமான மற்றொரு தேகத்தை எடுத்துக்கொள்ளுகிறது. அப்படிப் போகும்போது முதல் தேகத்தில் இருந்த காலத்தில் தானடைந்த விஜ்ஞானமய கோசத்துடன் போகிறது. ஆதலால் இந்த நமது ஜன்மத்தில், இதற்குமுன் நாமடைந்த பல ஜன்மங்க ளின் அனுபவ அறிவின் தொகுதி, நமக்குள் இருக்கிறது. கன மான இந்த ஸ்தூல தேக ஸம்பந்தத்தால் அவற்றில் சிலவற்றை மறந்திருக்கிறோம். ஆயினும் அவைகளை ஞாபகத்துக்குக் கொண்டு வரவேண்டிய ஸாதனங்கள் ஏற்படும்போது அவை நமது நினை வுக்கு வருகின்றன.

பலவித அனுபவங்களுக்குப் பிறகு உயர்ந்த ஆனந்தமாகிய பேரின்பத்தையடைய நாம் செய்யும் முயற்சியால் அவ்வானந்தத் தை சிற்சில ஸமயம் அடைகிறோம். அந்த ஆனந்தத்தின் தொகுதி யே ஆனந்தமய கோசம் என்பது. இது ஆத்மாவைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. அதற்கு வெளியில் விஜ்ஞானமய கோசம்; அதைச் சுற்றி மனோமய கோசம்; அதைச் சூழ ப்ராணமய கோசம்; அதற்கும் வெளியில் நமது கட்புலனுக்கு கோசரமாகும் ஸ்தூலமான அன்னமய கோசம். இவ்விதமாய் ஐந்து கோசங்கள், உறைகள், கவசங்கள் அல்லது மூடிகள் ஜீவாத்மாவாகிய நான் என்னும் வஸ்துவை மூடிக்கொண்டிருக்கிறது.

பல ஜன்மங்கள் எடுக்கிறோம். அந்த ஒவ்வொரு ஜன்மத்தி

லும் நமது அறிவும் ஞானமும் விருத்தியாக ஆக வெளிக் கோசங் களை யெல்லாம் ஒவ்வொன்றாய் கழற்றிவிட்டு கடைசியான ஆனந்த மய கோசத்தை யடைய முயற்சிக்கிறோம். இப்படியாக படிப்படி யாய் மேற்செல்வதை பரிணாமம் அல்லது பரிபக்குவம் (Evolution) என்று சொல்லுவோம். இப் பரிபக்குவத்தின் கீழ்ப் படி களிலிருப்பவன் தனக்கு ஒரு ஆத்மா உண்டு என்பதையும், அறிவு ஞானம் இவற்றின் விஷயமெதையுமே அறியாதவனாய் அன்னமய கோசத்திலேயே ஈடுபட்டு தேகத்தை வளர்ப்பதற்கு வேண்டிய எண்ணங்களுடன் அதற்குவேண்டிய முயற்சிகளைமாத்திரமே செய் கிறான். மேற்படிகளில் செல்லச் செல்ல தேகத்தை மறந்து அறிவு வளருவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்கிறான். பிறகு வெளி விஷயங்களிலும் உலக இன்ப விஷயங்களிலுமுள்ள அறிவு மாத்தி ரம் போதாது என்பதை உணர்ந்து நீடித்ததல்லாத அழிந்து போ கக்கூடிய இவ்வுலக விஷயங்களைத் தவிர மேலான வஸ்து ஒன்று, மேலான அறிவு ஒன்று, மேலான ஆனந்தம் ஒன்று உண்டா என்று ஆராய்ச்சி செய்ய ஆரம்பிக்கிறான். பல ஜன்ம பரி பக்குவத்துக்குப் பிறகு அழியாத தன்மையையும் (ஸத்), உயர்ந்த ஞானத்தையும் (சித்), உயர்ந்த பேரின்பமாகிய ஆனந்தத் தையும் (ஆனந்தம்) அடைந்த ஞானிகள், விவேகிகள், ஜீவன் முக்தர்கள், யோகிகள் சிலர் இருக்கின்றனர். இவர்கள் பல ஜன்ம பரிபக்குவத்துக்குப் பிறகு வேறு ஜன்மமின்றி பரமாத்மா வுடன் ஐக்கிய மடைகின்றனர்.

இந்த க்ஷேத்ரமாகிய புவியில் மனோமய கோசத்தில் இருவித கக்ஷிகள் இருக்கின்றன. ஒரு கக்ஷியார் கீழ் நோக்கியே செல்ப வர் அன்னமய, ப்ராணமய கோசத்தின் ஸமீபத்தில் இருந்து அவற்றின் சுகபோகத்துக்கு வேண்டியவற்றையே தேடுபவர். இவர்களுள் காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத் ஸர்யம், டம்பம், தர்ப்பம், ஈர்ஷை, அஸூயை முதலான பதின்மர் முக்கியமானவர்கள் (Vices). விஜ்ஞானமய, ஆனந்தமய கோசத் துக்கு ஸமீபத்தில் மற்றொரு கக்ஷியார் இருக்கின்றனர். அவர்கள் எப்போதும் அறிவு விருத்திக்கும் ஞான மார்க்கத்தில் செல்வதற் கும் பாடுபடுபவர்கள். அவர்களுள் முக்கியமானவர்கள், விவேகம், முயற்சி, நன்மை, பணிவு, அடக்கம், தயை, கருணை முதலான

உத்தம குணங்கள் (Virtues). இவ்விரு கக்ஷியாருக்கும் எப்போதும் இந்த க்ஷேத்ரமாகிய பட்டணத்தில் உட்கலகமும், போரும் நடந்துகொண்டேயிருக்கும். க்ஷேத்ரஜ்ஞனாகிய அரசன் ஸாக்ஷியாக இருந்துகொண்டு இந்த யுத்தத்தைப் பார்த்துக்கொண்டு இருக்கிறது. பிறரைக் கெடுத்து அவர்கள் செல்வத்தை யபகரித்து மெத்தைவீடு கட்டிக்கொண்டு அன்னமய, பிராணமயமாகிய இந்த ஸ்தூல தேகத்தை சுகமாக பஞ்சணை மெத்தையில் படுத்துறங்கச் செய்யவேண்டுமென்பது கீழ்க்கக்ஷியாருடைய போராட்டம். மேல் கக்ஷியாரோ இதற்கு ஒத்துக்கொள்ளுவதில்லை. இந்த தேகமே அநித்யம் எந்த நிமிஷத்திலோ இறந்துபோய்விடும்—இந்த உலக ஸுகங்களெல்லாம் நீடித்ததல்ல. ஆதலால் இந்தக் கீழான ஆசையை விட்டு மேலான ஆசையை, ஞான மார்க்கத்தை யடைவதில் உள்ள ஆசையை, நிறைவேற்ற ஊக்கமுடையவர்கள் ஆவோம், என்பது மேல் கக்ஷியாருடைய வாதம்.

இவ்விதமாக நமது தேகத்தில் ஸதாஸர்வகாலமும் இவ்விரு கக்ஷியாருக்கும் போராட்டம் நடந்துகொண்டேயிருக்கிறது. பல ஜன்ம பரிபக்குவ மேற்படும்போது கீழ்க்கக்ஷியார் தோல்வியடைந்து மேல்கக்ஷியாரே ஜயத்தை யடைகின்றனர். நமது புராணக்கதைகள் பலவும் இந்த உட்கருத்தையே உடையன. உதாரணமாக :—

(a) ராமாயணம்—ராமர் பரமாத்மா. ஸீதை அவரது அம்சமாய் இந்த க்ஷேத்ரமாகிய புரியில் வசிக்கும் ஜீவாத்மா. பத்துத் தலை ராவணன் என்பது கீழ்க்கக்ஷியாராகிய காமக்ரோதாதிகள். ஜீவாத்மாவாகிய ஸீதை காமக்ரோதாதிகளாகிய ராவணன் வசப்பட்டு பரமாத்மாவாகிய ராமனைச் சேர முடியாமல் தவிக்கும்போது அறிவாகிய ஹநுமார் தோன்றி ஜீவாத்மாவாகிய ஸீதைக்கு ஞான உபதேசம் செய்து அதனால் அந்த ஜீவாத்மாவை பரமாத்மாவுடன் ஐக்கியம் செய்கிறார்.

நவராத்திரி, தசராத்திரி அல்லது மஹிஷாஸுர மர்த்தனம். மஹிஷம் என்றால் எருமை. அதாவது ஞானமின்மை. நமக்குள் இந்த அவிவேகம், அஜ்ஞானம் அல்லது அஸுரத்தன்மையாகிய கீழ்மையான குணங்கள் கணக்கில்லாமல் வேண்டியவை இருக்கின்றன. இதுதான் மஹிஷமாகிய அஸுரன். முதல் மூன்றிரவு

துர்க்கையின் ஆதீனமான நாட்கள்—அதாவது மனிதன் சிறிதே
னும் பரிபக்குவமின்றி பகுத்தறிவின்றி முறட்டுத்தனமாய் தேக
பலத்தை மாத்திரமே கொண்டு பிற ஜீவன்களைக் கொல்லுவதிலும்
அடிப்பதிலும் ஜயிப்பதிலும் ஒரு மேலான ஸந்துஷ்டியை யடைந்து
நாகரிகமற்ற காட்டு முறண்டித்தனமாயிருக்கும் முதற்படிகள்.
இரண்டாவது மூன்றிரவு ஸ்ரீ லக்ஷ்மிக்குரிய தினங்கள். மனிதன்
முறட்டுத்தனத்தை விட்டுச் சிறிது நாகரிகம் அடையும்போது
குடும்பம், பட்டணம், ஜனஸமூகமென்பதை யெல்லாம் ஏற்படுத்திக்
கொண்டு அஷ்ட லக்ஷ்மிகளின் வரப்ரஸாதமாய் கிடைக்கும் வித்தை
(உலகவிஷய அறிவு) செல்வம், தான்யம், புத்ரன், வீர்யம், தைரி
யம் முதலியவற்றை யடைந்து கூடியமட்டும் ஒருவருக்கொருவர்
பரோபகாரஞ் செய்துகொண்டு உலக ஸுகங்களை யநுபவிக்கும்
இரண்டாவதான படிகள். மூன்றாவது மூன்றிரவு ஞானதேவதை
யாம் ஸரஸ்வதிக்கு உரித்தானவை. உலக ஸுகங்களை யெல்லாம்
நன்கு அனுபவித்த மனிதன் அவற்றின் நிலையின்மையைத் தெரிந்
துகொண்டு நிலையுள்ள நீடித்த விஷயங்களில் ஆசையுடையவனாய்
அதற்கு வேண்டிய வித்தை (ஆத்மஞான வித்தை)யை வாக்தேவி
யின் அருளால் அடைந்து தன்னுள்ளிருக்கும் அறிவுமயமாகிய
பரம்பொருளைக் காணவிடாமல் மறைத்துக்கொண்டிருக்கும் அஞ்
ஞானமாகிய மஹிஷ அஸுரனை வென்று பரமாத்மாவுடன்
ஐக்கியமாவதற்கு முயற்சி செய்யும் மூன்றாவது படிகள். பத்தா
வது தினம் மஹிஷ அஸுரனை மர்த்தனம் செய்வதற்கு அநுக்
கிரகஞ் செய்த தேவியினது கிருபையால் விஜயத்தை யடைந்த
விஜயதசமி.

இவ்விதமாகவே நமது ஒவ்வொரு புராணக் கதைகளுக்கும்
வழக்க பழக்கங்களுக்கும் உட்கருத்து இருக்கிறது. அவற்றை
ஆராய்ந்தறிந்து ஞானமார்க்கத்தைப் பின்பற்றுவதற்கு வேண்டிய
பரிபவமும் உயர்ந்த உண்மையான அறிவும் ஞானமும் வேண்டா
மோ? அது கீழ்ப்படிகளிலிருப்பவர்களுக்குக் கிடைக்குமோ—
கிடைக்காது. ஆயினும் ஒவ்வொரு மனிதனும் கூடியமட்டும் மேல்
நோக்கிச் செல்வதற்கும் உத்தம ஞானத்தை அடைவதற்குமே
ஊக்கமுடையவனாதல் வேண்டும்.

ஸ்ரீ பகவத் கீதையின் உட்கருத்து அல்லது ரஹஸ்யார்த்தம் என்ன என்பதை ஆராய்வோம்.

கீதையானது பகவான் கிருஷ்ணபரமாத்மா அர்ஜுனனுக்கு யுத்தத்தின் இடையில் உபதேசம் செய்தார். கிருஷ்ண பரமாத்மா—கிருஷ்ணம் என்றால் மேகநிறம். இங்கு வெளிப் பார்வைக்கு மேகநிறமல்ல. மேகத்தின் தன்மையை யுடையவர். அதாவது சூல்கொண்ட ஒரு மேகமானது எப்படி குளிர்ச்சியான மழையை வருஷித்து உலகத்தில் உஷ்ணத்தினால் தவிக்கும் பிராணிகளுக்கும் பயிர்களுக்கும் சந்துஷ்டியை யுண்டாக்கி மேலும் பிராணிகள் ஜீவித்திருப்பதற்கே வேண்டிய பயிர்களையும் உண்டாக்கி உலகம் ஸுபிக்ஷமாயிருக்கச் செய்கிறதோ அவ்விதமே பரமாத்மாவாகிய கிருஷ்ணபகவான் தன் கருணையாகிய மழையை தாபத்ரயாதி அக்கினியினால் வருந்தும், ஜனனமரண ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டுத் தவிக்கும், காமக்ரோதாதி உட்பகைவர்களால் கஷ்டமுறும், இந்திரிய விஷயங்களில் ஈடுபட்டு அவைகளிலிருந்து தப்பித்துக்கொள்ளும் மார்க்கமறியாமல் மயங்கும் தன் பக்தகோடிகளாகிய ஜீவாத்மாக்களுக்கு வருஷித்து அதனால் அவர்கள் வருத்தம் நீங்கி குளிர்ச்சி (மனம்) யடைந்து மேல் நோக்கிச் சென்று நல்வழியில் பிழைத்துப்போகும் மார்க்கத்தை உபதேசிப்பவர்.

அர்ஜுனன்—அர்ஜுனம் என்றால் வெண்மைநிறம். கிருஷ்ணனது உபதேசத்தைப் பெற்றுக்கொண்டு அதை யுணர்ந்து, பகுத்தறிந்து ஞானமார்க்கத்தில் செல்லுவதற்கு வேண்டிய பரிபவமும் வெண்மைநிறமாகிய ஸத்துவகுணமும் பூர்த்தியாயுள்ள ஒரு உத்தமமான பக்தன் அல்லது சிஷ்யன். யுத்தத்தினிடையில் உபதேசம்—அன்னமய பிராணமய கோசத்தில் தங்கி, இந்திரிய விஷயங்களை நுகர்வதிலேயே திருப்தியுற்று வேறு அதற்குமேல் உயர்ந்த தன்மையென்பது ஒன்று உண்டு என்பதையே அறியாமல் மனிதனிருக்கும் வரைக்கும் அந்தக் கீழான நிலைமையில் சண்டையே கிடையாது. சிறிது நாகரீகமடைந்து மனிதன் மேற்படிகளுக்கு ஏற ஆரம்பிக்கும்போதுதான் அவனுக்குள் இருக்கும் கீழ் சக்தியாகிய உட்பகைவர்களுக்கும் மேற்சக்தியான உயர்குணங்களுக்கும் சண்டை யாரம்பிக்கிறது. அர்ஜுனன்

அந்த நிலைமையிலிருப்பவன். அவனே ஜீவாத்மா. பரிபக்குவமடைந்து விவேகத்தையும் ஞானத்தையும் அடைவதற்கு யோக்கியனான ஜீவாத்மா. கீதையின் உபதேசம் என்னவென்றால் மேற்செல்ல மிகுந்த ஆவலுடன் முயற்சி செய்யும் ஜீவாத்மா எவ்விதமாய் உயர்ந்த படியை யடைவது என்பதே. இது ஒரேபடியாய் ஏறிவிட முடியாது. பல படிகளையுடைய (ஸோபானம்) அந்த ஞானமார்க்கத்தை கீதையில் விரித்துக் கூறுகிறார். அவற்றை ஒவ்வொன்றாய் எடுத்துக்கொள்வோம்.

கர்மம்—பலனில் அபேக்ஷையுடன் செய்யும் கருமம் அல்லது தொழில். சாதாரண மனிதனுக்கு போகத்தை யநுபவிப்பதில் தான் மிகுந்த இஷ்டம், புத்திரமித்திர களத்திராதியர் மேலும் மிகுந்த பற்று, மண் பெண் பொன் இவற்றில் அஸாத்தியமான ஆசை. லக்ஷத்துக்கு ஒருவர் குறைவாக மற்றெல்லாரும் இந்தப்படியிலிருப்பவர்களே—தன் லாபத்தையும் தன் நலத்தையுமே கருதி அதன் பொருட்டே எப்போதும் தொழில் செய்யும் இந்தப்படியில் (கர்மப்படி) இருப்பவர்களை நன்மையான கர்மங்கள், பிறருக்குபகாரமான தொழில்கள், ஜீவஹிம்ஸையில்லாத வேலைகளைச் செய்விப்பது எப்படி? “இந்த தானம் செய், அந்த தர்மம் செய், இந்த புண்ணிய நதியில் நீராடு, உனக்கு இதன் பலன் மோக்ஷத்தில் கிடைக்கும். நீ இறந்தபிறகு புண்ணிய லோகங்களுக்குச் சென்று நீ செய்த புண்ணியங்களுக்குத் தகுந்த பலனை யநுபவிப்பாய்” என்று இவ்விதம் தூண்டும்போது நல்ல போகங்களை மேலுலகங்களில் அநுபவிக்கப் போகிறோம் என்னும் நம்பிக்கையுடன் மனிதன் நன்மைகளைச் செய்கிறான். மேலும் பாபம் செய்தால் நீ நரகத்தில் சென்று பாபத்தின் பலனையநுபவித்துத் துன்பமுறுவாய் என்று சொல்வதால் கூடியமட்டும் பாபம் செய்யக்கூடாது என்று பயப்படுகிறான். பகவத்கீதையில் முதல் யோகம் அர்ஜுன விஷாத யோகம்—கர்ம மார்க்கத்திலிருந்துகொண்டு கர்மங்களின் புண்ணிய பாபங்களை யநுபவித்துக் கொண்டு உலக விஷயங்களில் பற்றுடன் ‘என் பந்துக்கள்’, ‘என் பாட்டனார்’, ‘என் குரு’ என்னும் அபிமானம் அல்லது மோகத்துடன் ‘என்ன செய்வது’ என்று தெரியாமல் மயக்கம் அல்லது சோகமுறும் சந்தர்ப்பத்தில்

அர்ஜுன னுடைய பயத்தைப்போக்கி ஞான உபதேசம் செய்ய அல்லது அவனது மோகம், சோகம் இவற்றைப் போக்க கிருஷ்ண பரமாத்மா முன் வருகிறார்.

2. இவ்வத்தியாயம் கீதையின் மொத்த ஸாரமெனக் கருதலாம். மற்ற 16 அத்தியாயங்களிலுமுள்ள விஷயமும் இதில் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (a) தேகம் அநித்யம் அதைக் குறித்து வருந்துதல் வேண்டா. (b) ஜீவாத்ம பரமாத்மாவின் தன்மைகள், ஆத்மஞான விஷயம். (c) ஸ்வதர்மம், அவரவர் கர்மத்தைச் செய்யவேண்டியது (d) ஆயின் கர்மயோகியா யிருக்கவேண்டும் அதாவது கர்மபலனில் ஆசையின்றி ஈஸ்வர அர்ப்பணமாய் பரோபகார நிமித்தம் கர்மம் செய்யவேண்டியது. (e) கர்மம் செய்யாமலிருக்கவே கூடாது. இந்த தேகத்தைப் போஷிப்பதன் நிமித்தமாவது ஒவ்வொருவனும் கர்மம் செய்யவேண்டியது அவசியம். (f) கர்மமென்னும் படிகளையே தாண்டி அறிவு விருத்தியாகி பகுத்தறிவு சிறந்து ஞானமார்க்கத்தில் பிரவேசித்து ஸமாதியடைந்து உறுதியான, நிலைத்த சஞ்சலமில்லாத ஞானத்தையடைந்த ஜீவன் முக்தன் கர்மம் செய்யவேண்டியதில்லை. (g) ஸ்திதப்ரஜ்ஞனது விவரம், அவன் எவ்விதமிருப்பான், எவ்விதம் நடந்துகொள்ளுவான் என்பதான விஷயம்.

3. கர்மயோகம்—இது பலனை யபேக்ஷித்து கர்மம் செய்வதற்கு மேலுள்ள படிகள். உலகிலுள்ள எல்லாப் பிராணிகளும் முக்குணங்களில் வசப்பட்டு ஸ்வாதீனமின்றி கர்மம் செய்கின்றன. சிறந்த உத்தமமான ஞானத்தை யடைந்து கடவுளிடத்தில் ஈடுபட்டு லௌகிகவிஷயங்களில் சிறிதளவேனும் பற்று இன்றி பக்தியில் ஆழ்ந்திருக்கும் மகாபரிபக்குவமடைந்த ஞானிகள் மாத்திரமேதான் கர்மத்தையே விட்டுவிடலாம். மற்று, ஸாதாரணமானவர்கள், உயர்ந்த ஞான பரிபக்குவமில்லாதவர்கள் கர்மம் செய்யவே வேண்டும். அவர்கள் செய்யும் கருமம் சுயநலத்தின் பொருட்டும் தன் சுகத்தின் பொருட்டும் இருக்கக்கூடாது. மோக்ஷ அபேக்ஷையுடனும் பலனில் இச்சையுடனும் கர்மம் செய்தல் கூடாது. "பரோபகாரார்த்தம் இதம் சரீரம்", கடவுளால் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் இச்சரியம் பிறருக்கு உபகாரம் செய்வதற்காக, என்னும்

எண்ணத்துடன், தான் செய்யும் ஒவ்வொரு தொழிலையும் கடவுளுக்கு அர்ப்பித்து பிறருடைய க்ஷேமத்தின் பொருட்டே கர்மம் செய்யவேண்டும். இதுதான் கர்மயோகம், யஜ்ஞார்த்தமான கர்மம். ரஜோகுணத்திலிருந்து உண்டான ஆசை அல்லது காமத்தின் வசப்பட்டு உலகவிஷயங்களை தான்தானே அனுபவிக்க வேண்டும் என்னும் பேராசையுடன் ஸ்வய நலப்பிரியனாய் இருக்கும் படியிலிருக்கும் ஒருமனிதனானவன் சிறிது சிறிதாய் இவ்வாசையை அடக்கி காமத்தை வென்று தனக்கென்று கர்மம் செய்யாமல் பிறர் நன்மையின் பொருட்டுத்தொழில் செய்யும் பரிபக்குவம் ஏற்படும்போது அவன் அப்போதே கர்மயோகி எனப்படுவான். "தனக்கென வாழான் பிறர்க்குறியாளன்" என்னும் புத்த பகவான், ஜனகர் முதலான பெரியோர் உத்தமமான கர்ம யோகிகள்.

4. ஞானயோகம்.—கர்ம யோகத்துக்கடுத்த படி இது. உண்மைப்பொருளாகிய பரமாத்மாவைப்பற்றி விவேகம் ஏற்பட்டு அப்பரம்பொருளை யடையவேண்டும் என்னும் விருப்பமும் அதற்கு வேண்டிய அறிவுடன் கூடிய முயற்சியும்.

5. ஸந்யாஸயோகம்.—மோக்ஷமார்க்கத்தை (மோக்ஷம்—விடுதலை) யடைய விரும்புபவன் அதற்கு ஸாதனமல்லாதவும் அதற்கு இடையூறாகவுமுள்ள வேண்டாத கர்மங்களை யெல்லாம் விட்டுவிட்டு (ஸந்யாஸம்) பகவானை அடைவதற்கு வேண்டிய உத்தமமான கர்மங்களை மாத்திரம் பலாபேக்ஷையின்றிப் பகவதர்ப்பணமாகவும் செய்துகொண்டு தாமரையிலைத் தண்ணீர்போல் ஆத்மஞானமாகிய ஸூரியனால் அஞ்ஞானமாகிய இருள் நீங்கி, ஞானபாநுவின் பிரகாசத்தால் கடவுளை அறிந்து எல்லாப் பிராணிகளையும் சமமாகக்கருதி, ஸர்வ வியாபகரான அந்தப் பரம்பொருளினிடமே தன் அறிவை யொப்படுத்தி உயர்ந்த சாந்த பதவியை அதா வது மன அமைதியையடையவேண்டும்.

6. இந்த மன அமைதியை யடைவதற்கு ஸாதனமான ஒருபடி தியானம். இந்திரியங்களை ஜயித்துக் கட்டுப்படுத்தி சீதோஷ்ணம், சுகதுக்க, லாபநஷ்ட, மானாபமானங்களில் ஒரே நிலையாய், பகை, நட்பு, புலையன், மண்கட்டி, தங்கம், எதுவாயிருந்தாலும்

அவற்றையெல்லாம் ஸமதிருஷ்டியுடன் நோக்கி மித்திரன் சத்துரு என்னும் பேதமின்றி மனதை ஒரேமுகமாய் ஸ்திரமாய் கடவுளிடத்திலேயே செலுத்தி ஆரம்பத்தில் ஏகாந்தமான இடத்தில் ஸ்திரமான ஆசனத்திலிருந்துகொண்டு, மித ஆகாரம், நித்திரையுடையவனாய் ஈஸ்வரத்யானம் செய்துகொண்டே யிருப்பவன், துக்கம், கஷ்டம், பந்தங்களிலிருந்தெல்லாம் விடுபட்டு பலஜன்மங்களிலும் ஏற்படும் அப்பியாஸத்தினால் பரிபவ மடைந்து யோகியாகிறான்.

7. விஜ்ஞான யோகம்— ஞானமார்க்கத்தில் மேற் செல்லுவதற்கு இதுவே அடுத்தபடிகளாகும்—ப்ரக்ருதி, பஞ்சபூதாதிகள், அவற்றிலெல்லாம் வியாபித்திருக்கும், அவற்றின் ஸாரமாயிருக்கும் பரமாத்மா, இவைகள் ஒன்றுக்கொன்றுள்ள ஸம்பந்தம், ப்ரக்ருதியின் 3 குணங்கள், பர அபரமாயைகள், இவற்றையெல்லாம் அனுபவத்தில் ஆராய்ந்து, அறிந்து, பலதேவதைகளைப் பூஜித்து அவர்களால் அடையக்கூடிய பலனெல்லாம் நீடித்ததல்ல என்பதையும் அனுபவத்தில் அறிந்து பிறகு ஒரேகடவுளாகிய, குணரஹிதராகிய, ரூபமற்ற ஸாஸ்வதப்பொருளாகிய பரமாத்மாவை அறிகிறான்.

8. அப்யாஸ யோகம்— மனத்தை எத்தனை விதங்களில் கட்டுப்படுத்தினாலும் அது மறுபடி மறுபடி விஷயங்களை நாடுகிறது. எத்தனை விதத்தில் ஈஸ்வரத்தியானத்தில் கட்டுப்படுத்தி நிறுத்தினாலும் அக்கட்டுக் கடங்காமல் மீறிக்கொண்டு இதர விஷயங்களில் தாவிச் செல்லுகிறது. இது நமது அனுபவத்தில் நாமறிந்தவிஷயம். 5 நிமிஷ நேரமேனும் பகவானது ஏதேனும் ஒரு ரூபத்தில் மனதை நிலைநிறுத்தி (Concentration) தியானிக்க ஆரம்பித்தால் அதிசீக்கிரத்திலேயே இதர எண்ணங்களும் ஞாபகங்களும் வந்து சூழ்ந்துகொண்டு தியானத்தைக் கலைத்துவிடுகிறது. ஆதலால் பகவானிடத்தில் மனதை நிலைநிறுத்துவது அசாத்தியமானது. அதற்கு அப்பியாசமே அடுத்த படிகள், அதியஜ்ஞம், அதிபூதம், அதியாத்மா, க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன் இவற்றை யெல்லாம் நன்கறிந்து இதர விஷயங்களில் மனதைச் செலுத்தாமல் கடவுளிடத்திலேயே ஸ்திரமாகக்கட்டி ரூபமற்று

"ஓம்" என்னும் சப்தமாத்திரமாயுள்ள அந்த அக்ஷரப்பொருளை எப்போதும் இடைவிடாது தியானிப்பதற்கு அப்பியாஸம் அல்லது பழக்கம் செய்துகொள்ளுகிறான். ப்ரம்மாதி உலகம் யாவும் அக்ஷரமல்ல அதாவது ஸ்திரமான தல்ல என்பதை உணர்ந்து மேலான பதவியையடைகிறான்.

9. ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்—இவ்விதம் ஞானத்தினாலும் தியானத்தினாலும் அப்யாஸத்தினாலும் கர்ம யோகத்தினாலும் வித்தைகளுக்குள் உயர்ந்த ராஜவித்தையானதும் அதிரஹஸ்யமாய் எல்லோராலுமே அறியமுடியாததுமான "ஆத்ம வித்தை"யை யடைந்து முக்தியடைகிறான். பரமாத்மாவே நிலையுள்ளது, மற்ற சராசரங்களெல்லாம் சிருஷ்டி காலத்தில் வியாபித்து ப்ரளய காலத்தில் ஸர்வேச்வரனிடத்தில் ஒடுங்கி லயித்துப் போகிறது (Evolution & Involution) என்னும் ஆத்ம வித்தையின் ஒரு பகுதியை அறிகிறான். எல்லாம் கடவுளே, எல்லாம் ப்ரம்மமயம், நாம் காணும் வஸ்துக்களெல்லாம் அவரதுசாயையே என்பதை யுணர்ந்து ஈச்வர அர்ப்பணமாய் தொழில் செய்துகொண்டு தர்மபுத்தியுடன் உறுதியான அறிவுடன் கடவுளையே யடைகிறான்.

10. விபூதி யோகம்—இது உத்தமமான ஆத்ம வித்தை. அதாவது பரம்பொருளாகிய ஸர்வேச்வரன் நாம் காணும் ஒவ்வொன்றினுடைய ஸாரமாயும் நாம் காணும் எல்லா ப்ராணிஜாதிகளிலும் வியாபித்திருக்கிறார் என்னும் தத்துவத்தை (உண்மையை) அறிவது. நான் வேறு, கடவுள் வேறு, உலகத்தில் நாம் காணும் பொருள்களெல்லாம் வெவ்வேறு என்னும் பேத புத்தியின்றி பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள அப்பரம்பொருளின் பல்வேறு உருவங்களான இப்ரபஞ்சத்தில் கடவுளின் ஏகத்வத்தைக் காண்பதே உயர்ந்த ஞானம்.

11. இத்தகை நேசம் பரமாத்மாவாகிய ஸ்ரீ க்ருஷ்ண பகவானது சிறந்த உபதேசத்தைக் கேட்டுக்கொண்டிருந்த அர்ஜுனனுக்கு தன்னை யறியாமலே மனதில் ஒருவித பரிசுத்தமும் ஞானமும் உண்டாகி தனது ஞானக் கண்ணினால் ஸர்வ வ்யாபகராகிய பகவானை ஸர்வத்திலும் காண்கிறான். அவன் மனதில் பக்தி

யாகிய பரவசம் ஏற்பட்டு பரம்பொருளாகிய ஜகத்ஜோதியை எந்தத்திக்கிலும் எல்லா வஸ்துக்களிடத்தும் இருப்பதாக உணருகிறான். கடவுள் கிருபையால், கிருஷ்ண பரமாத்மாவின் கருணையால் இவ்வுணர்ச்சி அர்ஜுனனுக்குச் சிறிது நேரத்துக்கு மாத்திரமே யுண்டாகிறது.

அப்போது விஸ்வரூபியான, விஸ்வம் முழுவதும் வியாபித்துள்ள பரம்பொருளை, பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரிபூரண ஆனந்த வஸ்துவை, தேஜோமயமான பரமேஸ்வரனை எங்கிலுமிருப்பதாகக் கண்டு, நிறைந்த பூர்ண பக்தி விநயத்துடன் அஞ்சலிசெய்து அர்ஜுனன் அடைக்கலமடைகிறான் என்பது விஸ்வரூப யோகம்.

12. மறுபடி கிருஷ்ணபரமாத்மா உபதேசிக்க ஆரம்பித்து சாதாரணஜனங்களுக்கு சகுண உபாசனையே சிறந்தது என்பதை விவரித்து மிகுந்த பக்தியில் ஈடுபட்டிருப்பவனுடைய குணங்களையும் தன்மைகளையும் எடுத்துக்கூறி பக்தியின் மேன்மையை அர்ஜுனனுக்கு விளக்குகிறார்.

13-17. க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞன்.—சரீரம், ஆத்மா முதலானவற்றின் பிரிவினைகளையும், ஐக்கியத்தையும், ஒன்றுக்கொன்று உள்ள சம்பந்தத்தையும், ஸத்துவ ரஜோ தமோ குணம் என்றும் மூன்று குணங்களின் விவரத்தையும், பரமேஸ்வரனாகிய புருஷோத்தமனை யடையும் மார்க்கத்தையும் அதற்கு இடையூறாக இருக்கும் விஷயங்களையும், தெய்வத்தன்மையுடன் கூடிய பரிபவமடைந்தவர், அஸுரத்தன்மையுடன் கூடி பரிபக்குவமடையாதவர் இவர்களின் தன்மைகளையும், 3 வித முயற்சி அல்லது கடவுளை யடைவதற்கு சாதனமான 3 வித சிரத்தை இவற்றைப் பற்றியும் விவரித்துக் கூறுகிறார்.

18. 3 வித தியாகம், கர்மத்தின் விஷயம், மும்மூன்று விதமான ஞானம், கர்மம், கர்த்தா, புத்தி, தைரியம், சுகம், சதுர்வர்ணத்தவரது குணகர்மங்கள் இவற்றின் விஷயம்.

இவற்றை யெல்லாம் அறிந்து சிறந்த விவேகத்துடன் தன் கர்மங்களை ஈஸ்வர அர்ப்பணமாகச்செய்யும் ப்ரம்ம ஞானியின் தன்மையும் கடவுளிடத்தில் லயித்த அவன் லயமாகும் விதமும் கூறப்படுகிறது.

கடைசியாக கிருஷ்ணபரமாத்மா அர்ஜுனனுக்குச் சொல்லும் புத்திமதி.—"உன் கர்ம பலனிலுள்ள இச்சையை விட்டு. நீ செய்யும் கர்மங்களையெல்லாம் எனக்கே அர்ப்பணம் செய்து என்னையே சரணமடைந்து என்னிடம் முழுநம்பிக்கையுடன் என் மேல் பாரத்தை வைத்து உன் கர்மத்தைச் செய். உனக்கு ஒரு விதப் பாபமும் ஏற்படாது. அதை எல்லாம் நான் ஏற்றுக் கொள்ளுகிறேன்."—

இதுவே கீதையின் ஸாரமாகும். நமக்குள் இருக்கும் நன்மைகளை எல்லாம் அப்பியாசத்தினாலும் முயற்சியினாலும் மேன்மேலும் விருத்தியாகி வளரச்செய்து, ஆசை கோபம் முதலியவற்றை அடக்கி, இந்திரியங்களை வசப்படுத்தி, உயர்ந்த மேன்மையான ஞானத்தை யடைந்து, அதனால் மனது பரிசுத்தமான அமைதியுடன் கடவுளிடத்தில் பூர்ணமான பக்தியும் நம்பிக்கையும் கொண்டு, நமக்கேற்பட்டுள்ள கர்மத்தை பற்றின்றி பலாபேக்ஷையின்றி நான் எனது என்னும் கர்வமின்றி ஈச்வர அர்ப்பணமாய்ச் செய்துகொண்டு, எல்லோரையும் சமமாகக் கருதி, பரோபகார சிந்தையுடன் இருப்பதற்கு நமது மனவுறுதியால் முயற்சி செய்து சிறிது சிறிதாய், படிப்படியாய் நன்மார்க்கத்தில் மேல் செல்லுவதற்கு எப்போதும் முயற்சி செய்துகொண்டேயிருக்கவேண்டும். தப்பிதம் செய்யும்போதெல்லாம் நம்மை நாமே திருத்திக்கொண்டு, நம்மை நாமே கண்டித்துக்கொண்டு மறுபடி தப்பிதம் செய்யாமலிருப்பதற்கு வேண்டிய ஆற்றலையும் முயற்சியையும் விருத்தி செய்துகொள்ள வேண்டும். இவ்விதமாய் மனிதன் நன்னெறியில் மேல் செல்லும்போது அவனது அறிவும் ஞானமும் பக்தியும் விருத்தியாகி மனதை கடவுளிடத்திலேயே ஒரு நிலைப்படுத்தி பரப்பிரம்மத்துடன் லயமாவதற்குப் பக்குவமாகிறான்.

## முக்கியமான சில பதவாக்கியங்களின் கருத்து.

கிருஷ்ணன்—1. க்ருஷ் - பூமி, ந - சுகம். அதாவது பூமியும் பரமும் சுகரூபமாயிருப்பவர்.

2. நீருண்ட மேகம்போல் கறுத்த மேனியை யுடையவர். அதாவது நீருண்ட மேகம் எப்படி மழையை வருஷித்து, பூமியைக்

குளிரச்செய்து, பயிர்களை யுண்டாக்கி, பசிப்பிணியைப் போக்குகிறதோ, அப்படியே பக்தர்களது அபீஷ்டங்களைக் கொடுத்து அவர்களது மனதை குளிரச் செய்பவர்.

3. தைத்தியர்களை சம்ஹரிப்பவர்.

4. பக்தர்களது சோகத்தை கிருஷிப்பவர் (நாசம் செய்பவர்).

மாதவ:—1. உபநிஷத்தில் 'மதுவித்தை' என்னும் பாகத்தால் துதிக்கப் பட்டவர்.

2. மா - லக்ஷ்மி, தவ - பதி = லக்ஷ்மியின் பதி.

3. மௌனம், தியானம், யோகம் இவைகளை யுடையவர்.

ஹ்ருஷீகேஶ:—1. ஹ்ருஷீக-இந்திரியங்களுக்கு, ஈஶ:-ஸாக்ஷியானவர். அதாவது க்ஷேத்ரஜ்ஞன்.

2. ஹ்ருஷி-சந்தோஷத்தை யுண்டுபண்ணுபவர் + கேஶ:-சசி சூர்யர்களது கிரணக்கத்தைகளால் (மயிர்போன்ற கிரணங்களால்) அதாவது சந்திர சூரியரூபமாயிருந்துகொண்டு அவற்றின் கிரணங்களால் பிராணிகளை மகிழ்விப்பவர்.

அச்யுத—1. நாசமற்றவர், தேசம், காலம், வஸ்து இவைகளில் விகாரமற்றவர்.

2. தன் நிலைமையிலிருந்து சலிக்காதவர்.

கேஶவ—1. அழகிய மயிர்களை யுடையவர்.

2. கேஶி என்னும் அஸுரனைக் கொன்றவர்.

3. க:-பிரம்மா<br>
அ:-விஷ்ணு<br>
ஈஶ:-ருத்திரன் } இம்மூவரையும்

வ:—ஸ்வாதீனத்தில் வைத்திருப்பவர் அல்லது இவர்களை சிருஷ்டியாதித் தொழிலில் ஏவுபவர்.

4. க்லேசத்தை நாசம் செய்பவர்-(கேஶவ: க்லேஶநாஶாய)

கோவிந்த—1. கோ - பூமியை + விந்த-அடைந்தவர். (வராக அவதாரம்).

2. காம் - வேதத்தை + விந்தி - அடைந்தவர்.

3. ம்ர - பசுக்களை + விந்ததி-அடைந்தவர். (பசு-ஜீவர்கள்)

மதுஸூதநன்—1. மது என்னும் அஸுரனைக் கொன்றவர்.

ஜநார்த்தநன்—1. துஷ்டநிக்கிரகம் செய்பவர்.

2. இக பர சௌக்கியத்தின்பொருட்டு ஜனங்களால் யாசிக்கப்படுபவர் அல்லது வேண்டப்படுபவர்.

3. அவரவர்கள் பாபத்துக்குத் தகுந்தபடி தண்டிப்பவர்.

4. ஜநம் - ஜனனம். ஜனனத்தையும் அதன் காரணமான அஜ்ஞானத்தையும் தன் அனுக்கிரகத்தினால் போக்கடிக்கிறவர்.

5. செல்லுதல் என்னும் கருத்தையுடைய 'அர்த்' என்னும் வினைப் பகுதியினடியாய்ப் பிறந்தது. அசுரர்களை நரகங்களில் செலுத்துவதால் ஜநார்த்தனன்.

வார்ஷ்ணேயர்—வசுதேவர் குலமாகிய விருஷ்ணி வம்சத்தில் பிறந்தவர்.

அரிஸூதநன்—1. அரி - பகைவர். பக்தர்களது காமக்குரோதாதி உட்பகைவர்களை ஜயித்துப் போக்கடிப்பவர்.

2. பகைவர்களை ஜயிப்பவர்.

கோபாலன்—கோ - பசு (ஜீவாத்மா). பக்தர்களை பரிபாலிப்பவர். (இதை கோ பாலன் என்று உச்சரிக்கக்கூடாது. பால் - மயிர். பசுவின் மயிர் என்று அர்த்தமாகும்).

கேசிநிஷூதநன்—கேசி என்னும் அஸுரனைக் கொன்றவர்.

பகவாந்—(பகவான்) 1. "பக" என்பது ஐசுவரியம், சக்தி, மற்று வேறு விதங்களான புஷ்டி, ஐசுவரியம், வீரியம், கீர்த்தி, ஸம்பத்து, வைராக்கியம், மோக்ஷஸாதனமான ஞானம் இந்த ஆறின் பெயர். இவை எக்காலத்திலும் குறைபாடின்றி அவரிடத்தில் இருப்பதால் அவர் பகவான் எனப்படுகிறார்.

2. பூதங்களின் உற்பத்திக் காரணம், பிரளயகாரணம், இனி வரப்போகும் ஸம்பத்து, விபத்து, வித்தை, அவித்தை இவைகளை நன்கு அறிந்தவர் பகவான்.

அர்ஜுனன்—1. வெளுத்த நிறத்தை யுடையவன்.

2. வெளிர்நிறம் - சத்துவகுணம். அதாவது சத்துவ குணம் மேலிட்டு கிருஷ்ண பரமாத்மாவின் உபதேசத்துக்குத் தகுதியானவன்.

பரந்தபன்-(பரா-எதிரிகள்) சத்துருவை தவிக்கச் செய்பவன்.

தனஞ்சயன்—1. தனத்தை மிகுதியாக சம்பாதிப்பவன்.

2. தனத்தில் அதாவது செல்வத்திலுள்ள ஆசையை ஜயித்தவன்.

குடாகேஶ:—1. குடாகாம் - நித்திரை + ஈஶ: ஆள்பவன் அதாவது நித்திரை அல்லது சோம்பலை வென்றவன்.

2. அடர்த்தியான மயிரையுடையவன்.

பார்த்தன்—ப்ருதா - குந்திதேவி, பிருதாவின் புதல்வன்- பார்த்தன்.

கௌந்தேயன்—குந்தியின் புத்திரன் கௌந்தேயன்.

ஸவ்யஸாசின்—இடது கையால் அம்பு எய்பவன்.

கிரீடி—கிரீடத்தை யுடையவன். (இந்திர சபையில் இந்திரனால் கிரீடமணிக்கப்பட்டவன்).

பரதஸத்தமன்—பரதகுலத்தில் மிகச் சிறந்தவன்.

ஸஞ்ஜயன்—ராகத்வேஷாதிகளை ஜயித்தவன்.

துர்யோதனன்—யுத்தத்தில் ஜயிக்கப்படமுடியாதவன்.

யுயுதானன் (ஸாத்யகி) ஆச்சர்யமாய் பிறர் பிரமிக்கும்படி யுத்தம் செய்பவன்.

விராடன்—யுத்தத்தில் மிகவும் பரிகாசம் செய்பவன்.

த்ருபதன்—விருக்ஷத்தைத் தன் கொடியிலுடையவன்.

பீஷ்மன்—பயங்கரமான(ப்ரம்மசர்ய) விரதத்தை யுடையவன்.

கர்ணன்—கர்ண குண்டலத்துடன் பிறந்தவன்.

க்ருபன்—கிருபையை யுடையவன்.

அஶ்வத்தாமன்—பிறந்தவுடன் குதிரைபோலிருந்தவன்.

த்ரோணன்—த்ரோணம் - கமண்டலம். அதிலிருந்து உண்டானவர்.

ஆததாயிந:—ஆததாயிகள் 6 விதம். வீட்டுக்கு நெருப்பு வைத்தவன், போஜனத்தில் விஷங்கலந்தவன், தன்னைக் கொல்ல வந்தவன், தன் பொருளை யபகரித்தவன், தன் மனைவியை யபகரித்தவன், தன் பூமியை யபகரித்தவன்.

ஆதித்யர் 12—தாதா, அர்யமா, மித்ர:, வருண:, இந்த்ர:, விவஸ்வாந், பூஷா, பர்ஜந்ய:, அம்ஶு:, பக:, த்வஷ்டா, விஷ்ணு:, ஒவ்வொரு மாதத்துக்கு ஒவ்வொரு சூரியன்.

மருத்துக்கள் 7—ஆவஹ:, ப்ரவஹ:, விவஹ:, பராவஹ:, உத்வஹ:, ஸம்வஹ:, பரிவஹ.

ருத்திரர் 11—அஜந், ஏகபாதந், அஹிர்புத்ந்யந், த்வஷ்டா, ருத்ரந், ஹரந், ஶம்பு, த்ரயம்பகந், அபராஜிதந், ஈஶாநந், த்ரிபுவநந் (சில இடங்களில் விரூபாக்ஷந், ஸுரேஶ்வரந், ஜயந்தந், பஹுரூபந், ஸாவித்ரந் என்னும் பெயர்கள் வந்து இங்குள்ள சில பெயர்கள் விடப்பட்டிருக்கும்.

ஐராவதம்—இராவதியின் குழந்தை ஐராவதம்.

கார்ப்பண்யம்—1. வேதாந்த விசாரமின்மை.

2. லோபம் அதாவது ராஜ்யத்தை யடைய வேண்டுமென்னும் ஆசை.

வ்யவஸாயபுத்தி—தீர்மான திடபுத்தி (will power).

த்வந்த்வம்—இருமை-இரட்டையாக வருபவைகள். உ-ம். இருள், வெளிச்சம், சுகதுக்கம், மோக்ஷபந்தங்கள், லாபநஷ்டம், ஜயாபஜயம், நன்மைதீமை, சீதோஷ்ணம் முதலானவை.

யோகக்ஷேமம்—யோகம்-நம்மிடம் வந்துசேராத இல்லாததை சம்பாதித்தல், க்ஷேமம்-அப்படி சம்பாதித்ததைக் காப்பாற்றுதல்.

த்ரைகுண்யம்—த்ரிகுணம் 3 குணம் ஸத்வகுணம், ரஜோ குணம் தமோ குணம் (இவற்றின் விவரம் குணத்ரய விபாகத்தில் காண்க).

அஹங்காரம்—அஹம் - நான். நான் நான் என்னும் தற்பெருமை, தற்புகழ்ச்சி முதலியன. என்னாலேயே எல்லாம் நடக்கிறது, தனக்கே எல்லாம் கிடைக்கிறது என்னும் எண்ணம்.

மமகாரம்—மம-எனது. தனக்கே எல்லாம் இருக்கிறது என்று எண்ணி அவற்றின் மீது பற்றும் ஆசையுமிருப்பது மமகாரம்.

இந்திரியம் 12.—ஞானேந்திரியம் 5. கண், செவி, மூக்கு, நாக்கு, மேல்தோல்; கர்மேந்திரியம் 5. வாய், கை, கால், பாயு, உபஸ்தம்; மனது, புத்தி—2.

ஸங்கரம்—கலப்பு (ஜாதிக்கலப்பு முதலியன).

ஶங்கரம்—ஶம் - சுபம். சுகத்தை யுண்டாக்குவது. அதை உண்டாக்குபவர் ஶங்கரர்.

ஞானம்—நூல்களைக் கற்பதால் ஏற்படும் அறிவு.

விஜ்ஞானம்—அனுபவத்தில் உண்டாகும் அறிவு.

அஜ்ஞானம்—ஞானம் இல்லாமை.

கர்மம்—தொழில் செய்தல்.

அகர்மம்—தொழில் ஒன்றும் செய்யாதிருத்தல்.

விகர்மம்—'செய்யக் கூடாது' என்று விலக்கப்பட்டுள்ள கர்மங்களைச் செய்தல்.

கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் பார்த்தல்.

1. கர்மத்தில் அகர்மத்தைப் பார்த்தல்—ரயிலில் போகும் போது இருபக்கலுமுள்ள மரங்கள் ஓடுவதுபோலிருக்கிறது. ரயில் நிற்பதுபோலிருக்கிறது. ஓடும் தொழில் அல்லது கர்மம் ரயிலினுடையது. தேகாதிகள் செய்யும் கர்மத்தை ஒன்றுமே கர்மமே செய்யாமலிருக்கும் ஆத்மா செய்வதாக (நான் செய்கிறேன் என்று) எண்ணுவது தவறு. தேகாதிகள் செய்யும் கர்மத்தில் ஆத்மாவின் அகர்மத்தைப் பார்ப்பதே விவேகம்.

2. அகர்மத்தில் கர்மத்தைப் பார்த்தல்— தேகம், மனம், இந்திரியம் என்பவைகளின் தொழில் ஓய்ந்திருக்கும்போது அவற்றின் அகர்மத்தை "நான் ஒன்றும் செய்யாமல் மௌனமாய் இருக்கிறேன்" என்று அகங்காரத்தினால் ஆத்மாவினிடத்தில் ஆத்மாவின் செய்கைபோல எவன் ஏற்றுகிறானோ, அவன் ஆத்மாவின் செய்கை யல்லாத ஒரு விஷயத்தில் ஆத்மாவின் செய்கைபோல் ஒன்றை எண்ணுகிறான்.

ஆர்த:—துஷ்டர்கள், துஷ்ட மிருகங்கள், வியாதிகள் இவற்றி னால் துன்ப மடைபவன்.

ஜிஜ்ஞாஸு:—கடவுளை யறிய ஆவலுள்ளவன்.

அர்த்தார்த்தி—பொருளை யடைந்து செல்வவா னாயிருக்க அபே க்ஷிப்பவன்.

அதிபூதம்—பஞ்சபூதங்களும், தனிப்பொருள்களும் (Elements) அவற்றின் பல கலப்புப் பொருட்களும் (Compounds). இவை அழிந்து போகக் கூடியவை.

அதிதைவம்—ஈச்வரனது அம்சமாய் உலகிலுள்ள ஒவ்வொரு வஸ்துவிலுமுள்ள ஜீவாத்மா.

அதியஜ்ஞம்—எங்கும் வியாபித்துள்ள பரமாத்மாவாகிய ஈச்வரன்.

ப்ரஹ்மம்—குணாதீதமான (நிர்குணம்) அவ்யக்தமான (காணமுடியாத) பரப்ரம்மம்.

ஸத், சித், ஆநந்தம்—ஸத்- உயர்ந்த இருப்பு (Highest Existence). அதாவது எல்லாம் அழிந்துபோன பிறகு மீதியாக, சேஷமாக இருக்கும் பரம்பொருள். சேஷி (எப்போதும் அழியாமல் ஆதியந்த மில்லாமல் நிலையாயிருப்பது சேஷசாயி என்பதன் பொதுக்கருத்து மிதுவே). ஒரு பெரியமலை, அது தன் ரூபத்தை யிழந்து பெருங்கற்களாகி பிறகு சிறு சிறு கற்களாகிப் பிறகு பொடியாகித் தூளாகிப் புழுதியாகிக் கண்ணுக்குப் புலப்படாமற் போனபோதிலும் அதில் அழியாமல், மணி சரத்தின் னூல் போல் இருக்கும் ஈச்வர அம்சமாய் ஒரு ஸத்துப் பொருளி ருக்கிறது. "ஸயன்ஸ்" பிரகாரம் உலகிலுள்ள வஸ்துக்கள் அல்லது பதார்த்தங்கள் (Matters) வேறு வேறு உருவங்களாக மாறிக் கொண்டிருந்தபோதிலும் அவற்றின் எடை, பண்டம் இவைகளின் மொத்தம் (Sum total energy and matter) மாறுபடுவ தில்லை. அதாவது அவற்றிலுள்ள ஸத்துப் பதார்த்தம் குறைவது மில்லை அதிகமாவது மில்லை. அழியாத்தன்மையதான இச்சத் துப் பொருளின் மொத்தமே கடவுளின் அம்சமான ஸத்.

சித்-உயர்ந்த அறிவு (Highest knowledge). பகுத்தறியும் சக்தி வாய்ந்த அறிவு. நன்மை தீமை, புண்ணிய பாபம், உள்ளது இல்லாதது முதலான இருமைகளைப் பகுத்து அறிந்து, அதனால் சிறந்த தெய்வீகமான ஞானத்தையும் விவேகத்தையும் அடைந்து, லாபா லாப சுக துக்காதிகளால் மயக்க மடையாமல், தத் ஏகத்தியானமாய் (தத் = அக்கடவுள் + ஏகம் = ஒன்று + த்யானம் = எண்ணம்) அதாவது கடவுளைப் பற்றிய ஒரே தியான மன்றி வேறு எண்ணமொன்று மில்லாமல், கடவுள் ஒருவரே, ஜகத்தெல்லாம் அவர் மயமே, அவரே அந்தர்யாமியாய் சர்வத்திலும் வியாபித்துள்ளார், அன்பு மயமானவர், சச்சிதானந்த (சத் சித் ஆனந்த) ரூபி என்னும் உண்மைகளை யுணர்ந்து இருப்பது சித்.

ஆநந்தம்—உயர்ந்த அறிவு அல்லது சித்தினால் மனதுக்கு ஏற்படும் உயர்ந்த பேரின்பம் (Highest bliss). உலக விஷய சுகங்களால் ஏற்படும் சிற்றின்பம் (சிறு இன்பம்) அல்ல.

அக்ஷரம்—1. ஸம்ஸ்க்ருத பாஷையில் முதல் எழுத்து அ, கடைசி எழுத்து க்ஷ. அ முதல் க்ஷ வரைக்கும் உள்ள எழுத்துக்கள் அக்ஷரம்.

2. க்ஷரம் - அழிவு. அக்ஷரம் - அழிவில்லாதது. அதாவது அக்ஷரம் என்றால் ஸத்துப் பொருளாகிய பரப்ரம்மம்.

அஶ்வத்தம்—நிலையில்லாதது. அடுத்த நிமிஷம் இருக்காதது (அ = அல்ல + ஶ்வ: = நாளைக்கு + ஸ்தம் = இருக்கிறது). நாளைக்கு இருக்கிறது அல்ல. வருஷத்தில் ஒரு முறை அரச மரப் பிரதக்ஷிணம் செய்வது, சம்சார விருக்ஷம் ஸ்திரமானதல்ல' மரத்தைச் சுற்றிச் சுற்றி வருவதுபோல் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி சக்கரமும் திரும்பித் திரும்பி வந்து கடைசியில் ஒன்று மில்லாமற் போவது, ஆதலின் அழிவுள்ள, ஸ்திரமற்ற ஸம்ஸாரத்திலேயே உழன்றுகொண்டிராமல், இதனின்றும் விடுபட்டு முக்தி யடைவதற்கு வேண்டிய ஸாதனமாகிய ஈஶ்வர பக்தி வேண்டும் என்பதை ஞாபகப்படுத்தும் பொருட்டு, "இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்று எண்ணவோ இடமில்லையே"

என்றார் தாயுமானவர். "நின்றான் இருந்தான் கிடந்தான் தன் கேள் அலறச் சென்றான்" என்னும் நாலடி வாக்கியத்துக் கேற்ப புல் நுனி மேல் நீர் போன்ற, நீர் மேல் குமிழி போன்ற நிலையில்லாத இவ்வாழ்க்கை அநித்தம்.

துன்பங்கள் 3 விதம்.

ஆதியாத்மிகம்—தன்னைப் பற்றிவரும் துன்பம். தலைவலி, ஜ்வரம்.

ஆதிபௌதிகம்—பிற உயிர்களைப் பற்றிவருவது. தேள் பாம்பு முதலியவற்றால்.

ஆதிதைவிகம்—தெய்வத்தைப்பற்றி வருவது. இடி, மழையின்மை இவற்றால்.

யோகம்—வழி, உபாயம், மார்க்கம், ஸாதனம்.

யோகி—கடவுளை யடையும் மார்க்கத்தை அல்லது உபாயத்தை யறிந்தவன்.

நிஷ்டை—உறுதியாக நிற்பது.

ஸாங்க்யம்—விசாரம், மெய்ப்பொருள் ஆராய்ச்சி, ஸாதன சதுஷ்டயத்துடன் சிரவண மனனாதிகளால் உண்மையை விசாரித்தல் அல்லது ஆராய்தல்.

கர்மயோகம, கர்ம நிஷ்டை-பலனில் இச்சையின்றி பற்றற்று ஈசுவரார்ப்பணமாய் தொழில் செய்வது.

தியான யோகம்–தியான நிஷ்டை; சித்த விருத்தியை யடக்கி கடவுளிடத்திலேயே மனதை நிலைநிறுத்தி தியானிப்பது.

ஞானயோகம்—ஞானநிஷ்டை. உயர்ந்த ஞானத்தை, ஜீவாத்ம பரமாத்ம ஞானத்தை அடைவதற்கு முயற்சி.

புத்தியோகம்—விவேகம் (பகுத்தறிவு), விஜ்ஞானம் (உண்மை உணர்ச்சி) மனதிலேயே கடவுளை உணர்வது இவைகள் புத்தியோகம்.

பக்தியோகம்—கடவுளை யறிதல்வேண்டும் என்னும் அநுராகம், அதற்கு வேண்டிய சிரத்தை, அதற்கு அனுகூலமான

மனோதைரியம் இவைகளை விருத்திசெய்து கடவுளது பக்தியில் ஈடுபடுவது.

ராஜயோகம்.—மனது, புத்தி, அந்தக்கரணம் இவற்றின் தன்மைகளை ஆராய்ந்து அறிந்து அவைகளை நேரியான பக்தியான மார்க்கத்தில் பழக்குதல்.

தர்மயோகம்.—பிறருக்கு ஸேவைசெய்வது, பிரதி உபகாரம் கருதாது தானம் செய்வது, தன்சுகத்தைக் கருதாமல் பரோபகாரம் செய்வது, தன் மனது இந்திரியங்களைக் கட்டுப்படுத்துவதற்கு வேண்டிய தபசைச் செய்தல் முதலான தர்மமார்க்கத்தில் செல்லும் அப்பியாசம்.

ஸந்யாஸம்.—1. விடுதல்; கர்மங்களையே விட்டுவிடுதல்.

2. கர்மபலன்களை விட்டு ஸத்கர்மங்களை மாத்திரம் கைக்கொள்ளுதல்.

3. விவிதிஷா ஸந்நியாஸம்—மெய்யறிவை யடையும்பொருட்டு ஸாங்கிய யோகத்துக்குச் சாதனமாய் மேற்கொள்ளும் துறவு.

4. வித்வத் ஸந்நியாசம்—ஜீவன்முக்தி சுகத்தை அடைதல் நிமித்தம் ஒரு ஞானி அடையும் துறவு.

அவா.—இன்னும் அடையாத பொருட்களின்மேல் ஆசை.

பற்று.—அடைந்த பொருட்களின் மேலுள்ள அபிமானம்.

அஸூயை—குணமுள்ளவற்றின் நலத்தைப் பொறுது அதனிடத்தில் ஏதாவது ஒருவிதத்தில் குற்றத்தைச் கூறுவது.

கர்மம் 4.—நித்யகர்மம்: அன்றன்று செய்யவேண்டிய கர்மம், 2. நைமித்திக கர்மம்: யாதாயினும் ஒரு நிமித்தத்தால் செய்வது: கிரகணகாலத்தில் ஸ்நானம் செய்தல் முதலியன, 3. காம்யம்: பலனை உத்தேசித்துச்செய்யும் கர்மம், 4. பிரதிஷித்தம்: விலக்கப்பட்ட கர்மம்.

ப்ரம்மவித்தை—ப்ரம்ம ஞானம், ஸம்யக்தர்ஶநம், ஸம்யக் ஞானம், ப்ரஹ்மாத்மைக்ய ஸாக்ஷாத்காரம், பரமார்த்த ஞானம், பரமார்த்த தர்ஶநம் இவையெல்லாம் ஒரு பொருட்பன்மொழி,

பரமாத்மாவும் நம்முள்ளிருக்கும் ஜீவாத்மாவும் ஒன்றே என்பதை அனுபவத்தால் காண்பது.

1. தத் த்வம் அஸி—த்வம்-நீ, தத்-அதாகவே (பரப்ரம்மமாகவே), அஸி-இருக்கிறாய்.

2. அஹம் ப்ரம்மா அஸ்மி.—அஹம்—நான், ப்ரம்மா—பரப்ரம்மமாகவே, அஸி-இருக்கிறேன்.

3. ப்ரஜ்ஞாநம் ப்ரம்மம்.—அறிவே ப்ரம்மம்.

4. ஏகமேவாத்விதீயம்.—ஏகம் ஏவ - ஒன்றேயன்றி (பரமாத்மா ஒருவர்மாத்திரமே உண்மைப்பொருள் அல்லது ஸத்துப்பொருள்), அத்விதீயம்—இரண்டாவது வஸ்து கிடையாது (மற்றவையெல்லாம் மித்தை, அழிந்துபோகக்கூடியது. இந்நான்கு வாக்கியங்களும் உபநிஷத்துக்களில் ப்ரம்மவித்தைக்கு மூல வாக்கியங்கள்.

தர்க்கம் செய்பவர் 3 விதமாய் தர்க்கிப்பர்:—

வாதம்-வாதி பிரதிவாதி இருவரும் விருப்பு வெறுப்பின்றி உண்மையை நிர்ணயிக்கவேண்டும் என்னும் ஒரே எண்ணத்துடன் பிரமாணங்களுடன் பேசுவது.

ஜல்பம்—தாம்தாமே வெற்றிபெறவெண்டும் என்னும் விருப்பத்துடன் பிறர் கொள்கையை மறுத்து, தம் கொள்கையை நிலைநிறுத்த முயலுவது.

விதண்டை—தாமே வெற்றிபெறவேண்டுமென்னும் இச்சையுடன் தன் கொள்கையை நிலைநிறுத்தாமல் பிறர் கொள்கையை பிரமாணங்களாலும் போலியுத்தரம் முதலியவற்றால் மறுத்தல்.

# அத்தியாயங்களின் சுருக்கம்.

## அத்தியாயம் 1.

### அர்ஜுன விஷாத யோகம்.

அர்ஜுனனது சோகத்தைக்கூறும் அத்தியாயம். கீதை பகவானால் அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்டது. ஞானக்கண் கொடுக்கப்பட்ட ஸஞ்சயன் ஊனக்கண் குறைந்த திருதராஷ்டிர

மன்னனுக்கு யுத்தகளத்தில் நடந்த விஷயங்களை அவ்வப்பொழுது சொல்லிக்கொண்டு வரும்போது ஆரம்பத்தில் உபதேசிக்கப்பட்ட கீதையையும் அவ்வரசனுக்கு கண்ணன் பார்த்தனுக்குச் சொன்ன விதமாய் சொல்லுகிறான்.

புத்திரவாத்ஸல்யத்தால் கவலையுற்ற திருதராஷ்டிரன் யுத்தகளத்தில் போர்புரிய ஏற்பட்ட சேனைகளைப்பற்றிக் கேட்க அதற்கு ஸஞ்ஜயன் சொல்ல ஆரம்பித்தான்: துர்யோதனன் தன் குருவை ஸமீபித்து இருசேனையிலுமுள்ள சிறந்த போர் வீரர்களைக் குறிப்பிட்டு, தனது சேனாதிபதியான பீஷ்மரை யாவரும் கவனமாய்க் காக்கும்படி கட்டளையிட்டான். பிறகு பீஷ்மர் முதலான எல்லா வீரர்களும் தங்கள் தங்கள் சங்கங்களை நாதம் செய்கின்றனர். அப்போது அர்ஜுனன் தன் தேரை இரு சேனைக்கு மிடையில் நிறுத்தச்செய்து எல்லையின்றி வியாபித்துள்ள சேனாஸமுத்திரத்தையும், தன் நெருங்கிய பந்து மித்திர வர்க்கத்தினரையும் பார்த்து உடனே ஒரு ராஜ்யத்தின் பொருட்டு இத்தனைபேரையும் கொன்று தாங்கள் அடையப் போகும் லாபமும் சுகமும் சந்தோஷமும் யாது என்பதை எண்ண, அவனுக்கு ராஜ்யத்தில் ஒரு வெறுப்பும், பந்துக்கள் முதலானவர்களைக் கொல்லுவது கூடாது என்னும் எண்ணமும் உண்டாகி அதனால் சோகத்தையும் மோகத்தையும் அடைந்து கிருஷ்ணபகவானைப்பார்த்து குலநாசத்தையும் மித்திரத்துரோகத்தையும் செய்வது கூடாது என்றும் அதனால் பாபமேற்படுமென்றும் விவரித்து, யுத்தஞ் செய்யவும் வேண்டாம், ராஜ்ய சுகமும் தங்களுக்கு வேண்டியதில்லை யென்று சொல்லி மிகுந்த மனக்கிலேசத்துடன் செய்வதறியாமல் சோர்ந்துபோய் உட்காருகிறான்.

## அத்தியாயம் 2.

### ஸாங்க்ய யோகம்.

1-3. கிருஷ்ணன்—அர்ஜுனா! இந்த மனச்சோர்வு இவ்வ காலத்தில் உனக்கு எப்படி யுண்டாயிற்று?

4-10. அர்ஜுனன்—பூஜிக்கத்தகுந்த பீஷ்ம துரோணாதி யரை எப்படிக் கொல்வேன்! அதைவிட பிச்சையெடுத்துண்ண லாம். மேலும் இந்த யுத்தத்தின் முடிவு எப்படியோ! பந்துக் களை யெல்லாம் கொன்று உயிர்வாழ விருப்பமில்லை. நான் செய்யவேண்டியது என்ன என்பது தெரியவில்லை, இப்பொழுது ஏற்பட்டுள்ள வியஸனம் எப்படித்தீரும் கிருஷ்ணா, எது உத்த மமோ அந்த புத்திமதியை எனக்குக் கூறுவாயாக.

11-38. கிருஷ்ணன்—சோகிக்கவேண்டாதவர்களைக் குறித்து சோகிக்கின்றாய் ஆயினும் சிறந்த ஞானியைப்போல் பேசுகிறாய். உண்மையான ஞானிகள் இறந்தவர்களைக் குறித்தும் இருப்பவர் களைக் குறித்தும் வருந்தார். ஏனெனில் "நாம்" என்று சொல்லப்படும் நமது ஆத்மா ஒருபோதும் இறப்பதுமில்லை பிறப்பதுமில்லை. இந்த ஸ்தூலதேகம் எப்படி பால்யம், யௌ வநம், கௌமாரம் என்பதை யடைகிறதோ அப்படியே இந்த தேகத்தை யடைந்துள்ள ஆத்மா மறுதேகத்தை யடைகிறது. மரணம் என்பது ஒரு நிலைமையிலிருந்து மற்றொரு நிலைமைக் குப் போவதேயன்றி ஒன்றுமே யில்லாமல் போவதல்ல. இந் திரியங்களுக்கும் வெளிவிஷயங்களுக்குமுள்ள சம்பந்தத்தினால் சீதம், உஷ்ணம், சுகம், துக்கம் எல்லாம் ஏற்படுகிறது. இவை யெல்லாம் நீடித்ததல்ல. இவைகள் அஸத்துக்கள், ஸத்தான ஆத்மாவே உண்மை வஸ்து, நீடித்தது, அதுவே பரப்ரம்மம், அது நித்தியமானது, நாசமற்றது, அத்தாக்ஷிக்க முடியாதது. இந்த ஆத்மா குடிபுகுந்துள்ள தேகங்கள் முடிவை யுடையன. ஆதலால் இந்த ஆத்மாவைக்கொல்லுவதாயும் கொல்லப்படுவதா யும் எண்ணுபவன் உண்மையை யறியவில்லை. கந்தல் வஸ்தி ரத்தைக் களைந்தெறிந்து புதிய வஸ்திரத்தை உடுத்திக்கொள்ளு வதுபோல் கிழப்பட்டு உபயோகமற்றுப்போன தேகத்தை விட்டு ஆத்மாவானது மற்றொரு புதிய தேகத்தை எடுத்துக் கொள்ளுகிறது. இந்த ஆத்மாவை ஆயுதங்கள் வெட்டாது, நெருப்பு எரிக்காது, ஜலம் நனைக்காது, வாயு உலர்த்தாது, இவ் வாத்மா காணவும் சிந்திக்கவும் முடியாதது, விகாரமற்றது ஆத லின் இதைக்குறித்து நீ துக்கித்தல் வேண்டாம்.

ஆத்மா பிறப்பிறப்பு உள்ளதாக நீ நினைத்தாலுங்கூட துக்கித்தல் வேண்டியதில்லையே. ஏனெனில் பிறந்தவன் இறத்தல் திண்ணம், இறந்தவன் பிறத்தல் திண்ணம்; நாம் இப்போது காணப்படும் நிலைமையிலிருக்கிறோம், பிறப்புக்கு முன்பும் இறந்த பின்பும் நாம் அவ்யக்தமாய் (காணமுடியாதவர்களாய்) இருக்கிறோம். இது ஆச்சர்யமல்லவா? எங்கிருந்து வருகிறோம் எங்கு போகிறோம் இதைப்பற்றி ஒவ்வொருவனும் ஆச்சர்யத்துடன் ஆராய்ந்து கேட்டும் பார்த்தும் சொல்லியும் முடிவில் ஒருவராவது ஆத்மாவைப்பற்றின உண்மையை அறிந்தவரில்லை. ஆயின் ஒன்று நிச்சயம்; இந்த தேகம் கொல்லப்படும்போது ஆத்மா கொல்லப்படவில்லை, ஆதலின் "இந்தப் பெரியோர் முதலானவர்களைக் கொல்லவேண்டுமே" என்று வருந்த வேண்டாம்.

மேலும், உன் ஸ்வதர்மம் யாது? ஒரு உத்தம க்ஷத்திரியனுக்கு எதிர்பாராமல் நேரும் வீரஸ்வர்க்கத்துக்கு ஸாதனமான தர்மயுத்தத்தைவிட சிறந்தது வேறு என்ன இருக்கிறது? நீ பின்னடைந்தால் பயத்தால் பின்வாங்கினதாக உனக்குச் சமதையான வீரர்களும் பகைவர்களும் உன்னைப்பற்றி இழிவாகப் பேசுவார்களே. அப்படி உன் கீர்த்தியை இழப்பதைவிட மரணம் மேலானதல்லவா? அர்ஜுனா! என்ன ப்ரமாதம்! இறந்தால் வீரஸ்வர்க்கம்; இருந்தால் ராஜ்ய லாபம், ஆதலால் மனதைத் திடப்படுத்திக்கொண்டு யுத்தஞ்செய்ய எழுந்திரு. லாபாலாபம், ஜயாபஜயம் எது வந்தாலும் அவற்றை ஸமமாகக் கருதி யுத்தம் செய்தாயானால் பந்துக்களைக் கொல்லும் பாபம் உன்னையடையாது.

39-71. இதுவரை ஆத்மாவைப்பற்றிய உண்மை (ஸாங்கிய தத்வம்) யை உனக்குச் சொன்னேன். இனி கர்மயோகத்தைப் பற்றிக் கூறுகிறேன். இந்தக் கர்மயோகமார்க்கத்தில் பிரவேசிப்பவாகளது முயற்சி வீணாகாது. உலகவிஷயங்களில் பற்றுடன் பலாபேக்ஷையுடன் காம்ய கர்மங்களைச் செய்துகொண்டு, போக ஐஸ்வர்யங்களில் மயங்கி யிருப்பவர்களுக்கு ஸாங்கிய விஷயமும் யோக விஷயமும் உபயோகமில்லை. அவர்களுக்கு உண்மை

விஷயங்களை உறுதியாகப் பின் பற்றும் நிச்சயபுத்தி கிடையாது. ஆனால் நீ முக்குணங்களின் வசப்படாமல் சுகதுக்க லாபநஷ்டங்களைச் சமமாகக் கருதி ஆத்மஞானத்தையடைய முயற்சி செய்ய வேண்டும். அந்த மேலான ஆத்ம ஞானத்தை யடைந்துவிட்டால் வேதம் முதலான சிறிய நூல்களில் உள்ள விஷயங்களெல்லாம் அதில் அடங்கியதே. பிறகு அவற்றைக்கற்று அறிய வேண்டியது ஒன்றுமில்லை. கர்மம் செய், அவற்றின் பலனில் ஆசை வேண்டா. கர்மஞ் செய்யாமலிருக்கவும் கூடாது. பலாபலனைச் சமமாகக்கருதி கர்மஞ்செய். பலனை யிச்சித்துத் தொழில் செய்வது மிகவும் இழிவு. கர்மபலனைச் சமமாகக்கருதி கர்மம் செய்பவன் பிறவித்துன்பத்திலிருந்து நீங்கி முக்தியடைகிறான். ஆதலால் ஹே அர்ஜுனா! ஸாங்கியபுத்தி, கர்மயோகம் இவ்விரண்டினாலும் உன் அவிவேகம் நீங்கி மன அமைதி உண்டாகி ஈஸ்வரனிடத்தில் உன்புத்தி ஸ்திரமாய் நிற்கும்போது நீ ஞானமார்க்கத்தில் சென்று ஞான யோகியாவாய்.

அர்ஜுனன்—அவ்வுயர்ந்த உத்கமமான ஞான நிலையை யடைந்தவன் குணம் யாது? எப்படி பேசுவான்? இருப்பான்? நடப்பான்?.

கிருஷ்ணன்—ஞானியின் தன்மை. உலக விஷயம் எதிலும் பற்றின்றி, விருப்பம், பயம், கோபம் இவைகளை விட்டு, சுகதுக்கங்களைச் சமமாகக் கருதி பஞ்சேந்திரியங்களையும் வெளி விஷயங்களில் செல்லவிடாமல் அடக்கி (ஆமையைப்போல்), மனதினுங்கூட இச்சையின்றி பகவத் தியானம் செய்துகொண்டிருப்பவனே நிலைத்த ஞானி. விஷயங்களைச் சிந்தித்துக்கொண்டே யிருந்தால் அவற்றில் பற்றும், அதிலிருந்து ஆசையும், அது கிடைக்காவிட்டால் கோபமும், அதிலிருந்து மோகமும், அதனால் நினைவின்மையும், பிறகு புத்திக்கேடும் உண்டாகி, மனிதன் கெட்டுப் போகிறான். ஆதலால் விஷயங்களைச் சிந்திப்பதற்கு இடங்கொடாமல் மனதை வசப்படுத்தி, அமைதி யுண்டாக்கி அதை ஒரு நிலைப்படுத்த வேண்டும். அப்போது ஆத்மத்தியானம் உண்டாகிறது. மனது ஸ்திரப்பட்டவன் உலகத்தவர் உண்மையாக (பகல்) க் கருதும் அஸத்துக்களை உண்மையில் நிலையற்றதாயும் (இரவு) அவர்களுக்கு விளங்காமல் இருளாயிருக்

கும் உண்மைப்பொருளை (ஈஸ்வரனை) ஞானமாகிய பிரகாசத்தி னல் அறிந்தவனாயு மிருக்கிறான். சமுத்திரத்தை நதிகள் சென்ற டைந்தும் அந்த சமுத்திரம் நிலை மாறாமலிருப்பதுபோல் ஆசை முதலியவை ஞானியினது ஞான ஸமுத்திரத்தை யடைந்து அதில் அடங்கிவிடுகிறது. ப்ரம்ம ஞானியானவன் அகங்கார மமகாரமற்று ஆசையின்றி ப்ரம்மஞான நிஷ்டையிலேயே யிருந்து இறந்தபிறகு ப்ரம்மத்துடன் லயமாகி விடுகிறான்.

## அத்தியாயம் 3.

### கர்ம யோகம்.

1-2. அர்ஜுனன்—நிஷ்காம கர்மத்தைவிட ஞானம்மேலா னது என்றால், ஜீவஹிம்ஸைக்குக் காரணமான கர்மத்தை நான் செய்யும்படி ஏன் என்னை அனுமதிக்கின்றீர்கள்? இரண்டுவிதம் சொல்லி என் புத்தியைக் கலக்கிவிட்டீர்கள். எதனால் மேன் மையை யடைவேனோ அதைமாத்திரம் சொல்லவேண்டும்.

3 35. கிருஷ்ணன்—பிறக்கும்போதே பரிபக்குவமடைந்து ஞானத்தை உடனே யடையத்தகுதியுள்ள ஸாங்கியர்களுக்கு (உண்மையை யறியும் சக்திவாய்ந்தவர்கள்) ஞானயோகமும், உலக விஷயங்களில் சிறிதளவு பற்றுள்ளவர்களுக்கு கர்மயோக மும் என்னால் விதிக்கப்பட்டது. பலஜன்மங்களில் முதற் படி களில் கர்மங்களைச்செய்து பிறகே கர்மமே செய்யாமலிருக்கும் நிலையை யடையவேண்டும். ஞானமில்லாமல் கர்மத்தை மாத்தி ரம் விட்டுவிடுவதால் ஒருவன் மோக்ஷமடையமாட்டான். மேலும் உலகத்தில் பிறந்த ஒவ்வொரு பிராணியும் முக்குணங் களின் வசப்பட்டிருப்பதால் கருமமே செய்யாமல் ஒருபோதும் இருக்கமுடியாது. தொழில் செய்யும் இந்திரியங்களைமாத்திரம் அடக்கி மனதினால் விஷய சுகங்களை நினைத்துக்கொண்டேயிருக் கும் அஜ்ஞானி அடையும் லாபம் ஒன்றுமில்லை. அதைவிட பலா பேக்ஷையின்றி கேவலம் இந்திரியங்களினால் கர்மம் செய்து கொண்டு மனதை யடக்குபவன் மேலாவான். உன் நித்திய கர்மத் தைச்செய். தேகபோஷணைக்காக கர்மம் செய்யத்தான் வேண் டும். மேலும் கர்மம் ஒன்றுமே செய்யாமலிருப்பதைவிட

(சத்) கர்மம் செய்வது மேல். ஆனால் எப்படிப்பட்ட கர்மம் செய்யவேண்டும்? யஜ்ஞார்த்தமான கர்மம், அதாவது உன்னை பிறருக்கும் கடவுளுக்கும் அர்ப்பணம் செய்யும் கர்மம், பலாபேக்ஷையற்ற கர்மம், தேவர்களை ஆராதித்து அதனால் உலகத்துக்கெல்லாம் க்ஷேமத்தை யுண்டாக்கும் கர்மம். அப்படிப்பட்ட உத்கிருஷ்டமான பரோபகார நிமித்தமான கர்மத்தை, பெரியோர்களால், கடவுட் தன்மையுடன்கூடின ரிஷிகளால், வேதங்களின்மூலமாய் சொல்லப்பட்ட கர்மத்தை, நான்தான் என்னும் அகங்கார புத்தியுடன் தன் சுகத்துக்காகவும், தன்லாபத்துக்காகவு மின்றி பிறர் சௌக்கியத்திற்காகவும், இதர பிராணிகள் சர்வகோடிகளின் க்ஷேமார்த்தமாக வேண்டிய கர்மத்தைச் செய்வது தான் யஜ்ஞார்த்தமான கர்மம். அப்படிப்பட்ட கர்மத்தை செய்தால் "நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்பதுபோல், யஜ்ஞார்த்தமான கர்மத்தையே செய்யும் கடவுட் தன்மை வாய்ந்த ஞானிகள் செய்யும் கர்மத்தினால் திருப்தியடைந்த தேவதைகள் (வாயு, இந்திரன், வருணன், சூரியன் முதலானவர்கள் மழையை சரியானபடி வர்ஷிக்கச் செய்கின்றனர். இதனால் நெல் முதலான பயிர்கள் (தாவரவர்க்கம்) உலகத்தில் சுபிக்ஷமாக வளர்ந்து அதனால் பிராணிகள் எல்லாம் உண்டாகின்றன. ஆதலால் இந்த பிரவிருத்தி சக்கரத்தை யனுஸரித்தே நடக்கவேண்டும். உத்தமமான ஞானிக்கு கர்மம் வேண்டியதில்லை. ஆனால் நீ பலாபேக்ஷையின்றி உன் ஸ்வதர்மமாகிய கர்மத்தைச் செய். ஜனகர் முதலானவர்களைப்போல் பொது ஜன நன்மையைக்கருதி நிஷ்காம கர்மம் செய். ஏனெனில் முக்கியமான தலைவர்களையே பொது ஜனங்கள் பின்பற்றுவார்கள். நான் கர்மம் செய்யவேண்டியதில்லை. ஆயினும் அப்படி நானிருந்தால் ஜனங்கள் என்னைப் பின்பற்றி என்னை ஒரு உதாரணமாக மதித்து அவர்களும் கர்மம் செய்யாமலிருந்துவிடுவார்கள். ஜனங்களின் பொதுநன்மையின் பொருட்டுநான் கர்மம் செய்கிறேன். ஆதலின் ஞானியானவன் பற்றின்றி பலாபேக்ஷையின்றி உலக நன்மைக்காக தொழில்செய்து ஜனங்களையும் அவரவர்களது தொழிலை செய்விக்கவேண்டும்.

நீயும் உன் கர்மங்களை என்னிடத்தில் அர்ப்பித்து யுத்தஞ்செய். இப்படிச் செய்பவர்கள் கர்மத்திலிருந்து விடுபடுகிறார்கள்.

அவனவன் பூர்வ கர்ம பரிபவத்துக்குத் தகுந்தபடி கர்மங்கள் ஏற்படுகின்றன. அவனவனுக்கு ஏற்பட்ட ஸ்வதர்மத்தைச் செவ்வையாய் செய்ய முயலவேண்டும். அதில் குறைவு ஏற்பட்டாலும் பயமில்லை, அது சிறந்ததல்லாவிட்டாலும் அதையே செய்யவேண்டும். சிறந்தது என்று தன் அறிவுக்கெட்டாத தொழிலைச் செய்ய ஆரம்பிக்கக்கூடாது.

36. அர்ஜுனன்—யாருமே பாபம் செய்ய இஷ்டப்படார். அப்படி யிருந்தும் பலவந்தமாய் ஏவப்பட்டவனைப்போல் பாபம் செய்யும்படி தூண்டுவது எது?

37. கிருஷ்ணன்—வெளி விஷயங்களின் மேலுள்ள ஆசை அல்லது காமம், அவைகள் கிடைக்கப் பெறாமையாலுண்டாகும் கோபம், இவ்விரண்டும் ரஜோகுணத்திலிருந்துண்டாகி எத்தனை கிடைத்தாலும் மனிதனை திருப்தி யடையச்செய்யாமல் பாபம் செய்யும்படி தூண்டும் வைரிகள். புகை நெருப்பையும், அழுக்கு கண்ணாடியையும் கருப்பை கர்பத்தையும் மூடிக்கொண்டிருப்பது போல், திருப்தியற்ற ஆசாரூபமான இந்த காமத்தால் நமது ஞானம் மூடப்பட்டு இருக்கிறது. இவ்வாசைக்கு இருப்பிடம் இந்திரியம், மனது, புத்தி; ஆதலால் இவற்றையெல்லாம் அடக்கி காமத்தை வென்று இவற்றுக்கெல்லாம் மேலான பரம்பொருளை அடைவாயாக.

## அத்தியாயம் 4.

### ஞான யோகம்.

1-3. கிருஷ்ணன்—இந்தயோகம் சூரியனுக்கு ஆதியில் நான் உபதேசித்து பரம்பரையாக வந்து அநேககாலமானதால் அழிந்துபோயிற்று. அதை இப்போது உனக்குச் சொன்னேன்.

4. அர்ஜுனன்—தமக்குமுன்பே பிறந்துள்ள சூரியனுக்கு தாங்கள் எப்படி உபதேசித்தல் கூடும்?

5-23. உனக்கும் எனக்கும் அநேகம் ஜன்மங்கள் ஆயின. நீ மறந்துபோனாய், நான் அவற்றை அறிவேன். தர்மக்குறைவும்

அதர்மவிருத்தியும் உலகத்தில் ஏற்படும்போது துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்துக்கும் தர்மத்தை நிலைநாட்டவும் வேண்டி என் மாயையை வசப்படுத்தி என் மாயா சக்தியினால் ஆங்காங்கு வந்து அவதரிக்கிறேன். இந்த உண்மையை யறிந்தவர்கள் ஞானிகளே. அவர்கள் என்னை உபாஸித்து முக்தியடைந்தனர்.

அவரவர் மனோபரிபவத்துக்கேற்ப என்னைப் பலர் பலவிதம் உபாஸிக்கின்றனர். கர்மபலனை விரும்புபவர் இந்திராதி தேவதைகளை வணங்குகின்றனர். அவரவர்களது குணத்துக்கும் கர்மத்துக்கும் தகுந்தபடி நான்கு வர்ணங்களை சிருஷ்டித்தேன். [அவனவனது குணத்துக்கும் கர்மத்துக்கும் தகுந்தபடி அவன் வர்ணமேயன்றி பிறப்பினாலல்ல. ஒருவன் மிருகத்தன்மை மிகுந்து பிறரைத் துன்புறுத்துவதில் சந்துஷ்டியடைந்து தன் சுகத்தின் பொருட்டும் லாபத்தின்பொருட்டும் தொழில் செய்தால் அவன் பிராம்மண வம்சத்தில் பிறந்திருந்தாலும் அவன் பிராம்மணனல்ல. பிராம்மணனுக்கு விதிக்கப்பட்டுள்ள குணங்களையும் கர்மத்தையுமுடையவனே பிராம்மணன் ஆவான். நந்தன் பஞ்சம வர்ணத்தில் (பஞ்சவர்ணமே கிடையாது. கிருஷ்ண பரமாத்மாவும் சதுர்வர்ணம் மாத்திரம் குறிப்பிட்டிருப்பதைக் கவனிக்க. சதுர்வர்ணமே தான் சிருஷ்டித்ததாய் கிருஷ்ணபகவான் சொல்லுகிறார். ஐந்தாவது வர்ணத்தை சிருஷ்டித்த ப்ரம்மா யாரோ தெரியவில்லை!!)—பிறந்தவனானாலும் பிராம்மணருக்குரிய குணமும் கர்மமும் இருந்ததால் அவன் ஞானமாகிய அக்கினியில் குளித்து மனோபரிசுத்தமடைந்த ஒரு ப்ரம்மஞானி] அந்த சிருஷ்டித் தொழிலை நான் செய்தவன் ஆனாலும் அதில் பற்றின்மையால் அவை என்னை பந்திக்காது. நான் அவற்றின் கர்த்தா அல்ல. இவ்விதம் பற்றின்றி கர்மம் செய்பவன் மோக்ஷமடைகிறான்.

கர்மம், அகர்மம், விகர்மம் இவற்றை நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும். கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் பார்ப்பவனே யோகி. ஆத்மா ஒரு கர்மத்தையும் செய்யவில்லை. ஆனால் அவிவேகியானவன் தன் இந்திரியாதிகள் செய்யும் கர்மங்களை ஆத்மா செய்வதாக எண்ணி ஆத்மாவின் அகர்மத்தில் கர்மத்தைக் காண்கிறான். ஆதலால் பற்றின்றி

கர்மம் செய்பவனே ஞானி. கிடைத்தமட்டில் திருப்தியுடன் இந்திரியாதிகளை வசப்படுத்தி தேகம் நிலைத்திருப்பதற்கு வேண்டிய சத்கருமங்களைமாத்திரம் செய்துகொண்டு, ஞானமார்க்கத்திலேயே ப்ரவ்ருத்தித்து, சுகதுக்காதி த்வந்த்வங்களை சமத்வ புத்தியுடன் பார்ப்பவனது கர்மம் காலக்கிரமத்தில் கரைந்துபோகிறது. இவ்விதம் ஞானத்தையடைந்து சமத்துவ புத்தியுண்டாகி கர்மம் கரைந்துபோவதற்கு சாதனம் யாது? அது யஜ்ஞகர்மம். யஜ்ஞம்என்றால் தன்னையும் தான் செய்யும் தொழிலையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்து பிறர் நன்மையின்பொருட்டு மாத்திரமே கர்மம் செய்வது. (யாகத்தில் பசுவைக் கொல்லுதல் யஜ்ஞம் அல்லது யாகம் என்பது தன்னையே பிறர்பொருட்டாக்குவது (self-sacrifice) பசு என்பது ஆத்மா. பசுவாகிய தன்னை மறந்து (கொன்று) பிறருக்கே தன்னை அர்ப்பணம் செய்தல்.)

24–33. யஜ்ஞகர்மம்—தான்செய்யும் எல்லாவற்றிலும் ப்ரம்மத்தையே காண்பவன்; ப்ராணாயாமம் முதலான அப்பியாஸங்களால் இந்திரியாதிகளை வசப்படுத்தி தன் அறிவை மேன்மேலும் விருத்தி செய்வதாகிய யஜ்ஞத்தைச் செய்து உயர்ந்த ஞானத்தையடைந்து பகவானிடத்திலேயே தன்னை யர்ப்பணம் செய்யும் யஜ்ஞகர்மம் செய்பவன்; உபாதியுடன்கூடிய ஆத்மாவை உபாதியற்ற பரப்ரம்மத்தினிடத்தில் ஐக்கியப்படுத்துவதாகிய யஜ்ஞம்; இந்திரியாதிகளையும் பிராணன்களையும் ஒன்றுக்குள் ஒன்றாக அடக்கும் யஜ்ஞம்; ஆகாரநித்திரைகளை மிதப்படுத்தி அவைகளுக்கு வசப்படாமல், ஞானத்தையும் அறிவையும் மேன்மேலும் வளரச்செய்தலாகிய யஜ்ஞம் இவைகளையே செய்யும் ஞானிகள் கர்மத்திலிருந்து விடுபடுவார்கள். (திரவ்ய யஜ்ஞம் சிறந்ததல்ல).

34. இப்படிப்பட்ட சிறந்த ஞானத்தை, பாபத்தைக் கடக்கச்செய்யும் ஞானத்தை, ஈச்வரனை எல்லா விடங்களிலும் காணும் சமத்ருஷ்டி அறிவைக்கொடுக்கும் ஞானத்தை, சிறந்த அறிவுடையஞான நிஷ்டர்களைக் கிட்டி அவர்களுக்குப் பணிவிடைசெய்து அப்பெரியார்களின் உபதேசத்தினால் அடைவாயாக. ஆதலால் அர்ஜுனா! கர்மயோகம் செய்து பிறகு உன் சந்தேகங்களையெல்

லாம் ஞானமாகிய கத்தியினால் அறுத்து மேற்செல்வாயாக, தற்சமயம் கர்மயோக புத்தியுடன் யுத்தஞ் செய்.

## அத்தியாயம் 5.

### ஸந்யாஸ யோகம்.

1. அர்ஜுனன்—கிருஷ்ணா! 'கர்மத்தை விட்டு ஞானத்தை யடை' என்கிறாய் மறுபடி கர்மயோகத்தில் ஏவுகிறாய். எது சிரேஷ்டமோ அந்த ஒன்றை மாத்திரம் சொல்லாயோ?

2-6. கிருஷ்ணன்-கர்ம ஸந்யாசம் (கர்மத்தை விடுதல்), கர்ம யோகம் (பலாபேக்ஷையின்றி கர்மம் செய்தல்) இவ்விரண்டும் பிறவியிலிருந்து விடுதலையை (மோக்ஷம்) கொடுக்கும். ஆயின் இவ்விரண்டில் (உன்னைப்போன்ற ஸாதாரண ஜனங்களுக்கு) கர்ம யோகமே சிறந்தது. விருப்பு வெறுப்பு சுக துக்காதி த்வந்த்வங்கள் அற்று கர்மம் செய்பவன் கர்ம பந்தத்திலிருந்து எளிதில் நீங்குகிறான். ஸாங்கியம் (ஆத்மஞானம்) யோகம் (கர்ம யோகம்) இவை வெவ்வேறென்று நினைப்பவர்கள் அவிவேகிகளே. இரண்டிலொன்றைச் செவ்வையாக அனுஷ்டித்தவன் முக்தி யடைகிறான் (இரண்டுக்கும் பலன் இது ஒன்றே). இதை யறிந்தவனே விவேகி. ஸந்நியாஸத்தை யடைவதற்கு கர்ம யோகமே ஸாதனமானபடி. ஆதலால் கர்ம யோகமே சிறந்தது.

7-16. கர்மயோகியின் தன்மை. மனது பரிசுத்தமாய் இந்திரியங்களை வசப்படுத்தி கடவுளின் ஸர்வ வியாபகத்தன்மையை யறிந்து எந்த வேலை செய்துகொண்டிருந்தாலும் அதுதான் செய்யவில்லை, இந்திரியங்கள் இந்திரிய விஷயங்களில் செல்லுகின்றன என்பதை யறிந்து, தன் கர்மங்களை ஈச்வர அர்ப்பணம் செய்து தாமரையிலைத் தண்ணீர்போல் பாப புண்ணியங்களால் பந்திக்கப்படாமல் பலாபேக்ஷையற்று சித்த சுத்திக்காக கர்மம் செய்கின்றான்.

கடவுள் உலகத்தில் கர்மம், கர்த்ருத்வம், கர்ம பலன்களின் அனுபவம் இவற்றை யெல்லாம் சிருஷ்டிக்கவில்லை. ஒருவருடைய பாப புண்யத்துக்கும் அவர் காரணமல்ல. அவர் அவைகளை வாங்கி யனுபவிப்பதுமில்லை. இவையெல்லாம் ப்ராக்ருதி சம்

பந்தத்தாலுண்டானவை. பாப புண்ணியாதிகள் அஜ்ஞானத்தாலுண்டாவது. ஈஶ்வர ஞானமாகிய சூரிய வெளிச்சத்தால் இந்த அஜ்ஞான இருள் நீங்கப்பெற்றவர்கள் கடவுளை அறிகிறார்கள்.

**17-29.** ஞானியின் தன்மை. இவ்விதம் ஞான ஒளி யடைந்தவர்கள், ஞானத்தினால் பாபம் நீங்கி, பரமாத்மாவையே தஞ்சம் என அடைந்தவர்கள். பிராம்மணன் முதல் சண்டாளன் வரை எல்லாரையும் சமமாகக் கருதி எல்லாவற்றிலும் ப்ரம்மத்தை ஸமமாக இருப்பதாக அறிவதால் அவர்கள் பிறவிக் கடலைத் தாண்டி ப்ரம்மத்தில் லயித்திருப்பவர்கள். மோஹமற்று, கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் சந்தோஷமும் வருத்தமுமின்றி ஆதி அந்தமுள்ள உலக விஷயங்களில் பற்றின்றி, ப்ரம்ம சுகத்திலேயே ஈடுபட்டு, காமக்குரோதாதிகளை அடக்கி, சகலப் பிராணிகளின் ஹிதத்தையே கோரி, மனதை யடக்கி, கிரமமாக ப்ராணாயாமம் செய்து, ஆசை, பயம், கோபம் அற்று எப்போதும் ஈஶ்வரத்யானம் செய்துகொண்டு மன அமைதியுடன் இருப்பவன் மோக்ஷத்தை யடைகிறான்.

## அத்தியாயம் 6.

### தியான யோகம்.

கிருஷ்ணன்—செய்யவேண்டிய கடமைகளை பலாபேக்ஷையற்றுச் செய்பவனே யோகி, அவனே ஸந்யாஸி. ஸந்யாஸம், யோகம் இரண்டும் ஒன்றே. சங்கல்பம் அல்லது எண்ணங்களை விட்டொழித்தால் (ஸந்யாஸித்தால்) அவன் தான் கர்மயோகியாவதற்கும் தகுதியானவன்.

தியானயோகத்தை யடைவதற்கு கர்மயோகமே ஸாதனம். தியானயோகத்திலமர்ந்தவனுக்கு கர்மத்திலிருந்து ஒழிவு ஏற்பட்டுவிடுகிறது. இந்திரிய விஷயங்களிலும் கர்மங்களிலும் பற்றின்றி சகல சங்கல்பங்களையும் விட்டவனே யோகமாகிய படிகளில் ஏறுகின்றான். இவ்விதம் மேலேறிச் செல்வதற்கு வேறு எவரும் சகாயம் செய்ய முடியாது. நமக்கு நாமேதான் உதவி. தனக்குத்தானே சத்ரு, தனக்குத் தானே பந்து, ஆத

லால் மன உறுதியுடன், அறிவுடன் தேகேந்திரியாதிகளை ஜயித்து மனம் தெளிவடைய வேண்டும்.

*தியானயோகியின் தன்மை.*—த்வந்த்வங்களில் (மான அவமான, சீதோஷ்ணம் முதலிய இருமைகள்) மனம் ஒரு நிலைப்பட்டு, தன் ஆத்மாவிடம் திருப்தியுடன் சலனமின்றி, மனோ உறுதியுடன், மண்கட்டி, கல், தங்கம் இவைகளைச் சமமாகக் கருதி; நேசன், பகைவன், உறவினன், ஸாது, பாபி எல்லோரிடமும் சமபுத்தி யுடையவன் ஆகிறான்.

ஏகாந்தமான இடத்தில் தனியாய் ஸ்திரமான ஆசனத்தில் வீற்றிருந்து, தேகம் மனதை வசப்படுத்தி, ஆசை முதலானவை யற்று, ப்ரம்மசர்யவிருதத்தில் ஸ்திரமாயிருந்துகொண்டு மிதமான ஆகாரம், நித்திரையுடையவனாய் மனதை ஒரே நிலையாய் பகவானிடத்திலேயே நிலைநிறுத்தி, காற்றில்லாத இடத்திலுள்ள தீபத்தைப்போல் மனதைச் சலிக்காமல் வைத்துக்கொண்டு தியானம் செய்பவனது சித்தம் அடங்கி, மனது பரிசுத்தமாகி, தேகேந்திரியாதிகளைக் கடந்து நிற்கும் மனதுக்கும் வாக்குக்கும் எட்டாத பரமாத்மாவைப்பார்த்து அனுபவித்து அப்பரமானந்த சுகத்தை யனுபவித்து யோகசித்தியை யடைகிறான்.

*யோகத்தை யடைவதற்கு ஸாதனம்.*—மனோநிச்சயம் அல்லது உறுதி வேண்டும், காமாதிகளை விடவேண்டும், இந்திரியக் கூட்டங்களைத் தைரியமான மனோதிடத்தினால் அடக்கவேண்டும். மனதை பரமாத்மாவினிடத்தில் நிறுத்தி வேறொன்றையும் சிந்தித்தல் கூடாது. மனது ஸ்திரமின்றி அலையும்போதெல்லாம் திருப்பித்திரும்பி அதை மற்ற எண்ணங்களிலிருந்து இழுத்து ஆத்மாவினிடத்தில் வைக்கவேண்டும், மனச்சாந்தியை யடைய வேண்டும். 'தான்' என்னும் ரஜோகுணத்தை அடக்கி ஆள வேண்டும். அப்படிப்பட்டவன் பாபம் நீங்கி யோகத்தில் ஸித்தி பெற்று ப்ரம்மானந்தத்தை எளிதில் அடைகிறான்.

*யோகத்தை யடைந்தவன் குணம்.*—எல்லாவற்றிலும் ஈச்வரனை ஸமமாய்க் காண்கிறான், எல்லா சராசரங்களும் ஈச்வரனிடத்திலிருப்பதாக அறிகிறான், கடவுளினுடையவும் ப்ராணிகளினுடையவும் ஏகத்வத்தை உணருகிறான், தன்னைப்போல்

பிறரைக் கருதி அவர்களது சுகதுக்கங்களைத் தனதுபோல் உணருகிறான்.

அர்ஜுனன்—என் மனது சஞ்சலத்தினால் தாங்கள் உபதேசிக்கும் ஸமத்வபுத்தி யென்னும் விஷயம் சரியாய் விளங்கவில்லை. காற்றை யடக்குவதைப்போல் மிகவும் சலனமுள்ள மனதை யடக்குவது மிகவும் கஷ்டம் அல்லவா ?

கிருஷ்ணன்—ஆம், மனது சஞ்சலமுள்ளதே, அடக்குவது மிகவும் பிரயாசையானதே; ஆயினும் பழக்கத்தாலும் ஆசையின்மையாலும் அடக்கவேண்டும். மனதை முதலில் அடக்கிப் பிறகுதான் எந்த யோகத்தையும் அடையமுடியும்.

அர்ஜுனன்—முதலில் முயற்சி எடுத்துக்கொண்டு மரணாந்த காலத்தில் யோகத்திலிருந்து தவறினவன் கதி யாது ? சிதறின மேகம்போல் அவன் அழிந்து விடுகிறானா?

கிருஷ்ணன்—என் அப்பா அர்ஜுனா ! முயற்சியுடையவன் இகழ்ச்சியை ஒருபோதும் அடையான். ஸத்கர்மம் செய்துகொண்டிருந்து யோகத்திலிருந்து நழுவினவன் புண்ணிய லோகங்களில் அநேக காலம் பலனை யனுபவித்துப் பிறகு ஸம்பத்து (பரிசுத்தமான ஞானஸம்பத்து) உடையவர்கள் குடும்பங்களில் அல்லது ஞானத்தினால் யோகத்தையே யடைந்த யோகிகளது குடும்பத்தில் ஜனித்து, பூர்வ ஜன்மத்தில் செய்துகொண்டிருந்த யோகத்தை மறுபடி ஆரம்பித்து மேற்படிகளில் முயற்சியுடன் சென்று உத்தமமான நற்கதியை யடைகிறான். தியான யோகி, தபஸ், ஞானம், கர்மம் இவற்றையுடையவர்களையும் விட மேலானவன் ஆதலால் அர்ஜுனா, நீ அப்படிப்பட்ட தியான யோகி ஆவாயாக; அப்போது எனக்கு நீ சிரேஷ்டனாவாய்.

## அத்தியாயம் 7.

### விஜ்ஞான யோகம்.

கிருஷ்ணன்—ஐயந்திரிபற என்னையறிந்து என்னிடத்திலேயே மனதைச் செலுத்தி யோகத்தையடையும் மார்க்கத்தைக் கூறுகின்றேன் கேள். அநேக ஆயிரத்திலொருவனே ஞானத்தை

யடைய முயற்சி செய்கிறான். அதில் சிலரே உண்மையை யறிகின்றனர்.

ப்ரக்ருதி (மாயை)யானது நிலம், நீர், நெருப்பு, வாயு, விசும்பு, மனம், புத்தி, அகங்காரம் என எட்டாகப் பிரிந்திருக்கிறது. இதுவே என் அபர மாயை, அசேதனப்ரக்ருதி அல்லது ஜடப்ரக்ருதி அல்லது க்ஷேத்ரம்; இதைத் தரித்துக்கொண்டிருப்பது எனது மற்றொரு மாயை பரப்ரக்ருதி - சேதனப்ரக்ருதி, க்ஷேத்ரக்ஞனுமிருப்பது - அதாவது இப்பிரபஞ்சம் முழுவதும் இரண்டு சேர்ந்தது; அழிந்துபோகக்கூடிய, ஆதியந்தமுள்ள, தனிப்பொருள், கலப்புப் பொருட்களால் கட்டப்பட்ட பாகம் ஒன்று. அவற்றுக்குள், பூவில் மணம்போலும், எள்ளில் எண்ணெய்போலும், பாலில் வெண்ணெய்போலும் பிரித்து வேறுபடுத்த முடியாமல், அவற்றுக்கு உயிர் கொடுக்கும், அவற்றுக்கு ஸத்தைக்கொடுக்கும் அழிவற்ற நீடித்த, எப்போதுமுள்ள ஈச்வரத்தன்மையானது மற்றொன்று. இவற்றிற்கெல்லாம் மூலகாரணம் நானே. எப்படி ஒரு மணிமாலையில் பல தனித்தனியான மணிகளின் வழியாக ஒரே நூல் ஊடுருவிச்சென்று வியாபித்திருக்கிறதோ அவ்விதமே இப்பிரபஞ்ச முழுவதிலும் காணப்படும், தனித்தனியாகத் தோன்றும் எல்லா சராசரப் பொருட்களின் உள்ளே (மணிசரத்தின் நூல்போல்) அந்தர்யாமியாக இருந்து ஜலத்திலுள்ள ருசியாயும், சசி ஸூர்யரது ஒளியாயும் வேதத்தின் ஓங்காரமாயும், ஆகாயத்தின் சப்தமாயும், சகல பிராணிகளின் ஜீவனாயும், அஸத்தாப்பாகம் அழிந்துபோகும்போது மீதி அழியாமல் செல்லும் ஸத்துப்பாகமாயும் புத்திமான்களின் அறிவாயும் இருக்கிறேன். சத்வ ரஜஸ் தமோ குணங்களிலிருந்துண்டானவைகள் எல்லாம் என்னிடத்திலடங்கியுள்ளன. ஆயின் நான் அவைகள் வசத்திலில்லை. குணத்தில் வசப்பட்ட ஸாமான்ய ஜனங்கள் இதை அறியவில்லை. மாயா வசப்பட்டவர்கள் மாயையைக் கடப்பது கடினம். என்னைச் சரணடைந்து மாயையைக் கடக்கலாம். மாயா வசப்பட்டவர் என்னை அறியார்.

நான்குவித பக்தர்கள். 1. துஷ்டமனிதர், துஷ்டமிருகம். வியாதி இவைகளால் துன்பப்படுகின்றவர்கள். 2. பரமார்த்த

ஞானத்தை இச்சிப்பவர்கள், 3. பொருளை இச்சிக்கின்றவர்கள், 4. ஞானிகள்; இவர்களுள் ஞானியே சிறந்தவன். அவனே ஒரு நிலைப்பட்ட மனதுடன் "ஸர்வம் விஷ்ணுமயம்" என்னும் உண்மையை உணர்ந்துள்ளவன், முயற்சிசெய்து உண்மையை அறியும் ஆயிரக்கணக்கில் ஒருவன் இவனே. அஜ்ஞானிகள் ஆசையினால் அபகரிக்கப்பட்டு பலதேவதைகளைப் பூஜிக்கின்றனர். எவன் எவன் எந்த எந்த ரூபத்தை வணங்குகின்றானோ அதில் அவனது பக்தியை உறுதிப்படுத்தி அதற்கு வேண்டிய பலனை அளிக்கிறேன். அந்தப்பலன் நீடித்ததல்ல. இந்த ஞானக்குறைவுள்ளவர்கள், கடவுளின் ஏகத்வத்தையும் மேன்மையையும் அறியார், அவதார புருஷர்களில் ஒருவரான எனது உண்மையையும் அறியவில்லை. த்வந்த்வ மோஹங்களால் மயக்கமடைந்துள்ளவர்கள் என்னையறியார். நல்வினைகளைச்செய்து பாபம் நசித்து திடமனதுடன் என்னையடைய முயற்சியுடையவர், ப்ரம்மத்தையும் அத்தியாத்மம் அதிபூத அதிதைவ அதியஜ்ஞத்தையும் அறிந்து நற்கதியையடைகின்றனர்.

## அத்தியாயம் 8.

### அப்பியாஸ யோகம் அல்லது அக்ஷரப்ரம்ம யோகம்.

அர்ஜுனன்—ஹே கிருஷ்ணா! தாங்கள் இதுவரையும் சொல்லி வந்த

1. ப்ரம்மம் என்பது என்ன?
2. கர்மம் என்பது என்ன?
3. அத்தியாத்மம் அல்லது ஆத்மஞானம்
4. அதிபூதம அல்லது பூதஞானம்
5. அதிதெய்வம் அல்லது தேவஞானம்
6. அதியஜ்ஞம் அல்லது யாகஞானம்

(3–6: இவைகள் யாவை?)

7. மனதை யடக்கினவர்கள் தங்களை எவ்விதமாய் அறிகிறார்கள்?

கிருஷ்ணன் விடை—

1. ப்ரம்மம் என்பது அக்ஷரமாய், அழிவற்ற மேலான நிர்க்குண ப்ரம்மம்.

2. அத்தியாத்மம்—அப்பரம்பொருளின் அம்சமாய் விபக்தமாய் தேகந்தோறும் இருக்கும் ஜீவாத்மா.

3. கர்மம்—பிராணி முதலியவற்றின் உற்பத்தியை யுண்டாக்கும் யாகம், தானம், ஹோமம் முதலிய தியாகமே கர்மம்.

4. அதிபூதம்—ப்ரக்ருதி அல்லது மாயா சம்பந்தமாய் ப்ரபஞ்சத்தில் உண்டாகி எப்போதும் நீடித்திராமல் அழிந்து போகக்கூடியவைகள் எல்லாம் அதிபூதம். பஞ்சபூதம் முதலிய கலப்புத்தனிப் பொருட்கள், தேகாதிகள் முதலியன.

5. அதிதைவம்—எல்லாவற்றுக்கும் தலைவனாய், எல்லாவற்றையும் ஆள்பவனாய், முத்தொழில் வல்லோனாய் இருக்கும் சகுணப்ரம்மம்.

6. அதியஜ்ஞம்—நமக்குள் கடவுள் இருக்கிறார் என்பதை உணர்ந்து நாம் செய்யும் எல்லாத் தொழில்களையும் ஈச்வர அர்ப்பணமாகச் செய்து, பிறர் நன்மையின் பொருட்டே யஜ்ஞம் முதலான தொழில் செய்வது ; இந்த அறிவுக்கு மூலகாரணமாய் நமக்குள் இருக்கும் கடவுளே அதியஜ்ஞம் (self-sacrificing spirit).

7. மரணகாலத்தில் கடவுளையே தியானித்துக்கொண்டு பிராணனை விடுபவன் கடவுளின் இயல்பை அடைகிறான்.

மரணகாலத்தில் எந்தப்பொருளைச் சிந்தித்துக்கொண்டேயிருக்கிறானோ அதையே அடைகிறான். என்னையே தியானித்துக் கொண்டிருக்கும் அப்பியாசம் உடையவன் என்னையே யடைவான். ஆதலின் நீ எப்போதும் என் நினைவாய் யுத்தம் செய். என்னையே யடைவாய். நிர்க்குணப்ரம்ம மாகிய அப்பரம் பொருளை எவன் மிகுந்த பக்தியுடனும் யோக பலத்துடனும் தியானித்துக்கொண்டே யிருக்கிறானோ அவன் அப்பரம்பொருளாகிய கடவுளையே யடைகிறான்.

அப்பியாச யோகியின் தன்மையும் அவனுடையும் பதவியின் உயர்வும்—*பிரம்மசர்யத்தை யனுஷ்டித்து ஆசைநீங்கி, இந்திரியங் களை யடக்கி, ஓம் என்னும் அக்ஷரத்தினால் ப்ரம்மத்தை இடை விடாமல் தியானித்துக்கொண்டு, வேறு விஷயத்தில் மனதைச் செலுத்தாமல் ஒரு நிலைப்படுத்தி யிருப்பவன் பரம்பொருளை மீய யடைகிறான். அப்படி அடைந்தவன் திரும்பிப் பிறப்பதில்லை. ப்ரம்மலோக முதல் எல்லாவற்றிற்கும் தோற்றமும் ஒடுக்கமும் திரும்பித் திரும்பியுண்டு—கடவுளை யடைந்தவனுக்கோ மறுபடி ஜனனம் கிடையாது.*

தோற்றம் ஒடுக்கம் அல்லது பிரபஞ்சத்தின் பரிணாமமும் லய மும்—*ப்ரம்மாவுக்கு* 1000 *யுகம் ஒரு பகல்,* 1000 *யுகம் ஒரு இரவு. அவ்யக்தம் அதாவது காண முடியாத கடவுளிடத்தி லிருந்து சராசரப்பொருள்களெல்லாம் தோன்றுகின்றன* (Evolution). *இரவு வரும்போது இவைகளெல்லாம் அவ்யக்த மாகிய கடவுளிடம் ஒடுங்கிவிடுகின்றன* (involution). *இப்படியே பூதத்தொகுதிகள்* (Matter) *தோன்றித் தோன்றி ஒடுங்கி மறைகின்றன. தோன்றிமறையும் இவ்வஸ்துக்களுக்கெல்லாம் மேலானது அழிவற்ற கடவுளின் பரமபத மென்பது—எல்லாப் பிரபஞ்சத்திலும் வியாபித்துக் கொண்டு எல்லாப்பிராணிகளுக் குள்ளும் அந்தர்யாமியாயிருக்கும் அப்பரம்பொருளை உத்தம மான சலிக்காத பக்தியினால் அடைந்தவர்கள் பிறவியையடைவ தில்லை.*

யோகிகள் மீளா நிலையையும், மீளும் நிலையையும் அடையும் காலம்—*அக்னி, ஒளி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம் இவற் றில் இறக்கும் ஞானிகள் ப்ரம்மத்தையடைந்து மீளாப்பதம் பெறுகிறார்கள். புகை, இரவு, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயணம் இவற்றில் இறக்கும் கர்மிகள் மறுபடி மீண்டுவந்து பிறக்கின்றார் கள் (அக்னி, ஒளி, பகல்போல் மனது தெளிந்து பரிபக்குவ மடைந்தவர்; புகை, இரவுபோல் புத்தி தெளியாமல் இன்னும் அறிவீனமாகிய இருள் நிறைந்திருப்பவர்). இவ்வழிகளின் விஷ யத்தையும் உண்மையையும் அறிந்தவர் மயக்கமுறுவதில்லை. இவற்றை யறிந்தவன் வேதம், தபம், தானம் இவற்றின் சிறிய*

பலன்களையெல்லாம் கடந்து தூய்மையடைந்து மீளாப்பதவியாம் மோக்ஷபதவியை எய்துகிறான்.

## அத்தியாயம் 9.

### ராஜ வித்யா ராஜ குஹ்ய (ரகஸ்ய) யோகம்.

கிருஷ்ணபகவான்.—பாபத்திலிருந்து உன்னை விடுவிக்கும் படியான அதிரகஸ்யமான ப்ரம்ம ஞானத்தைச் சொல்லுகிறேன். இது எல்லாவற்றுக்கும் மேலான, தூய்மை தரக்கூடிய, தர்மத் துக்குச் சார்பான, செய்வதற்கும் எளிதான அழிவற்ற ஞானம். இதை நம்பாதவர்கள் மீண்டு மீண்டு பிறப்பை யடைகின்றனர்.

அவ்யக்த ரூபத்துடன்கூடின என்னால் ப்ரபஞ்சமெல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கிறது. என்னிடம் சகல பூதங்களு மிருக் கின்றன; ஆயின் அவைகளில் நானில்லை. வெட்ட வெளியான ஆகாயத்தில் வாயு எப்படி ஒட்டாமல் வியாபித்திருக்கிறதோ அவ்விதமே சகல பூதங்களும் என்னிடமிருக்கின்றன. பிரளய காலத்தில் என் மாயையில் ஒடுங்கி சிருஷ்டிகாலத்தில் வெளித் தோன்றுகின்றன. இந்த சிருஷ்டியாதி தொழில்கள் அல் லது கர்மங்கள் அபிமான மற்ற என்னை பந்தப்படுத்தாது. என் மாயை (சக்தி, ப்ரக்ருதி அல்லது இயற்கை—nature, the material part of the Universe) யால் பிரபஞ்சம் தோன்றி ஒடுங்கிச் சுழல்கின்றது. மாயாவயப்பட்ட மூடர் என்னை யறியார். ஞானிகளான மகாத்மாக்களே என் உண்மையை யறிந்து தர்மவழியில் பக்தியுடன் என்னை உபாசிக்கின்றனர். பலர் என்னைப் பலவிதமாய்ப் பூஜிக்கின்றனர், அவரவர்களது மனோபரிபக்குவத்துக் கேற்ப.

நானே உலகிலுள்ள எல்லாப் பொருள்களின் சத்துப் பாகம். நானே கர்மம், யஜ்ஞம், 'ஸ்வதா' என்னும் வாழ்த் துரை, நானே ஔஷதம், மந்திரம், அக்கினி, ஹோமகர்மா; இப்பிரபஞ்சத்துக்கு அன்னை, பிதா, பாட்டன் நான்; அறிபடு பொருளும் ஓங்காரமும் வேதமும் நானே. அடையப்படும் புகலிடம், இறைவன், சாக்ஷி, சரணடையத்தகுந்தவன், சிருஷ்டி

ஸ்திதி லய ஸ்தானம் எல்லாம் நானே; வெப்பம் மழையை யுண்டாக்கி பிறப்பு இறப்புக்குக் காரணமாய் சத்து அசத்துமாயிருப்பவன் நானே,

பக்தர்கள் சோமபானமுண்டு, பாபமகன்று, வேதமறிந்து பலனையிச்சித்து என்னை ஆராதிப்பவர் புண்ணிய லோகங்களில் புண்ணிய பலனை யனுபவித்து அது தீர்ந்தவுடன் திரும்பி உலகில் பிறக்கின்றனர். வேறு நினைவின்றி என்னையே நம்பி ஆராதிப்பவரின் பாப புண்ணியங்களை நானே ஏற்றுக்கொள்ளுகிறேன்.

தேவவிரதிகள் தேவரை யடைவர்; பிதுர்க்களை நோற்பவர் பிதுர்க்களை அடைவர்; பூதங்களை ஆராதிப்பவர் பூதங்களை யடைவர்; என்னைப் பணிபவர் என்னையே அடைவார்; அன்னிய தேவதைகளைத் தொழுபவரும்கூட என்னையே யடைகின்றனர்.

இலை, பூ, கனி, ஜலம் இவற்றை எதுவானாலும் அன்புடன் முயற்சியுடன் எனக்களித்தால் அதை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். ஆதலின் ஹே அர்ஜுனா, நீ எதைச் செய்தாலும், எதை உண்டாலும், எதைக்கொடுத்தாலும், எத்தவத்தை ஹோமத்தைச் செய்தாலும் "கடவுளுக்கு அர்ப்பணம்" ஆகச் செய். அப்படிச் செய்தால் அவற்றின் பலாபலன் உன்னை ஒட்டாது; அப்போது உலக பந்தத்திலிருந்தும் பிறப்பிறப்பாகிய தளையினின்றும் விடுபட்டு என்னை யடைவாய்.

நான் எல்லாப் பிராணிகளிடத்தும் சமமானவன். எனக்குப் பகைவன் நண்பன் கிடையாது. ஆயின் என்னை அன்புடன் ஆராதிப்பவர் என்னிடம் உளர், அவரிடம் நான் உள்ளேன். கொடியோனாயினும் என்னை வழிபடும் முயற்சி உள்ளோன் நல்லவனே, இம்முயற்சியால் அவன் தர்மவானாகி நித்ய சாந்தியை யடைவான். பாவிகளாயினும் எப்பாலாரும் எவ்வருணத்தாரும் என்னைப் பணிபவர் என்னை யடைவர். ஆதலின் அர்ஜுன, நீ மனதை என்னிடம் நிலைநிறுத்தி பக்தியுடன் என்னைத் தொழுது என்னையே மேலாகக்கருதி என்னை யடைவாயாக.

# அத்தியாயம் 10.

## விபூதி யோகம்.

பின்னும் ஓர் முறை உன் நன்மையைக் கருதி என் பிரியனை உனக்குச் சொல்லப்போவதைக் கேள். என் மகிமையை யாரும் உணரார். தேவர் முனிவர் ரிஷிகளுக்கெல்லாம் ஆதி நானே. ஆதியந்தமில்லாத முதல்வனான என்னை யறிந்தோன் பாபத்தினின்றும் விடுபடுவான். புத்தியும் ஞானமும் மோஹமின்மையும் பொறுமையும் உண்மையும் அடக்கமும் அமைதியும் சுகமும் துக்கமும் தோற்றமும் ஒடுக்கமும் பயமும் பயமின்மையும் இம்சை செய்யாமையும் நடுநிலை திருப்தியும் தபஸும் தானமும் இகழ்ச்சியும் புகழ்ச்சியும் இவ்விதப் பலவகைத் தன்மைகளை யெல்லாம் உயிர்கள் என்னிடத்திலிருந்தே அடைகின்றன. என் தன்மையை யடைந்த 4 மனுக்கள் 7 மகரிஷிகளிடமிருந்தே மக்களெல்லாம் தோன்றினர். இவ்விதம் என் மேன்மையை யுள்ளபடி உணர்ந்தவனே யோகி.

யோகிகளின் மேன்மை—யோகிகள் நானே எல்லாவற்றிற்கும் காரணம் என்பதை யறிந்து என்னையே தியானிப்பர். என்னிடம் சித்தத்தை வைத்து பிராணனை யெனக்கர்ப்பித்து என்னைக் குறித்தே போதித்துக்கொண்டும் பேசிக்கொண்டும் சந்துஷ்டியடைவார். அவர்களுக்குச் சிறந்த புத்தியோகத்தை அளிக்கின்றேன், ஞான விளக்கினால் அவரது அஜ்ஞான இருளை நீக்குகிறேன்.

அர்ஜுனன்—தாங்களே பரப்ரம்மம், பரிசுத்தமும் ப்ரகாசமுமான பொருள். சிறந்த வசிஷ்டராதி ரிஷிகள் தங்களையே முதற்கடவுள், சர்வவியாபி என்று சொல்லுகின்றனர்; தமது உற்பத்தியை தேவாசுரர் யாரும் அறியார்; தம்மைத்தாமே அறிவீர். ஹே புருஷோத்தம, தேவதேவா, ஜகத்பதே, எந்த மகிமைகளால், எந்த விபூதிகளால் இப்பிரபஞ்சத்தை வியாபித்துக் கொண்டிருக்கின்றீரோ அவற்றை அறிய விரும்புகிறேன். ஹே யோகி, எப்போதும் உம்மையே சிந்திப்பது எங்ஙனம்? ஹே பகவான், எவ்வெப்படிகளில் நின்னை யான் கருதல் வேண்டும்? ஹே ஜனார்தன, நின் யோகத்தையும் மேன்மையையும்

பற்றிய உன் அமிர்தச் சொற்கள் எனக்குத் தெவிட்டவில்லை மற்றும் ஒரு முறை சொல்வாயாக.

கிருஷ்ணன்—என் விபூதிகளுக்கு முடிவில்லாமையால் அவற்றுள் சில முக்கியமானவற்றை மாத்திரம் சொல்லுகிறேன். எல்லாப் பிராணிகளின் ஹ்ருதயத்திலும் இருக்கும் பரமாத்மா நானே. எல்லாவற்றுக்கும் ஆதி மத்தியாந்தமும் நானே. ஆதித்தியருள் விஷ்ணு என்னும் ஆதித்தியனும், ஒளிகளுள் சூரியனும், காற்றுக்குள் மரீசியும், நக்ஷத்திரங்களுக்குள் சந்திரனும் நானே. வேதங்களுள் ஸாமவேதம், தேவரில் இந்திரன், இந்திரியங்களில் மனம், பிராணிகளில் உணர்ச்சி, ருத்திரருள் சங்கரன், இயக்கர் அரக்கருள் குபேரன், வசுக்களுள் அக்கினி, மலைகளுள் மேரு, புரோகிதர்களுள் பிரகஸ்பதி, படைத்தலைவரில் முருகன், நீர் நிலைகளுள் நான் சமுத்திரம், ரிஷிகளில் பிருகு, பதங்களுள் ஓங்காரம், யக்ஞங்களில் நான் ஜபமாகிய யக்ஞம், தாவரங்களுள் ஹிமாலயம், விருக்ஷங்களில் அரசமரம், தேவரிஷிகளுள் நாரதர், கந்தர்வருள் சித்ரரதன், ஸித்தர்களில் கபிலர், அஸ்வங்களில் உச்சைசிரவம், யானைகளில் ஐராவதம், மனிதருள் அரசன் நான், ஆயுதங்களுள் வஜ்ரம், பசுக்களுள் காமதேனு, பிறப்பிப்பவருள் மன்மதன், ஸர்ப்பங்களுள் வாசுகி, நாகங்களுள் அநந்தன், ஜல தேவதைகளுள் வருணன், பிதுர்க்களுள் அர்யமா, தண்டிப்பவருள் யமன், தைத்தியர்களுள் பிரஹ்லாதன், கணிப்பவருள் காலம், மிருகங்களுள் சிங்கம், பக்ஷிகளுள் கருடன், பரிசுத்தம் செய்யும் வஸ்துக்களுள் வாயு, சூரர்களுள் ராமன், மீன்களுள் மகரம், நதிகளுள் கங்கை இவையெல்லாம் நானே. சிருஷ்டிகளுக்கு ஆதி மத்தியம் அந்தம் நான். வித்தைகளுள் ஆத்ம வித்தை. தர்க்கிப்பவர்களில் வாதம் நான். எழுத்துக்களில் அகாரம், புணர்ச்சிகளில் த்வந்த்வம் என்னும் இரைட்டைப்புணர்ப்பு இவைகள் நானே. ஓயாதகாலம் நான், எங்கிலும் இருந்துகொண்டு கர்ம பலனை யளிக்கும் தாதா நான். எல்லாவற்றுக்கும் மூலம் நான். பெண்மக்களிடத்தில் நான் கீர்த்தி, திரு (மங்களகாம்), சொல்வன்மை, நினைவு, அறிவு, தைர்யம், பொறுமை, ஸாமங்

களில் ப்ருஹத்ஸாமம், சந்தங்களில் காயத்ரி, மாதங்களுள் மார்கழி, பருவங்களுள் வஸந்தம் நான், வஞ்சகரின் சூது நான், ஒளியுடையோரின் ஒளி நான், நானே வெற்றி, நானே முயற்சி, சாத்துவிகர்களின் உண்மை நானே. விருஷ்ணிகுல வாஸுதேவன், பாண்டவரில் தனஞ்ஜயன், முனிவருள் வியாஸன், கவிகளில் சுக்ரன் நான். ஆள்வோரிடத்தில் தண்டனை, வெற்றியை விரும்புவோரிடத்து நீதி, ரகஸ்யங்களுள் மௌனம், ஞானிகளின் ஞானம் நான். எல்லாப் பூதங்களின் மூலமாகிய விதை நான். அர்ஜுன! என்னையன்றி எதுவுமில்லை. என் மகிமைகளுக்கு முடிவில்லை. சிறிதளவு மாத்திரமே உனக்குச் சொன்னேன். உலகத்தில் எதெது பெருமை, உண்மை, அழகு, வலிமை யிவற்றையுடையதோ அவையெல்லாம் என் தேஜஸின் ஒரு அம்சத்திலிருந்து உண்டானதாக அறிவாயாக. இந்த சகல ப்ரபஞ்சத்தையும் என் ஒரு கலையினால் நிலைநிறுத்தித் தாங்கிக் கொண்டிருக்கிறேன்.

## அத்தியாயம் 11.

### விஶ்வரூபதர்ஶனம்.

அர்ஜுனன்—ஹே, கிருஷ்ண! உமது வாக்கியங்களால் நான் மயக்கம் நீங்கப்பெற்றேன். பிராணிகளின் தோற்ற ஒடுக்கமும் உமது மஹிமையும் தெரிந்துகொண்டேன். உமது ஈஶ்வரரூபமாகிய விஶ்வ (எங்கும் நிறைந்த) ரூபத்தைப்பார்க்க விரும்புகிறேன்.

பகவான்—பலநிறம் உருவங்களையும் கணக்கற்றதுமான என் உருவங்களைப்பார். என்னில் அடங்கியுள்ள பல சூர்யர்கள் வஸுக்கள் ருத்திரர் முதலானவர்களைப்பார். என் சரீரத்தின் ஒருபாகத்தில் மாத்திரம் அடங்கியிருக்கிறது இப்பிரபஞ்ச முழுவதும். இப்போதுள்ள உன் ஊனக்கண்ணால் பார்க்கமுடியாது; உனக்குத் தெய்வத்தன்மையான ஞானக் கண்களைக்கொடுக்கிறேன் (என்று சொல்லி விஶ்வரூபம் எடுத்தார்).

விஸ்வரூபம்—அநேக முகங்கள் கண்களுடன் திவ்ய ஆடை, ஆபரணம் ஆயுதங்கள் கந்தங்களுடன், மிகுந்த அத்புதமாய் ஆச்சர்யமாய் ஜ்வலிப்பதாய், 1000 சூரியர்களின் பிரகாச முடையதாயிருந்தது. பலவாருகப் பிரிந்துள்ள பிரபஞ்சமெல்லா வற்றையும் விஸ்வரூபத்தின் ஒரு அம்சத்திலிருப்பதாக அர்ஜுனன் பார்த்து ஆச்சர்யத்துடன் பகவானை வணங்கிக் கூறலுற்ருன்.

அர்ஜுனன்—ஹே தேவ, தமது ரூபத்தில் தேவர் பூதக் கூட்டம் ப்ரம்மா ரிஷிகள் யாவரையும் பார்க்கிறேன். அநேகம் கண்கள் முகங்கள் முதலியவற்றுடன் அநேக ரூபங்களுடைய உம்மை எங்கிலும் பார்க்கிறேன். கிரீடம் கதை சக்ரம் தரித்து சூரிய சந்திரனது ஒளியுடன் எங்கும் காந்தியுடையவரான உம்மை எங்கும் பார்க்கிறேன். அறியவேண்டிய அழிவற்ற ப்ரபஞ்ச ஆதாரமான தர்ம ரக்ஷகரான ஸநாதன பரமபுருஷர் தாங்கள். ஆதிமத்யாந்தமற்று அபரிமித பராக்கிரமமுற்று, சூரியசந்திரரைக் கண்களாயும் அக்கினியை முகமாயும் தமது காந்தியினுல் பிரபஞ்சத்தை எரிக்கின்றவராயிருக்கிறீர். ஆகாயம் பூமி இடைவெளி மற்றெல்லாத் திக்குக்களும் தம்மாலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது. சிலர் பயப்படுகிருர்கள். தேவர்கள் உம்மைப் பிரவேசித்து வணங்குகின்றனர். ரிஷிகள் சித்தர்கள் மங்களவாழ்த்துக்கூறித் துதிக்கின்றனர். ருத்திர ஆதித்ய கந்தர் வாதிகள் யாவரும் ஆச்சரியத்துடன் உம்மையே பார்த்துக் கொண்டிருக்கின்றனர். உமது திறந்தவாய், கோரப்பற்கள், ஜ்வலிக்கும் கண்களையும் பார்க்கும்போது நடுக்கமுண்டாகிறது. தமது முகம் பிரளயகால அக்கினிக்கு சமானமாயிருக்கிறது. துரியோதனுதி அரசர் பீஷ்மத்ரோணகர்ணுதிகள் யாவரும் உமது வாயில் பிரவேசித்து பற்களினிடையில் நொறுங்கிப்போவதாகக் காணப்படுகின்றனர். மிகுந்த வேகத்தையுடைய நதிகள் விசையுடன் ஓடி சமுத்திரத்தையடைவது போலும் விட்டிற் பூச்சிகள் எரிகின்ற விளக்கின் அக்கினியில் சென்று அழிவது போலும் இவ்வீரர்களும் மற்றும் ஜனங்களும் உமது வாயில் பிரவேசிக்கின்றனர். நீர் ப்ரபஞ்சங்களை யெல்லாம் விழுங்குவது போலிருக்கிறது. ஹே தேவ, இந்த பயங்கர ரூபமுடைய தாங்கள் யார்? அனுக்கிரகம் செய்யவேண்டும்.

கிருஷ்ணன்—துஷ்டநிக்கிரகத்தின்பொருட்டு நான் காலனாய் ப்ரவிருத்தித்து இருக்கிறேன். இங்குள்ள துஷ்டர்களெல்லாரும் அழியப்போகின்றனர். ஏற்கெனவே என்னால் முடிவடைந்திருக்கும் இந்த சத்துருக்களை ஜயித்து ராஜ்யத்தை அனுபவி.

அர்ஜுனன்—(நடுக்கத்துடன் கைகூப்பி) உமது மஹிமையைச்சொல்லி (நல்லோர்) சந்துஷ்டி யடைகின்றனர், அசுரர் பயந்து ஓடுகின்றனர். பரம்பொருளான உம்மை ப்ரம்மா முதலான யாவரும் நமஸ்கரிகின்றனர். தாங்களே ஆதி கடவுள், ப்ரபஞ்சமெல்லாம் தங்குமிடம், அறிபவர், அறியப்படுபொருள், ப்ரஜாபதி, வாயு, யமன், அக்கினி எல்லாம் தாங்களே. ஆயிரம் முறை மேன்மேலும் நமஸ்கரிக்கின்றேன். உமது மகிமையை யறியாமல் தோழன் என்னும் உரிமையில் நான் ஏதேனும் தப்பிதம் செய்திருந்தால் அதையெல்லாம் க்ஷமிப்பீராக. இவ்வுலகத்துக்குத் தகப்பனும் குருவாயும் ஈஸ்வரனும் பூஜிக்கத்தகுந்தவனுமுள்ள உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன், என்னை மன்னிக்கும்படியாக. விஸ்வரூபத்தைக்கண்டு சந்துஷ்டியையும் பயத்தையும் அடைந்துளேன். ஆயினும் உமது பழைய ஸௌம்யமான அந்த அழகிய ரூபத்தையே பார்க்க விரும்புகிறேன்.

கிருஷ்ணன்—என் யோக மகிமையால் உனக்குக் காண்பித்த இந்த விஸ்வரூபம் இதற்குமுன் யாரும் பார்த்ததில்லை. இம்மனித உலகில் வேத யஜ்ஞ தானாதிகளாலும் யாரும் இதைப்பார்க்க முடியாது. நீ பயம் நீங்கி எனது பழைய உருவத்தைப் பார்.

அர்ஜுனன்—உமது இந்த ப்ரஸந்நமான அழகிய மனித உருவத்தைக்கண்டு மனந்தெளிந்து எனது ஸ்வபாவ நிலைமையை யடைந்துள்ளேன்.

கிருஷ்ணன்—எனது விஸ்வரூபம் தேவாதிகளாலும் பார்க்க சாத்தியமில்லை; வேத யஜ்ஞ தானாதிகளால் பார்க்கமுடியாது. உயர்ந்த பக்தியினால் மாத்திரமே காணத்தகுந்தது. தான் செய்யும் கர்மங்களை எனக்கர்ப்பித்து, என்னையே மேலாகக் கருதி, பற்றின்றி, எல்லாப் பிராணிகளையும் சமமாகக் கருதி, ஹிதத்தைக் கோருபவன் என்னை வந்தடைகிறான்.

# அத்தியாயம் 12.

## பக்தி யோகம்.

*அர்ஜுனன்—ஸகுணப் பிரம்மமாகிய உம்மை உபாஸிப்பவர், நிர்க்குணப் பிரம்மமான காணமுடியாத பரம்பொருளை உபாஸிப்பவர், இவ்விருவருள் யார் சிறந்தவர்? யார் யோகத்தை அறிந்தவர்?*

*கிருஷ்ணன்—என்னிடம் மனதைச் செலுத்தி நம்பிக்கையுடன் உபாஸிப்பவர்களே மேலான யோகிகள். மற்று அவ்யக்தமான, சர்வ வியாபியான, சிந்திக்கமுடியாத, நித்யமான, நிர்க்குண ப்ரம்மத்தை ஸமபுத்தியுடன் இந்திரியங்களையடக்கி உபாஸிப்பவர்களும் என்னையே யடைகின்றனர் (அதாவது இவ்விருவரும் அடையும் முடிவான பயன் ஒன்றே). ஆயின் நிர்குண ப்ரம்ம உபாஸனை மிகவும் கடினமானது. அதைக்காட்டிலும் ஸகுண ப்ரம்மமாகிய என்னை, பக்தி யோகத்தினால் தியானிப்பவர்களை ஸம்ஸாரக்கடலினின்று அதிசீக்கிரத்தில் கரையேற்றுகிறேன். என்னிடத்திலேயே மனது புத்தியை நிறுத்தினால் என் நிலைமையை அடைவாய்; இது கஷ்டமானால் அப்பியாசம் செய்ய வேண்டும். அதுவுமுடியாவிட்டால் என் பொருட்டு கர்மம் செய்—பகவத் கைங்கர்யம். இதற்கும் சக்தியின்றேல் நீ செய்யும் கர்மம் எதுவானாலும் அவற்றின் பலனில் இஷ்டம் வைக்காதே. கர்மபலனை விடுதல், த்யானம், ஞானம், அப்யாஸம் இவை ஒன்றைவிட ஒன்று விசேஷம். கர்மபலனை விடுவதால் உடனே மன அமைதியும் ஒழிவும் சாந்தியும் உண்டாகிறது.*

எனக்குப் பிரியமான பக்தர்கள்.—*எல்லாப் பிராணிகளுக்கும் துன்பம் செய்யாத மித்திரனாய், தயை பொருமையுடன் அஹங்கார மமகாரமின்றி, சுகதுக்கத்தை ஸமமாகக் கருதி, எப்போதும் சந்தோஷமாய், யோகியாய் மனோபுத்தியை என்னிடம் செலுத்தி யிருப்பர். உலகத்தாருடன் பரஸ்பரம் பயமின்றி, சந்தோஷம் பயம் கோபம் மனக்கலக்கமின்றி, அபேக்ஷையின்றி, பரிசுத்தமாய் சகல பிரயத்தனங்களையும் விட்டு, த்வேஷமும் வருத்தமுமின்றி, புண்ணிய பாபங்களை விட்டு*

பக்தியுடனிருப்பர். சத்ரு மித்திரன், மான அவமானம், சீதோஷ்ணம், சுகதுக்கம், நிந்தை ஸ்துதி இவற்றில் சமான புத்தியுடன் பற்றின்றி, மௌனியாய் கிடைத்தமட்டில் திருப்தியுடன், வாசஸ்தானமின்றி என்னிடம் மனம் நிலைத்த பக்தியுள்ளவர் இவ்விதமிருப்பவர்களே எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.

---

## அத்தியாயம் 13.

### க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்.

அர்ஜுனன்—ப்ரக்ருதி, புருஷன், க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன், ஞானம் இந்த 5 விஷயங்களைப்பற்றியும் அறிய விரும்புகிறேன்.

கிருஷ்ணன்—க்ஷேத்ரம் என்பது இந்த சரீரம். க்ஷேத்ரஜ்ஞன் - இந்த க்ஷேத்ரத்தை அறிபவன்; அது நானே. இதை அறிவதே ஞானம் (அதாவது தேக தத்துவம், ஆத்ம தத்துவத்தை அறிவது). க்ஷேத்ரம் எந்தத் தன்மை யுடையது எதிலிருந்து உண்டானது எவ்வித மாறுபாடுகளை யுடையது என்பதையும் க்ஷேத்ரஜ்ஞன் யார் எப்படிப்பட்ட மகிமை யுடையவர் என்பதையும் சுருக்கமாகச் சொல்லுகிறேன். இது விஷயம் பல ருஷிகளாலும் வேதங்களில் பலவிதமாயும் பாடப்பெற்று வருணிக்கப்பட்டுள்ளது :— க்ஷேத்ரம்—

| | |
|---|---|
| ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் | 5 மகா பூதங்கள். |
| அஹங்காரம் புத்தி அவ்யக்தம் | 3 |
| ஞானேந்திரியம் 5 கர்மேந்திரியம் 5 | 10 |
| மனது | 1 |
| சப்தாதி விஷயங்கள் | 5 |
| | 24 தத்துவங்கள். |

இந்திரியங்களுடன் விஷய சம்பந்தத்தினால் ஏற்படும் விருப்பு வெறுப்பு, இன்பதுன்பம், ஞான ஆத்ம அந்தக்கரண

விருத்தி, தைரியம் இவைகளெல்லாம் க்ஷேத்ரத்தின் சம்பந்தமானவை.

ஞானம்—எந்த குணங்களுடன், எந்தத் தன்மைகளுடன் கூடினவனானால் சரீர ஆத்ம தத்துவத்தை (உண்மையை) ஒருவன் அறிந்து ஞானத்தை அடையத் தகுதியுடையவன் ஆவானோ அந்த ஒழுக்கங்கள், பணிவு முதலான உத்தம குணங்கள், இவைகளே ஞானம். அவையாவன—தற்புகழ்ச்சி டம்பமின்றி, பிற ஹிம்ஸை செய்யாமல், பொறுமை நேர்மையுடன் பெரியோரை வழிபட்டு, சரீரம் மனது சுத்தமாய், மோக்ஷமார்க்கத்தில் உறுதியுடன் அடக்கமாய், ஆசையற்று, அகங்காரமின்றி, பிறப்பிறப்பு பிணிதுக்கம் இவற்றின் தோஷத்தை யறிந்து, மக்கள், மனைவி, வீடு இவற்றில் பற்றின்றி, ஏகாந்தத்தையே நாடி சலிக்காத பக்தியுடனிருப்பதே ஞானம். மற்ற எல்லாம் அஜ்ஞானம்.

க்ஷேத்ரஜ்ஞன்—எல்லா வஸ்துக்களிடத்தும் வியாபித்திருக்கும் பரப்ரம்மத்தை யறியவேண்டும். பகவான் ஆதியந்தமற்ற, சத்துமல்லாத அசத்துமல்லாத ஸர்வ வியாபியானவர். இந்திரியங்களற்றவர். ஒன்றிலும் ஒட்டாமல், ஆயின் எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டிருப்பவர். பூதங்களின் உள்ளும் வெளியுமிருப்பவர். ஸ்தாவர ஜங்கமமான எல்லா வஸ்துவும் அவரே. சூக்ஷ்மமானவர், அறிய முடியாதவர், தூரத்திலுமிருப்பவர், சமீபத்திலுமிருப்பவர், ஒன்றாக இருக்கும் அப்பரமாத்மா பிராணிகளுக்குள் வெவ்வேறாயிருப்பதுபோல் காணப்படுகிறார். பூதங்களையெல்லாம் உண்டாக்கி, காப்பாற்றிப் பிறகு தன்னிடம் லயப்படுத்திக்கொள்பவர். ஒளிகளுக்கு ஒளியானவர். அறிவு அறியவேண்டியது அறிபடுபொருள் மூன்றுமாகி எல்லார் ஹிருதயத்திலுமிருப்பவர்.

இவ்விதம் க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் (ஜ்ஞேயம்), ஞானம் இவற்றை சுருக்கமாகச்சொன்னேன்—இவற்றை அறிந்த என் பக்தன் முக்தியடைகிறான்.

ப்ரக்ருதி புருஷன்.—இவ்விரண்டும் ஆதியற்றவை. மாறுபாடுகளும் (விகாரம்) குணங்களும் ப்ரக்ருதியிலிருந்து உண்டாகின்றன.

காரியமாகிய தேகத்தையும் கருவிகளாகிய இந்திரியங்களை யும் உண்டுபண்ணுவதற்குக் காரணம் ப்ரக்ருதி அல்லது மாயை.

சுகதுக்காதிகளை அனுபவிப்பது ப்ரக்ருதிகாரணமாய் ஏற் பட்ட சரீரத்தில் தங்கியிருக்கும் ஜீவாத்மாவாகிய புருஷன்.

புருஷன் ப்ரக்ருதியுடன் ஸம்பந்தப்பட்டிருப்பதால் ப்ரகி ருதியிலிருந்துண்டான குணங்களை யனுபவித்து அந்தப்பற்றினால் பலஜன்மங்கள் ஏற்படுகிறது.

தேகத்திலுள்ள புருஷனது உண்மையானமேலான தன்மை ஈஸ்வரத்தன்மை—தேகத்துடன் சம்பந்தப்பட்டிருப்பதால் அத் தன்மை மறைந்திருக்கிறது. இவ்விதம் புருஷனையும் ப்ரக்ருதி யையும் குணங்களையும் உள்ளபடி அறிபவர் மறுபிறப்படை வதில்லை.

ஞானத்தையடையும் மார்க்கங்கள் அல்லது சாதனங்கள்.

சிலர் தியானத்தினாலும், சிலர் ஸாங்கிய யோகத்தினாலும், மற்றும்சிலர் கர்மயோகத்தினாலும், கடவுளை அறிகின்றனர்; தானா கவே உணரும்பரிபவமில்லாதவர் பிறரைக்கேட்டுத்தெரிந்துகொ ண்டு முக்தியடைகின்றார்கள். உலகில் சிருஷ்டிக்கப்படும் யாவும் க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞனது. (இவற்றின் மூலமாகிய மாயை+ கடவுள்) ஸம்பந்தத்தால் உண்டாகின்றன. எல்லாவற்றிலும் அழிவற்ற பரமேஸ்வரனை எவன் காண்கின்றானோ, அவன் உண்மையறிந்து தன்னை ஹிம்ஸித்துக்கொள்ளாமல், கர்மங்க ளெல்லாம் ப்ரக்ருதி சம்பந்தத்தால் ஏற்பட்டவையேயன்றி அவற் றிற்கு ஆத்மா கர்த்தாவல்ல என்பதை யுணர்ந்து, தனித்தனியாக காணப்படும் ப்ரபஞ்சவஸ்துக்களெல்லாம் ஏகமாகிய பரமாத்மா விலிருப்பதாயும் அதிலிருந்தே விரிவதாயும் அறிந்துமுக்தியடை கிறான். பரமாத்மா அநாதி, நிர்குணர், அழிவற்றவர் ஆதலின் இந்த சரீரத்தில் இருந்தாலும் கர்மங்களினால் பற்றப்படுவதில்லை. சூக்ஷ்மமான ஆகாயம் எல்லா வஸ்துவிலுமிருந்தாலும் அவை களில் ஒட்டுவதில்லை. அப்படியே ஒரே சூரியர் எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கச்செய்வது போல் க்ஷேத்ரஜ்ஞனை பரமேஸ்வரனும் சகல சரீரங்களையும் பிரகாசிப்பிக்கின்றார். இவற்றையெல்லாம்

ஞானமாகிய கண்களினால் அறிந்தவர் அப்பரம்பொருளுடன் ஒன்றாக ஐக்கியமாகின்றனர்.

## அத்தியாயம் 14.

### குணத்ரய விபாகயோகம்.

குணங்களின் 3 பிரிவைக் கூறும் பாகம்.

கிருஷ்ணன்.—ஞானங்களுள் சிறந்த ஞானத்தை மறுபடி சொல்லுகிறேன். இந்த ஞானத்தை யடைந்து என்னை யடைந்தவர் பிறப்பிறப்பைத்தாண்டினவர். மஹத்ப்ரம்மம் அல்லது ப்ரக்ருதி என்பது எனது கருப்பை. சகல ஜீவராசிகளும் உண்டாவதற்கு வேண்டிய மூலப்பொருள் என்னிடமிருந்து இக்கருப்பையில் வைக்கப்படுகிறது.

ப்ரக்ருதியிலிருந்து சத்துவகுணம் ரஜோகுணம் தமோகுணம் இம்மூன்று குணங்கள் உண்டாகி தேஹியை தேகத்துடன் பிணிப்பதற்குக்காரணமாகின்றன.

ஸத்துவகுணம்—அழுக்கற்று, பிரகாசமாய், துன்பத்தை யுண்டாக்காமல், ஆத்மாவை சுகப்பற்றினாலும் ஞானப்பற்றினாலும் கட்டுகிறது.

ரஜோகுணம்.—ஆசைக்கும் பற்றுக்கும் காரணமாய் கர்மசம்பந்தத்தினால் தேஹியைக்கட்டுகிறது.

தமோகுணம்.—அஜ்ஞானத்திலிருந்து உண்டாகி, அஜாக்கிரதை, சோம்பல், தூக்கம் இவற்றினால் தேஹியை மயக்கமடையச் செய்கிறது.

சத்துவம்—சுகத்தை யடையச் செய்கிறது.

ரஜஸ்—கர்மத்தில் ஏவுகிறது.

தமஸ்—ஞானத்தை மறைத்து அஜாக்கிரதையை உண்டுபண்ணுகிறது.

சத்துவம்.—உத்தமமான பரிபக்குவமடைந்தவரிடம் ரஜோகுண தமோகுணத்தை அடக்கி, தான் விருத்தியடைகிறது.

ரஜோகுணம்—மத்திமரிடம், சத்துவ தமோகுணங்களை யடக்கித்தான் மேலாய் நிற்கிறது.

தமோகுணம்—அதமர்களிடம் சத்துவ ரஜோகுணங்களைக் கீழ்ப்படுத்தித்தான் விருத்தியடைகிறது.

சத்துவகுணம்—விஷயங்களின் உண்மையை அறிந்து, அறிவும் ஞானமுமாகிய பிரகாசம் இந்திரியாதிகளில் உண்டாகும் போது சத்துவகுணம் மேலிட்டிருப்பதற்கு அடையாளம்.

ரஜோகுணம்.—மேலிட்டதற்கு அடையாளம், லோபம், கர்மங்களில் ப்ரவிருத்தி, ஓய்வின்மை, ஆசை இவைகள் மிகுதியாயிருப்பது.

தமோகுணம்.—விருத்தியடைந்தால் பகுத்தறிவின்மை, கர்மத்தில் முயற்சியின்மை, அஜாக்கிரதை, சோம்பல், மயக்கம் இவைஉண்டாகின்றன.

சத்துவகுணம்.—விருத்தியடைந்திருக்கும்போது மரணமடைந்தவன் பரிசுத்த உலகங்களை யடைகிறான்.

ரஜோகுணம்.—விருத்தியில் இறந்தவன் கர்மத்தில் பற்றும் விருப்பமுமுள்ள மனிதவர்க்கத்தில் பிறக்கிறான்.

தமோகுணம்.—விருத்தியில் இறந்தவன் மிருகவர்க்கத்தில் பிறக்கிறான்.

சாத்துவிக கர்மபலன்—பரிசுத்தமான சுகம்.

ரஜோகுண கர்மபலன்.—துக்கம்.

தமோகுண கர்மபலன்—மூடத்தன்மை.

சத்துவகுணத்திலிருந்து ஞானம் உண்டாகிறது.

ரஜோகுணத்திலிருந்து எத்தனை கிடைத்தாலும் திருப்தியில்லாத ஆசை உண்டாகிறது.

தமோகுணத்திலிருந்து அஜாக்கிரதை, விபரீத (திரிபான) ஞானம், அறிவின்மை இவைகள் உண்டாகின்றன.

சத்துவகுணத்திலுள்ளவர்-மேற்செல்லுகின்றார்கள்—உத்தமர்.

ரஜோகுணத்திலுள்ளவர்—நடுவிலிருக்கும் மத்திமர்.

தமோகுணத்தவர்—கீழ் நோக்கிச்செல்லும் அதமர்.

விவேகியானவன்—குணங்களே கர்த்தா, ஆத்மா கர்த்தா அல்ல என்பதை அறிந்து தேகாதிகளுக்குக் காரணமான முக்குணங்களையும் கடந்து பிறப்பிறப்பு மூப்பு துக்கத்தினின்று விடுபட்டு ப்ரம்மத்தை யடைகிறான்.

அர்ஜுனன்—இம்முக்குணங்களைக் கடந்தவனது லக்ஷணம் யாது? கடப்பது எப்படி?

கிருஷ்ணன்—குணாதீதன் ப்ரக்ருதியிலிருந்து உண்டான ப்ரகாசம் (சத்துவம்), ப்ரவ்ருத்தி (ரஜஸ்), மோகம் (தமஸ்) இவற்றை த்வேஷிக்காமலும், அபேக்ஷிக்காமலும், குணசம்பந்தத்தாலுண்டான சுகாதிகளினால் சலிக்காமல், குணங்களே கர்த்தா என்பதை யறிந்து துக்க சுகம், மண்கட்டி, கல் பொன், இஷ்ட அநிஷ்டம், மான அவமானம், மித்திரன் சத்துரு எல்லாவற்றையும் சமமாகக்கருதி கடவுள் பக்தியுடன் இருப்பான். பக்தியுடன் என்னை உபாஸிப்பவன் முக்குணங்களையும் தாண்டி ப்ரம்மத்துடன் லயமாகின்றான்.

## அத்தியாயம் 15.

### புருஷோத்தம ப்ராப்தி யோகம்.

சம்சாரமாகிய அஸ்வத்த (நிலையற்ற) விருக்ஷம்—பகவானை மூலமாயும் கீழே கிளைகளையுமுடையது. அழிவற்றது. வேதங்கள் அதன் இலைகள். அதன் கிளைகள் கீழ்மேலுலகங்களில் பரவியுள்ளது. சத்துவாதி குணங்களால் நன்றாய் வளர்ந்துள்ளது. சப்தாதிவிஷயங்கள் அதன் துளிர்கள். உலகத்தில் கர்மத்தையுண்டாக்கி தொடர்ச்சியாய் பரவியுள்ளது. ஆதி அந்தம் நடுவும் தெரியாமல் அத்தனை விஸ்தாரமாய் வளர்ந்துள்ளது. திடமான பற்றின்மை யென்னும் கோடரியினால் இந்த விருக்ஷத்தை வெட்டி இதன்மூலமாகிய கடவுளை யடைய முயற்சி செய்ய வேண்டும்.

அதை அடைபவர்—அகங்காரம், மோகம் நீங்கி, பற்றின்றி, ஒழிவடைந்து, த்வந்த்வங்களால் விடப்பட்டு பக்தியுடன் கூடிய ஞானிகள், அந்த அழிவில்லாத பதவியை யடைகின்றனர்.

உயர்ந்தபதவி—சூர்யன், சந்திரன், அக்கினி அந்த இடத்தைப் பிரகாசிக்கச் செய்வதில்லை (ஸ்வப்ரகாசமுள்ளது).

இதற்குத்தடை—(எனது அம்சமாய் அனாதியாயினும்) ப்ரகிருதி சம்பந்தப்பட்ட ஜீவன், இந்திரியங்களை உலகவிஷயங்களில் இழுத்து, ஒருதேகத்தைவிட்டு வேறொருதேகத்துக்குப் போகும்போதும் புஷ்ப வாஸனையைக் காற்றுக் கொண்டு போவதுபோல் இந்திரியங்களையும் உடன்கொண்டு செல்லுகின்றான். ஜீவன் இந்திரியங்களின் மூலமாய் விஷயங்களை யனுபவிக்கிறான். இந்த ஜீவனை அஜ்ஞானிகள் அறியார்; ஞானக்கண்ணுள்ளவர்கள் பார்க்கிறார்கள்.

புருஷோத்தமரது தன்மை. சூரிய சந்திராதிகளின் ப்ரகாசம் என்னுடைய பிரகாசமே. நானே பூமியிலிருந்து பிராணிகளைத் தாங்குகிறேன். பயிர்களை போஷிக்கின்றேன். பிராணிகளின் சரீரத்தில் அக்கினியாயும் வாயுவாயுமிருந்து அவர்கள் உண்ட அன்னத்தை ஜீரணிக்கிறேன். எல்லாரிடமும் அந்தர்யாமியா யிருக்கிறேன். நினைவு, அறிவு, மறதி எல்லாம் என்னாலேயே. வேதங்களைச் செய்தவன் வேதங்களினால் அறியத் தகுந்தவன் நான்.

க்ஷரம் அக்ஷரம்—அழியும் வஸ்துக்களெல்லாம் க்ஷரம். அவற்றுள் அழியாமல் சத்தாயிருப்பது அக்ஷரம். இவ்விரண்டுக்கும் மேலாய் ப்ரபஞ்சத்தைத் தாங்கும் மேலானவஸ்துவே பரமாத்மா. இவற்றுக்கெல்லாம் மேலானவனாதலின் நான் புருஷோத்தமன் எனப்படுகிறேன். என்னை இவ்விதமாயறிந்தவன் முழுமனதுடன் ஆராதிக்கின்றான். நான் சொன்ன இந்த அதிரகசியமான விஷயத்தை நீ யறிந்து ஞானமடைவாயாக.

## அத்தியாயம் 16

### ஸம்பத்விபாக யோகம்.

தெய்வசம்பத் அசுரசம்பத் என இருவிதம்.

தெய்வ சம்பத்துடையவன் அடைவது—பயமின்மை, பரிசுத்தம், ஞானம், யோகத்தில் உறுதி, தானம், தமம், சமம், யஜ்ஞம், அத்யயநம், தபஸ், நேர்மை, அஹிம்ஸை, உண்மை, கோபமின்மை, பரித்தியாகம், சாந்தி, கோட்சொல்லாமை, தயவு, அவாவின்மை, கருணை, தகாதகாரியஞ் செய்வதில் நாணம், சபலமின்மை, பெருந்தன்மை, பொறுமை, தைரியம், துரோகஞ்செய்யாமை, கர்வமின்மை இவைகள்.

அசுரசம்பத்துள்ளவன்—டம்பம், செருக்கு, தான் என்னும் மதிப்பு, கோபம், கொரேதத்தன்மை, அஜ்ஞானம் இவற்றுடன் ஜனித்தவன். தெய்வ சம்பத்து பந்தநிவ்ருத்தியையும் அசுரசம்பத்து சம்சார பந்தத்தையும் உண்டாக்குகிறது. சிருஷ்டிகள் தைவசிருஷ்டி அசுரசிருஷ்டி யென இருவிதம். அசுர சுபாவமுள்ளவன் தர்மமார்க்கத்தையும் அதர்ம நிவ்ருத்தியையும் அறியான். அவனிடம் சுத்தம், ஆசாரம், சத்தியம் இவை கிடையாது. வேதாதிகள், தர்மாதர்மம், ஈஸ்வரன், இவற்றில் நம்பிக்கையின்றி, ஸ்திரீ புருஷ சம்பந்தத்தினாலேயே உலகம் பிரவிருத்திக்கின்றதென்றும் இதற்குக் கடவுள் ஒருவர் இருக்கவேண்டிய அவசியமில்லையென்றும் சொல்லுகிறான். இந்தக்கொள்கையையுள்ள அற்ப அறிவும், குரூரகர்மமும் உள்ள அசுரசம்பத்துள்ளவர்கள் உலகத்தை கெடுப்பதற்கு அநேகர் இருக்கிறார்கள். இவர்கள் திருப்தியற்ற ஆசையும், டம்பம், கர்வம், மதமும் உடையவர்கள். எப்போதும் கவலையும் உலகவிஷயமே மேலான புருஷார்த்தமென்னும் எண்ணமும் கொண்டு ஆசையாகிய பாசத்தினால் கட்டப்பட்டு அதை அடையும்பொருட்டு அநியாயமாகப் பணம் சேர்ப்பவர்கள். இது எனது, இன்னும் எனக்குப் பொருள்வரும், இந்த சத்துரு என்னால் கொல்லப்பட்டான், மற்றவர்களையும் நான் கொல்லுவேன், நானே ஆள்பவன், அனுபவிப்பவன், அமையப் பெற்றவன், பலம், சுகம், சம்பத்து, உயர்குலம் இவற்றையுடை

யேன், எனக்கு சமானம் வேறு யாருமில்லை. என்னால் எல்லாம் முடியும் என்றிவ்வாறு பிரமையடைந்து மோஹமடைந்து விஷய போகங்களில் அழுந்தி அசுத்தமான நரகத்தில் விழுகின்றனர். தம்மைத்தாமே மதித்து, வணக்கமின்றி டம்பம் கர்வம் மதத்துடன் உண்மையான பக்தியின்றி, பெயருக்கு மாத்திரமேயான யஜ்ஞாதிகள் செய்து, அகங்காரம், இறுமாப்பு, ஆசை, கோபம் இவற்றையுடையவர்களாய், தெய்வநிந்தனை செய்யும் இவர்களை மறுபடி மறுபடி அசுரஜந்மமே உண்டாகும்படி செய்கிறேன்.

காமம், குரோதம், லோபம் இம்மூன்றுமே அசுரஜன்மத்துக்கு முக்கிய காரணம். ஆதலின் அவற்றைவிட்டு சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டதைச் செய்து விலக்கப்பட்டதை விட்டு நன்மையைச் செய்துகொண்டு மோக்ஷத்தை நாடவேண்டும்.

## அத்தியாயம் 17.

### ஶ்ரத்தாத்ரய விபாக யோகம்.

### 3 வித ஶ்ரத்தைகள்.

அர்ஜுனன்—ஶாஸ்திரங்களையெல்லாம் விட்டு, சிரத்தையுடன் கடவுளிடம் பக்தியுள்ளவர்கள் நிலைமை யாது?

கிருஷ்ணன் விடை—

ஶ்ரத்தை மூன்றுவிதம்—ஸாத்துவிக சிரத்தையுடையவர் தேவதைகளையும், ராஜஸ சிரத்தையினர் யக்ஷராக்ஷதர்களையும், தாமஸ சிரத்தையினர் பூதப்பிரேதங்களையும் பூஜிக்கின்றனர். சாஸ்திரவிதியை விட்டவர்களுடைய பக்தி, தாமஸ சிரத்தையுடையதாய் கீழான பக்தியாயிருக்கும்.

ஆகாரம் மூன்றுவிதம்—சாத்துவிக ஆகாரம்—ஆயுள், தைரியம், பலம், ஆரோக்கியம், சுகம், சந்தோஷம் இவற்றை விருத்தி செய்வதாய், ரசம் பசையுள்ளதாய், மனதுக்கு இன்பத்தை யுண்டாக்கும்.

ராஜஸ ஆகாரம்—அதிக கசப்பு, புளிப்பு, உப்பு, சூடு, காரம், வறட்சி இவற்றை யுண்டுபண்ணி, துக்கம், சோகம், வியாதி இவற்றைக் கொடுக்கும் உணவுகள்.

தாமஸ ஆகாரம்—பக்குவமாகாத, சாரமற்ற, துர்வாசனையுள்ள, பழையதான, மீதியான, அசுத்தமான ஆகாரம். இம்மூன்றுவித ஆகாரமும் சத்துவ, ரஜோ, தமோகுண, முடையவர்களால் முறையே விரும்பப்படுவது.

யஜ்ஞம் மூன்றுவிதம்—சாத்துவிக யஜ்ஞம்—பலனை விரும்பாமல் 'செய்யவேண்டும்' என்னும் உறுதியுடன் செய்யும் யஜ்ஞம். ராஜஸ யஜ்ஞம்—பலனை யிச்சித்து டம்பத்துக்காகச் செய்யும் யஜ்ஞம். தாமஸ யஜ்ஞம்—முறைப்படியின்றி, அன்னதானம், மந்திரம், தக்ஷிணை, சிரத்தை இவைகளின்றிச் செய்யும் யஜ்ஞம்.

தபஸ் மூன்றுவிதம்—

(1) சாத்துவிக தபஸ்—பலனை வேண்டாமல் செய்யப்படும். இது மூன்றுவிதம்.

சரீரத்தினால் செய்யும் தபஸ்—பெரியோர்களை வணக்கத்துடன் பூஜிப்பது, பரிசுத்தம், நேர்மை (நன்னடத்தை), பிரம்மசர்யம், பிறருக்கு எவ்விதத்திலும் துன்பம் செய்யாமை.

வாக்கினால் செய்யும் தபஸ்—பிறர் மனம் நோகச் செய்யாமல், உண்மையான, ஹிதமான வார்த்தைகளையே சொல்லுவது, வேதம் (அறிவை விருத்தி செய்யக்கூடிய வித்தைகளை) சொல்லிக்கொண்டு பிறருக்கும் உபதேசித்தல்.

மனதினால் செய்யும் தபஸ்—தெளிந்த அறிவு, நல்ல ஹ்ருதயம், மௌனமாய் கடவுளைத் தியானம் செய்வது, அடக்கம் முதலியன.

(2) ராஜஸ தபஸ்—பிறரால் மதிக்கப்படுவதற்காகவும் புகழ்ச்சிக்காகவும் டம்பத்துடன் செய்யும் தபஸ். இது சஞ்சலமானது, ஸ்திரமில்லாதது, பரலோக ஸாதனமற்றது.

(3) தாமஸ தபஸ்—தன் சரீரத்தை க்லேசித்துக்கொண்டு, பிறர் நாசத்தின்பொருட்டு செய்யப்படுவது.

தானம் மூன்றுவிதம்—சாத்துவிக தானம்—பிறருக்குக் கொடுக்கவேண்டியது தன் கடமை என்று உணர்ந்து புண்ணியமான இடங்களில், புண்ணியமான காலங்களில், சத்தான பாத்திரங்களுக்கு, பிரதியுபகாரத்தைக் கருதாமல் செய்யப்படும் தானம்.

ராஜஸ தானம்—பிரதி யுபகாரத்தை எதிர்பார்த்தும் பலனை விரும்பியும், வருத்தத்துடனும் கொடுக்கப்படும் தானம்.

தாமஸ தானம்—அசுத்தமான இடம் காலத்தில் அயோக்கியர்களுக்கு, பூஜை முதலியது இன்றி, அவமரியாதையுடன் கொடுக்கப்படுவது.

பரப்ரம்மத்தின் 3 பெயர்—ஓம் தத் ஸத். யஜ்ஞம், தானம், தபஸ் முதலிய கிரியைகள் ஓம் என்பதை சொல்லியும், தத் என்பதை உச்சரித்தும், மங்களகரமான காரியங்கள் எல்லாம் ஸத் என்பதை உச்சரித்தும் ஆரம்பிக்கப்படுகின்றன. இவைகளெல்லாம் சிரத்தையுடன் செய்யப்படுவது. சிரத்தையின்றி செய்யப்படுவதெல்லாம் அஸத் எனப்படும். அவை இகத்துக்கும் பரத்துக்கும் பிரயோஜனம் இல்லை.

## அத்தியாயம் 18.

அர்ஜுனன்.—ஸந்நியாஸம், தியாகம் இவ்விரண்டையும் விவரித்துச் சொல்லவேண்டும்.

கிருஷ்ணன்.—காமிய கர்மங்களை விடுவது ஸந்நியாஸம், சகல கர்மங்களின் பலனை விடுதல் தியாகம், கர்மத்தையே விட்டுவிடவேண்டுமென்று சிலரும், யஜ்ஞம், தானம், தபஸ் முதலானசத் கர்மங்களை மாத்திரம் விடக்கூடாது என மற்றவர்களும் சொல்லுகிறார்கள்.

தியாகம் 3 விதம்.—யஜ்ஞம், தானம், தபஸ் முதலான கர்மங்கள் சித்தத்தை பரிசுத்தப்படுத்துவதால் விடத்தகுந்ததல்ல. பற்றின்றி, தான் கருத்தா என்னும் அபிமானமின்றி, இந்த கருமங்களை செய்யவேண்டும். தாமத தியாகம்— அவிவேகத்தினால் நித்திய கர்மத்தையும் விட்டுவிடுவது. ராஜஸ தியாகம். சரீரப்பிரயாசைக்குப் பயந்து கர்மத்தை விடுவது. ஸாத்துவிக தியாகம்—நமது கடமை என்று கருதி செய்யவேண்டியதை அபிமானமும் பற்றுமின்றி பலனில் விருப்பமின்றிச் செய்வது. ஸாத்துவிகத் தியாகி ஸ்திரபுத்தியுடன் எதிலும் விருப்பு வெறுப்பின்றி கர்மபலனை விரும்பாமல் கர்மம் செய்வான்.

தேகத்துடன்கூடி யிருக்கும்வரைக்கும் கர்மத்தையே முழு வதும் விடுவது முடியாது. கர்மபலனை விடுபவனே தியாகி எனப்படுவான்.

கர்மபலன் 3 விதம்—இஷ்டமானது ஸ்வர்க்காதி அநுபவம், துக்கமானது—நரகாதி பிராப்தி, கலப்பானது அல்லது மிஸ்ரம். சுகதுக்கமிரண்டும் கலந்த மனிதஜன்மம். இவை பலனை உத்தேசித்து கர்மம் செய்பவர்களுக்கு. பலனை இச்சிக்காதவருக்கு, இவை ஒன்றுமில்லை.

கர்மத்துக்கு காரணம் 5.—சரீரம், ஆத்மா, இந்திரியம், அவற்றின் செய்கைகள், ஸர்வவியாபியான கடவுள். இவ்வுண்மையையறிந்து 'நான் கர்த்தா,' என்னும் எண்ணம் இன்றி தொழில் செய்பவன் பலாபலனினால் கட்டுப்படுவதில்லை.

கர்மம் செய்யும்படி ஏவுவது 3.—அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன்.

கர்மத்துக்கு இருப்பிடம் 3.—இந்திரியங்கள், செய்யப்படும் கர்மம், செய்பவன்.

ஞானம் 3 விதம்.—குணங்களுக்குத் தகுந்தபடி. சாத்துவிக ஞானம்—கடவுள் ஒருவரே; ப்ரபஞ்சத்தில் தனித்தனியாக காணப்படும் எல்லாவஸ்துக்களிலும் கடவுள் ஒரே தொடர்ச்சியாக வியாபித்திருக்கிறார் என்னும் உணர்ச்சி அல்லது அறிவு. ராஜஸ ஞானம்.—ஒரே கடவுள் எல்லாவற்றிலும் அந்தர்யாமியாயிருக்கிறார் என்பதை உணராமல் ஒவ்வொன்றிலுமுள்ள ஜீவனை தனித்தனியானது என்று நினைக்கும் அறிவு.

தாமஸ ஞானம்.—ஜீவேஸ்வரர்களது ஸர்வ வியாபகத்தன்மையையும் உண்மையையும் உணராமல் குறுகின எண்ணத்துடன் அற்பவிஷயங்களையும் அற்பபலனையுமே பூர்த்தியாகக் கருதும் ஞானம்.

கர்மம் 3 விதம்.—பலாபேக்ஷையின்றி, கர்த்தா என்னும் அபிமானமின்றி, விருப்பு வெறுப்பின்றி, செய்யப்படுவது சாத்துவிக கர்மம். பலனிலிச்சையுடன். கர்த்தா என்னும் அகங்காரத்துடன், சிரமத்துடன், செய்யப்படுவது ராஜஸ கர்மம் முன்.

யோசனையின்றி, பலன், பொருள் விரயம், தன் சக்தி இவற்றை யெல்லாம் கவனிக்காமல் அவிவேகத்தினுல் செய்யப்படுவது தாமஸ கர்மம்.

கர்த்தா 3 விதம்—ஸாத்துவிக கர்த்தா "நான் கர்த்தா" என்னுமல் பலாபேக்ஷையின்றி, தைரியம் முயற்சியுடன், காரிய முடிவில் ஏற்படும் ஜயாபஜயத்தில் விருப்பு வெறுப்பின்றி, கர்மம் செய்பவன். ராஜஸ கர்த்தா—பலனில் விருப்பத்துடன், பிறர் பொருளில் இச்சையுடன், பர ஹிம்சை செய்து, ஜயாபஜயத்தில் சந்தோஷமும் வியஸனமும் அடைபவன். தாமஸ கர்த்தா—மன அமைதி, விவேகம், வணக்கம் அற்று, சோம்பல், வருத்தம், பிறர் மேல் பகை இவைகளை யுடையவனுய் காலதாமதம் செய்பவன்.

புத்தி 3 விதம்.—ஸாத்துவிக புத்தி—உலகத்தின் தோற்ற ஒடுக்கம், செய்யத்தகுந்தது செய்யத்தகாதது, எதற்குப் பயப்பட வேண்டும் எதற்குப் பயப்படவேண்டாம், பந்தப்படுத்துவது எது, விடுதலை யடைவது எவ்விதம் என்னும் இவ்விஷயங்களை யாராய்ச்சி செய்யும் புத்தி. ராஜஸ புத்தி—தர்ம அதர்மம், செய்யத்தகுந்தது தகாதது முதலானவற்றை நிச்சயமாக உள்ளபடி உணரும் சக்தியும் அறிவுமின்றி சந்தேகமாகத் தெரிந்துகொள்ளும் புத்தி. தாமஸ புத்தி—தர்மாதர்ம விஷயங்களை விபரீதமாக அல்லது திரிபாக ஒன்றை மற்றொன்முக அறியும் புத்தி.

தைரியம் 3 விதம்.—சாத்துவிக தைரியம் வெளி விஷயங்களில் செல்லாமல் மனது இந்திரியங்களை ஒரே நிலையில் நிறுத்தி சலிக்காமலிருப்பதற்கு வேண்டிய தைரியம். ராஜஸ தைரியம்—தர்மார்த்த காமாதிகளில் பற்றுடன் பலனை அபேக்ஷித்து அதற்கு அனுகூலமாய் கர்மத்தை செய்வதற்கு வேண்டிய தைரியம். தாமஸ தைரியம்—இது அசட்டு தைரியம், விவேகமில்லாத தைரியம். நித்திரை, பயம், துக்கம், சோர்வு, மதம் இவற்றை விடாமலிருக்கும் மூட தைரியம்.

சுகம் 3 விதம்.—துக்கத்தைத் தவிர்த்து உண்மையான சந்தோஷத்தை யடைவதே சுகம் எனப்படும். சாத்துவிக சுகம்—மன அமைதியினுலும் தெளிந்த அறிவினுலு முண்டாவது. இது ஆரம்பத்தில் விஷம்போன்றும் முடிவில் அம்ருதம் போன்று

மிருப்பது. ராஜஸ சுகம்—விஷய இந்திரிய சம்பந்தத்தினுலுண்டாகி, ஆரம்பத்தில் அம்ருதம் போன்றும், முடிவில் விஷம் போன்று மிருப்பது. தாமத சுகம்—தூக்கம், மயக்கம், சோம்பல், அசட்டை இவற்றினுலுண்டாகும் சுகம்.

தேவர், மனிதர் முதலிய யாவரும் முக்குணங்களின் வசப்பட்டவரே.

நான்கு வருணத்தவரும் அவரவரது சத்துவாதி குணங்களுக்கேற்பட்ட கர்மங்களை யுடையவர்.

ப்ராம்மணரின் கர்மமும் குணமும்—மனதையும் இந்திரியங்களையும் அடக்கி, மனோவாக்குக் காயங்களால் பிறருக்குபகாரமான தபஸைச் செய்துகொண்டு, மனதும் சரீரமும் சுத்தமாய், பொறுமையுடன், நன்னெறியில் நடந்துகொண்டு, சாஸ்திர ஞானம் அனுபவ அறிவுடன், கடவுள் ஒருவர் உண்டு என்னும் நம்பிக்கையுடனும் பக்தியுடனும் இருக்கவேண்டும்.

க்ஷத்திரியர்களது குணமும் கர்மமும்.—பராக்கிரமம், கீர்த்தி, தைரியம், புத்திக்கூர்மை, சாமர்த்தியம், போரில் புறங்கொடாமை, கொடை, பிரஜைகளை அடக்கி அன்புடன் ஆளும் சக்தி முதலானவை.

வைஸ்யர்களது குணகர்மம்.பயிரிடுதல், ஆடுமாடுகளைக் காத்தல், வியாபாரம் செய்தல்.

ஸூத்திரர்களது குணகர்மம்.–மற்ற மூன்று வருணத்தாருக்கும் ஊழியம் செய்வது.

அவனவன் தனக்கு விதித்துள்ள கர்மம் சிரேஷ்டமில்லாவிட்டாலும் அதை கிரமமாகச் செய்துகொண்டு ஸர்வ வியாபியான கடவுளை பக்தியுடன் பூஜித்துக்கொண்டிருந்தால் அவன் பாபத்தை அடையமாட்டான். எவனும் தன் கர்மத்தை விடக்கூடாது. எந்தவிதக் கர்மமும் புகையினுல் சூழப்பட்ட அக்கினி போல் தோஷத்தை யுடையதே. ஆனுல் பற்றின்றி, பலாபேக்ஷையின்றி, ஆசையற்று தன் கருமத்தை செய்பவன், கர்மம் நீங்கின நிலைமையை அடைகிறுன்.

பரப்பிரம்மத்தை அடைவதற்கு வேண்டிய ஞானமும் சாதனமும்.—தெளிந்த அறிவுடன், தைரியத்தினால் இந்திரியாதிகளை அடக்கி, விருப்பு வெறுப்பற்று, ஏகாந்தத்தை விரும்பி, ஆகாராதிகளில் மிதமாய், மனோவாக்குக் காயங்களை அடக்கி, ப்ரம்மத்தியானத்திலேயே எப்போதும் லயித்து, ஆசை, கோபம், அபிமானம், மமதை இவற்றைவிட்டு, ஒழிவை யடைந்தவனே முக்திக்கு அர்ஹன். இவன் சாந்த மனதுடன் விருப்பு, வெறுப்பு, சுகம், துக்கம் முதலிய த்வந்த்வ மின்றி, எல்லாரிடத்திலும் சமமாயிருந்துகொண்டு, கடவுளது தன்மையை ஐயந்திரிபு இன்றி உள்ளபடி உணர்ந்து, எந்தக்கர்மம் செய்தாலும் அதை ஈச்வர அர்ப்பணமாகச் செய்து, கடவுளிடத்தில் சிரேஷ்டமான நம்பிக்கையுடனும் பக்தியுடனு மிருந்து, முடிவில் உலகபந்தத்திலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை யடைகிறான்.

ஹே அர்ஜுனா, என்னிடத்திலேயே உன் மனதை வைத்து உன் கர்மத்தைச் செய். யுத்தம் செய்யமாட்டேன் என்று உன் ரஜோகுண புத்தியினால் எண்ணுவது வீண். உன் செயலன்றியே இந்த யுத்தத்தை நீ செய்யப்போகிறாய். உன்னிலுள்ள ஈச்வரனது மாயையால் நீ ஆட்டுவிக்கப்படுகிறாய். ஆதலால் எல்லாம் வல்ல கடவுளையே சரணமடைந்து, மன நிம்மதி அல்லது ஒழிவை யடைந்து, நித்தியமான பதவியை அடைவாயாக. அதிரகஸ்யமான, யாவருக்குமே எளிதில் விளங்கக்கூடாத இந்த கீதா சாஸ்திரம் உனக்கு இதுவரை உபதேசிக்கப்பட்டது. என் பிரியமான மித்திரன் நீ ஆதலால் உனக்கு ஹிதமானதைச் சொல்லுகிறேன். என்னிடத்திலேயே மனதை நிறுத்தி என்னிடத்திலேயே பக்தி பூண்டு ஆராதிப்பாயாக, என்னையே வணங்கி என்னையே நம்பி அடைவாயாக. உன் ஸகல தர்மங்களின் பலனைவிட்டு என்னையே சரணமடைந்தால் உன் பாபங்களினின்றும் உன்னை விடுவிப்பேன். வருந்தாதே. எல்லாவிதத்திலும் பரிபக்குவமுடையவனுக்கே கீதை உபதேசிக்கப்படவேண்டும். என்னிடம் பக்தியுடன் கீதையைக் கற்று அறிந்து பிறருக்கும் உபதேசிப்பவன் எனக்கு பிரியமானவன். அவனே என்னை ஞானமாகிய யஜ்ஞத்தினால் பூஜிக்கின்றான்.

அர்ஜுனன்—ஹே அச்யுத, தங்களது அனுக்கிரகத்தால் என் அஜ்ஞானம் நீங்கி சந்தேகம் தெளிந்து ஆத்தும ஸ்வரூபத்து வத்தை யடையும் நினைவு உண்டாயிற்று. அதன்படி நடந்து கொள்ளுவேன்.

ஸஞ்ஜயன்-வியாசர் அனுக்கிரகத்தால் அதிரகசியமான கீதா சாஸ்திரத்தை, கிருஷ்ணபரமாத்மா அர்ஜுனனுக்கு உபதேசித்த மிக ஆச்சர்யமான ஞானத்தை நான் கேட்டேன். அதனால் மிகுந்த ஆனந்தத்தை யடைகிறேன். ஹே திருதராஷ்ட்ர அரசனே!, பகவானுடைய விஸ்வரூபத்தை நினைத்து மயிர் கூச்சத்தையும் வியப்பையும் ஆச்சர்பத்தையும் அடைகிறேன். சிறந்த யோகியாகிய கிருஷ்ணபரமாத்மாவும் அர்ஜுனனும் இருக்கும் பக்கத்திலேயே இராஜ்ய லக்ஷ்மியும் ஜயமும் தர்மமும் நியாயமும் அபிவிருத்தியு மிருக்கின்றன.



श्रीभगवानुवाच—

अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥

3. அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவ: அத்யாத்மம் உச்யதே
பூதபாவோத்பவகர: விஸர்க: கர்மஸம்ஜ்ஞித:.

பகவான் விடை—

அக்ஷரம் - க்ஷரம் (அழிவு) இல்லாததும், பரமம் - எல்லா வற்றுக்கும் மேலானதாயுமிருப்பது, ப்ரஹ்ம - பரப்ரம்மம், ஸ்வ பாவ: அத்யாத்மம் உச்யதே - (ப்ரஹ்மம்) ஸ்வபாவம் (நிர்குணப் ரம்மமாயிருத்தலை) அத்யாத்மம் என்று சொல்லப்படுகிறது. பூத பாவ உத்பவகர: விஸர்க: - ஜீவ வஸ்துக்களுக்கெல்லாம் உற்பத் தியை செய்கிற ஈஸ்வரஸ்ருஷ்டியானது, கர்ம ஸம்ஜ்ஞித: - கர்மம் என்று சொல்லப்படுகிறது.

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥

4. அதிபூதம் க்ஷர: பாவ: புருஷ: ச அதிதைவதம்
அதியஜ்ஞ: அஹம் ஏவ அத்ர தேஹே தேஹப்ருதாம் வர.

அதிபூதம் - அதிபூதம் என்பது, பாவ: க்ஷர: - உண்டாகி நசிக்கும் வஸ்துக்கள். புருஷஸ்ச அதிதைவதம் - சரீரத்தில் தங்கி யிருக்கும் ஆத்மாவே அதிதைவம். மனிதருள் உத்தமனே !, அத்ர தேஹே - இந்த தேகத்தில், அதியஜ்ஞ: அஹம் ஏவ - அதியஜ்ஞன் நானே.

अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेबरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५ ॥

5. அந்தகாலே ச மாம் ஏவ ஸ்மரந் முக்த்வா கலேபரம்
ய: ப்ரயாதி ஸ: மத்பாவம் யாதி நாஸ்தி அத்ர ஸம்ஶய:.

ய: - எவன், அந்தகாலே ச - மரணகாலத்தில், மாமேவ ஸ்ம ரந் - என்னையே தியானித்துக்கொண்டு, கலேபரம் முக்த்வா ப்ரயாதி - சரீரத்தைவிட்டுப் போகிறானோ, ஸ: மத்பாவம் யாதி - அவன் என் தன்மையையே யடைகிறான். அத்ர ஸம்ஶய: ந அஸ்தி - இதில் சந்தேகமில்லை.

यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम् ।
तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥ ६ ॥

6. யம் யம் வா அபி ஸ்மரந் பாவம் த்யஜதி அந்தே கலேபரம்
தம் தம் ஏவ ஏதி கௌந்தேய ஸதா தத்பாவ பாவித:.

ஹே கௌந்தேய!, ய: அந்தே - எவன் மரணத்தருவாயில், யம் யம் வா அபி பாவம் ஸ்மரந் - எந்த எந்தப் பொருளை ஸ்மரித்துக்கொண்டு, கலேபரம் த்யஜதி - தேகத்தை விடுகிறானோ, ஸ: - அவன், ஸதா - எப்போதும், தத்பாவபாவித: - அதையே சிந்திப்பவனாய், தம் தம் ஏவ ஏதி - அததையே யடைகிறான்.

तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च ।
मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयः ॥ ७ ॥

7. தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாம் அநுஸ்மர யுத்ய ச
மயி அர்பித மநோபுத்தி: மாம் ஏவ ஏஷ்யஸி அஸம்ஶய:.

தஸ்மாத் - ஆதலால், ஸர்வேஷு காலேஷு - எப்போதும், மாம் அநுஸ்மர - என்னை தியானித்துக்கொண்டிரு. யுத்ய ச - யுத்தஞ் செய். மயி அர்பித மநோபுத்தி: - என்னிடத்தில் அர்பித்த மனது புத்தியுடன், மாமேவ ஏஷ்யஸி - என்னையே அடைவாய், அஸம்ஶய: - சந்தேகமில்லை.

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८ ॥

8. அப்யாஸயோக யுக்தேந சேதஸா ந அந்யகாமிநா
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த அநுசிந்தயந்.

ஹே பார்த்த!, அப்யாஸயோகயுக்தேந - அப்பியாசயோகத்தில் மனது ஒரு நிலைப்பட்டு, ந அந்யகாமிநா சேதஸா-வேறொன்றிலும் செல்லாத மனதினால், திவ்யம் பரமம் புருஷம் - ப்ரகாசமான மேலான பரம்பொருளை, அநுசிந்தயன் - தியானிக்கிறவன், யாதி - (அப் பரம்பொருளையே) அடைகிறான்.

**कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।**
**सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥**

9. கவிம் புராணம் அநுசாஸிதாரம் அணோ: அணீயாம்ஸம் அநுஸ்மரேத் ய:
ஸர்வஸ்ய தாதாரம் அசிந்த்யரூபம் ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்.

ய: - எவன், கவிம் - எல்லாம் அறிந்தவனும், புராணம் - அநாதிகாலமாயுள்ளவனும், அநுசாஸிதாரம் - எல்லாவற்றையும் ஆள்பவனும், அணோரணீயாம் ஸம் - அணுவைக்காட்டிலும் அதி நுட்பமானவனும், ஸர்வஸ்ய தாதாரம் - எல்லாவற்றையும் சிருஷ்டிப்பவனும், அசிந்த்யரூபம் - சிந்திக்கமுடியாத ரூபமுள்ளவனும், ஆதித்யவர்ணம்-சூர்யனைப்போன்ற காந்தியுடையவனும், தமஸ: பரஸ்தாத் - அஜ்ஞான இருளைக்கடந்தவனுயுமிருக்கிறானோ அந்த பரமேசுவரனை, அநுஸ்மரேத் ஸ: - இடைவிடாமல் த்யானிப்பவன், தம் யாதி - அப் பரமேசுவரனை யடைகிறான்.

**प्रयाणकाले मनसाऽचलेन भक्त्या युक्तो योगबलेन चैव ।**
**भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक् स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥**

10. ப்ரயாணகாலே மநஸா அசலேந பக்த்யா யுக்த: யோகபலேந ச ஏவ
ப்ருவோ: மத்யே ப்ராணம் ஆவேஶ்ய ஸம்யக் ஸ: தம் பரம் புருஷம் உபைதி திவ்யம்.

அசலேந மநஸா பக்த்யா - ஸ்திரமனதுடனும் பக்தியுடனும் யோகபலேந யுக்த: ஸ: - யோகபலத்துடனும் கூடிய அவன், ப்ரயாணகாலே - மரணத்தருவாயில், ப்ராணம் - ப்ராணனை, ப்ருவோ

மத்யே ஸம்யக் ஆவேஶ்ய - இருபுருவங்களுக்கிடையில் சரியாக நிறுத்தி, தம் திவ்யம் பரம் புருஷமேவ - (மேற் சொன்ன) அந்த திவ்யத்தன்மையுடைய பரமேஶ்வரனையே, உபைதி - அடைகிறான்.

यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद्यतयो वीतरागाः।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये॥

11. யத் அக்ஷரம் வேதவிதः வதந்தி விஶந்தி யத் யதயः வீதராகாः
யத் இச்சந்தः ப்ரஹ்மசர்யம் சரந்தி தத் தே பதம் ஸங்க்ர
ஹேண ப்ரவக்ஷ்யே.

வேதவிதः - வேதமறிந்தவர்கள், யத் அக்ஷரம் வதந்தி - எதை அழிவற்றதாக சொல்லுகின்றனரோ, வீதராகாः யதயः - ஆசைகளை ஒழித்த யதிகள், யத் விஶந்தி - எதைச் சென்று அடைகிறார்களோ, யத் இச்சந்தः - எதை விரும்புகிறவர்கள், ப்ரஹ்மசர்யம் சரந்தி - ப்ரம்மசாரிகளாய் காலங்கள்ளுகிறார்களோ, தத் பதம் - அந்தப் பதவியைக்குறித்து, தே - உனக்கு, ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே - சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்.

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।
मूर्ध्न्याधायाऽऽत्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥१२॥

12. ஸர்வத்வாராணி ஸம்யம்ய மநः ஹ்ருதி நிருத்ய ச
மூர்த்நி ஆதாய ஆத்மநः ப்ராணம் ஆஸ்திதः யோகதாரணாம்.

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥ १३ ॥

13. ஓம் இதி ஏகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாம் அநுஸ்மரன்
யः ப்ரயாதி த்யஜந் தேஹம் ஸः யாதி பரமாம் கதிம்.

யः - எவன், ஸர்வத்வாராணி ஸம்யம்ய - எல்லா இந்திரிய வழிகளையும் அடக்கி, மநः ஹ்ருதி நிருத்ய - மனதை ஹ்ருதய கமலத்தில் ஒடுக்கி, ஆத்மநः ப்ராணம் மூர்த்நி ஆதாய ச - தனது ப்ராணனை சிரஸில் நிறுத்தி, யோகதாரணம் ஆஸ்திதः-யோகத்தை

அநுஷ்டிப்பதற்கு முயற்சித்தவனாய், ப்ரம்ம - ப்ரம்மத்தின் பெயராகிய, ஓம் இதி ஏக அக்ஷரம் வ்யாஹரந் - ஓம் என்னும் ஒரு அக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு, மாம் அநுஸ்மரந் - என்னை தியானித்துக்கொண்டே, தேஹம் த்யஜந் ப்ரயாதி - தேகத்தை விட்டுச் செல்கின்றானோ, ஸ:-அவன், பரமாம் கதிம் யாதி - உயர்ந்த நிலையை யடைகிறான்.

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥ १४ ॥

14. அநந்யசேதா: ஸததம் ய: மாம் ஸ்மரதி நித்யஶ:
தஸ்ய அஹம் ஸுலப: பார்த நித்யயுக்தஸ்ய யோகிந:.

ஹே பார்த்த!, ய: - எவன், அநந்யசேதா: - வேறொன்றிலும் செல்லாத மனதுடன், ஸததம் - எப்போதும், மாம் - என்னை, நித்யஶ: ஸ்மரதி - எப்போதும் தியானித்துக்கொண்டிருக்கிறானோ, தஸ்ய நித்யயுக்தஸ்ய யோகிந: - அப்படிப்பட்ட எப்போதும் ஒருநிலைப்பட்ட யோகிக்கு, அஹம் - நான், ஸுலப: - எளிதில் கிடைக்கத் தகுந்தவன்.

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५ ॥

15. மாம் உபேத்ய புந: ஜந்ம து:காலயம் அஶாஶ்வதம்
ந ஆப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமாம் கதா:.

மாம் உபேத்ய - என்னை யடைந்து, பரமாம் ஸம்ஸித்திம் - மேலான மோக்ஷத்தை, கதா: மஹாத்மாந: - அடைந்த மஹாத்மாக்கள், புந: - மறுபடி, துக்காலயம் - துக்கங்களுக் கிருப்பிடமானதும், அஶாஶ்வதம் - நித்தியமல்லாததுமான, ஜந்ம - ஜனனத்தை, ந ஆப்நுவந்தி - அடைகிறதில்லை.

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥

16. ஆப்ரஹ்ம ஃவநாத் லோகா: புநராவர்திந: அர்ஜுந
மாம் உபேத்ய து கௌந்தேய புந: ஜந்ம ந வித்யதே.

ஹே அர்ஜுந !, ஆப்ரம்ம பவநாத் லோகாத் - ப்ரம்மலோகம் முதலான சகல உலகங்களும், புநர் ஆவர்திந: - மறுபடி உண்டாகக்கூடியவை, ஹே கௌந்தேய !, மாம் உபேத்ய து - என்னை அடைந்தாலோ, புநர்ஜந்ம ந வித்யதே - மறுஜன்மம் கிடையாது.

सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदुः ।
रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः ॥ १७ ॥

17. ஸஹஸ்ரயுக பர்யந்தம் அஹ: யத் ப்ரஹ்மண: விது:
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தே அஹோராத்ர வித: ஜநா:.

அஹோராத்ர வித: ஜநா: - பகலிரவு இவற்றை யறிந்த ஜனங்கள் (யே - எவர்களோ), தே - அவர்கள், ப்ரம்மண: அஹ: - ப்ரம்மாவின் பகல், யத் - எதுவோ (தத் - அது), ஸஹஸ்ரயுக பர்யந்தம் - 1000 யுகங்களை முடிவாயுடையதாயும், ராத்ரிம் - இரவை, யுக ஸஹஸ்ராந்தரம் - 1000 யுகங்களை முடிவாயுடையதாயும், விது: - அறிகிறார்கள்.

अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे ।
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८ ॥

18. அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரஃவந்தி அஹராகமே
ராத்ரி யாகமே ப்ரலீயந்தே தத்ர ஏவ அவ்யக்த ஸம்ஜ்ஞகே.

அஹராகமே - பகல் வரும்போது, அவ்யக்தாத் - அவ்யக்தத்திலிருந்து, ஸர்வா: வ்யக்தய: - ப்ரபஞ்சத் தோற்றங்களெல்லாம், ப்ரபவந்தி - வெளிப்படுகின்றன. ராத்ரி ஆகமே - இரவு வரும்போது, அவ்யக்த ஸம்ஜ்ஞகே - அவ்யக்தமென்னும் பெயருடைய, தத்ர ஏவ - அதனுள்ளே - ப்ரலீயதே - மறைந்து போகின்றன.

भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।
रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥ १९ ॥

19. பூ⁴தக்³ராம: ஸ: ஏவ அயம் பூ⁴த்வா பூ⁴த்வா ப்ரலீயதே
ராத்ர்யாக³மே அவஶ: பார்த² ப்ரப⁴வதி அஹராக³மே.

ஹே பார்த்த!, ஸ: ஏவாயம் பூதக்ராம: - (முன் கல்பத்திலி ருந்த) அதே இந்த பூதவர்க்கங்கள், அவஶ: - வசமின்றி, பூத்வா பூத்வா - பிறந்து பிறந்து, ராத்ரியாகமே - இரவு வரும்போது, ப்ரலீயதே - ஒடுங்கி மறைகின்றது, அஹராகமே - பகல் வரும் போது, ப்ரபவதி - வெளிப்பட்டுத் தோன்றுகின்றது.

**परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।**
**यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥ २० ॥**

20. பர: தஸ்மாத் து பா⁴வ: அந்ய: அவ்யக்த: அவ்யக்தாத் ஸநா
ய: ஸ: ஸர்வேஷு பூ⁴தேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி. [தந:

து - ஆனால், தஸ்மாத் அவ்யக்தாத் - அந்த அவ்யக்தத்தைக் காட்டிலும், அந்ய: - வேறானதாயும், அவ்யக்த: - புலன்களால் அறியமுடியாததாயும், பர: ஸநாதந: - மேலானதும் நித்யமான தும், ய: பாவ: - எந்த வஸ்து (இருக்கிறதோ), ஸ: - அது, ஸர் வேஷு பூதேஷு - எல்லா பூதங்களும், நஶ்யத்ஸு - நாசமடைந் தாலும், ந விநஶ்யதி - நாசமடைவதில்லை.

**अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् ।**
**यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ २१ ॥**

21. அவ்யக்த: அக்ஷர: இதி உக்த: தம் ஆஹு: பரமாம் க³திம்
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத் தா⁴ம பரமம் மம.

(ய:) அவ்யக்த: அக்ஷர: இதி உக்த: - (எந்த பரப்ரஹ்ம மானது) காணமுடியாதது, நாசமில்லாதது என்று சொல்லப்படு கிறதோ, தம் - அந்த ப்ரம்மத்தை, பரமாம் கதிம் ஆஹு: - உயர்ந்த நிலையென்று (வேதங்கள்) முறையிடுகின்றன. யம் ப்ராப்ய ந நிவர் தந்தே - எதை யடைந்து (ஒருவன்) திரும்பி வருவதில்லையோ (பிறப்பதில்லையோ), தத் மம பரமம் தாம - அது என்னுடைய மேலான மோக்ஷபதம்.

**पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।**
**यस्यान्तः स्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥२२॥**

22. புருஷ: ஸ: பர: பார்த² ப⁴க்த்யா லப்⁴ய: து அநந்யயா
யஸ்ய அந்தஸ்தா²நி பூ⁴தாநி யேந ஸர்வம் இத³ம் ததம்.

ஹே பார்த்த!, யஸ்ய - எவனுக்குள், பூதாநி - ப்ராணிகளெல்லாம், அந்தஸ்த்தாநி - இருக்கின்றனவோ, யேந - எவனால், ஸர்வம் இதம் ததம் - இவ்வெல்லா ப்ரபஞ்சமும் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றதோ, ஸ: பர: புருஷ: - அந்தப் பரம ஈஶ்வரன், அநந்யயா பக்த்யா து - மற்றொன்றிலுமில்லாத பக்தியினாலேயே, லப்ய: - அடையத்தகுந்தவன்.

**यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।**
**प्रयाता यन्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥ २३ ॥**

23. யத்ர காலே து அநாவ்ருத்திம் ஆவ்ருத்திம் ச ஏவ யோகி³ந:
ப்ரயாதா: யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி ப⁴ரதர்ஷப⁴.

ஹே பரதர்ஷப!, யத்ரகாலே து-எந்தக்காலத்தில், ப்ரயாதா: யோகிந: - (சரீரத்தைவிட்டு) சென்ற யோகிகள், அநாவ்ருத்திம் - அபுனர் ஜன்மத்தையும் (திரும்பி பிறவாமை), ஆவ்ருத்திம் ச ஏவ - புனர் ஜனனத்தையும் (திரும்பி பிறத்தலையும்), யாந்தி - அடைகிறார்களோ, தம் காலம் - அந்தக்காலத்தை, வக்ஷ்யாமி - சொல்லுகிறேன்.

**अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।**
**तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥**

24. அக்³நி: ஜ்யோதி: அஹ: ஶுக்ல: ஷண்மாஸா: உத்தராயணம்
தத்ர ப்ரயாதா: க³ச்ச²ந்தி ப்³ரஹ்ம ப்³ரஹ்மவித³: ஜநா:.

அக்நி: - அக்கினி, ஜ்யோதி: - ஒளி, அஹ: - பகல், ஶுக்ல: - ஶுக்லபக்ஷம், உத்தராயணம் ஷண்மாஸா:- உத்தராயண 6 மாதங்கள், தத்ர - இவைகளில், ப்ரயாதா: - தேகத்தை விட்டுப்போன,

ப்ரம்மவிதః ஜநாஃ - ப்ரம்மஞானிகளான ஜனங்கள், ப்ரம்ம கச்சந்தி- ப்ரம்மத்தையே யடைகிறார்கள்.

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

25. தூமஃ ராத்ரிஃ ததா க்ருஷ்ணஃ ஷண்மாஸாஃ தக்ஷிணாயநம்
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிஃ யோகீ ப்ராப்ய நிவர்ததே.

தூமஃ - புகை, ராத்ரிஃ - இரவு, ததா - அப்படியே, கிருஷ்ணஃ- கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம் ஷண்மாஸாஃ- தக்ஷிணாயன 6 மாதம், தத்ர - இவைகளில் (ப்ரயாதாஃ - இறந்துபோன), யோகீ - யோகியானவன், சாந்த்ரமஸம் ஜ்யோதிஃ - சந்திரலோகத்தை, ப்ராப்ய- அடைந்து, நிவர்ததே - திரும்பி மறு ஜன்மத்தை யடைகிறான்.

शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।
एकया यात्यनावृत्तिमन्ययाऽऽवर्तते पुनः ॥ २६ ॥

26. சுக்லக்ருஷ்ணே கதீ ஹி ஏதே ஜகதஃ சாச்வதே மதே
ஏகயா யாதி அநாவ்ருத்திம் அந்யயா ஆவர்ததே புநஃ.

சுக்லக்ருஷ்ணே - சுக்லக்ருஷ்ண பக்ஷங்களாகிய (ஞானப்ரகாசம்-அஜ்ஞான இருள்), ஏதே ஹி கதி - இந்த வழிகள், ஜகதஃ - ஜகத்துக்கு (ப்ராணிகளுக்கு), சாச்வதே மதே - சாச்வதமானவை யென்று எண்ணப்படுகின்றன. ஏகயா அநாவ்ருத்திம் யாதி - ஒரு மார்க்கத்தினால் (ஞானமார்க்கம்) அபுநர் ஜன்மத்தை யடைகிறான், அந்யயா புநஃ ஆவர்ததே - மற்றொன்றால் (அஜ்ஞானமாகிய இருட்டான வழி) மறுபடி ஜன்மத்தை யடைகிறான்.

नैते सृती पार्थ जानन्योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥

27. ந ஏதே ஸ்ருதீ பார்த ஜாநந் யோகீ முஹ்யதி கச்சந
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தஃ பவ அர்ஜுந.

ஹே பார்த்த !, ஹே அர்ஜுந !, ஏதே ஸ்ருதீ - இவ்விரண்டு வழிகளையும், ஜாநந் - அறிந்த, கஶ்சந யோகீ - ஞானயோகி ஒருவனும், ந முஹ்யதி - மயக்கத்தை யடைவதில்லை, தஸ்மாத் - ஆதலால், ஸர்வேஷு காலேஷு - எல்லாக்காலங்களிலும், யோக யுக்தஃ பவ - யோகத்துடன் கூடினவனாய் இருப்பாயாக.

वेदेषु यज्ञेषु तपःसु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम्।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाऽऽद्यम् ॥ २८ ॥

28. வேதேஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு ச ஏவ தாநேஷு யத் புண்யபலம் ப்ரதிஷ்டம்
அத்யேதி தத் ஸர்வம் இதம் விதித்வா யோகீ பரம் ஸ்தாநம் உபைதி ச ஆத்யம்.

வேதேஷு - வேதங்களை நன்றாக அறிவதிலும், யஜ்ஞேஷு யஜ்ஞங்களைச் செய்வதிலும், தபஸ்ஸு-தபசை நன்றாகச் செய்வதிலும், தாநேஷு - தாநங்கள் கொடுப்பதிலும், யத் புண்யபலம்-எந்தப் புண்ணிய பலனானது, ப்ரதிஷ்டம் - சொல்லப்பட்டிருக்கிறதோ, தத் ஸர்வம்-அந்தப் பலனையெல்லாம், யோகீ (ஞானத்தை யடைந்த) யோகியானவன், அத்யேதி - அதிக்கிரமிக்கிறான். இதம் விதித்வா - இதையறிந்து, ஆத்யம் - (எல்லாவற்றுக்கும்) மூலமான, பரம் ஸ்தாநம்-மேலான பதவியை, உபைதி-அடைகிறான்.

इति श्रीमद्भगवद्गीता० योगशास्त्रेऽक्षरब्रह्मयोगो नामाष्टमोऽध्यायः ।



ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்.

---

श्रीभगवानुवाच—

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १ ॥

1. இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி அநஸூயவே
ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே
அஶுபாத்.

யத் ஜ்ஞாத்வா - எதையறிந்து, அஶுபாத் - ஶுபமல்லாத பாபம் அல்லது கெடுதியிலிருந்து, மோக்ஷ்யஸே - விடுபடுவாயோ (அப்படிப்பட்ட), விஜ்ஞாந ஸஹிதம் - அனுபவ அறிவுடன் கூடிய, குஹ்யதமம்-மிகவும் ரகசியமான, இதம் ஜ்ஞாநம்-இந்த ஞானத்தை-அநஸூயவே தே - அஸூயை யில்லாத உனக்கு, ப்ரவக்ஷ்யாமி-சொல்லுகிறேன்.

राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।
प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥

2. ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரம் இதம் உத்தமம்
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்தும் அவ்யயம்.

இதம் - இந்த ஞானம், ராஜவித்யா - வித்தைகளுக்கெல்லாம் மேலான வேந்தன் போன்றது, ராஜகுஹ்யம் - இரகசியங்களுக்கெல்லாம் மேலானது, உத்தமம் பவித்ரம் - உத்தமமானவிதமாய் (மனதை) பரிசுத்தம் செய்யக்கூடியது, ப்ரத்யக்ஷாவகமம் - ப்ரத்யக்ஷமாய் (தெளிவாய்) அறியத்தக்கது, தர்ம்யம் - தர்மத்துக்குட்பட்டது, கர்தும் ஸுஸுகம் - செய்வதற்கு எளிதானது, அவ்யயம் - அழிவில்லாதது.

अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परंतप ।
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥

3. அச்ரத்தாநா: புருஷா: தர்மஸ்ய அஸ்ய பரந்தப
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மனி.

ஹே பரந்தப!, அஸ்ய தர்மஸ்ய - இந்த (தேக, ஆத்ம, பரமாத்ம ஞானமாகிய) தர்மத்தை, அச்ரத்ததாநா: புருஷா: - நம்பாமலிருக்கும் மனிதர்கள், மாம் அப்ராப்ய-என்னை வந்தடையாமல், ம்ருத்யுஸம்ஸாரவர்த்மனி-சாவுடன்கூடிய ஸம்ஸார வழியிலேயே, நிவர்தந்தே - திரும்பிவந்து நிலைத்திருக்கிறார்கள்.

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४ ॥
न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममाऽऽत्मा भूतभावनः ॥ ५ ॥

4. மயா ததம் இதம் ஸர்வம் ஜகத் அவ்யக்த மூர்த்திநா
மத்ஸ்தாநி ஸர்வ பூதாநி ந ச அஹம் தேஷு அவஸ்தித:.

5. ந ச மத்ஸ்தாநி பூதாநி பச்ய மே யோகம் ஐச்வரம்
பூதப்ருத் ந ச பூதஸ்த: மம ஆத்மா பூதபாவந:.

அவ்யக்த மூர்த்தி நா மயா-காணமுடியாத ரூபத்தையுடைய என்னால், இதம் ஸர்வம் ஜகத் - இந்த எல்லா ப்ரபஞ்சமும், ததம்-வ்யாபிக்கப்பட்டிருக்கிறது, ஸர்வ பூதாநி மத்ஸ்தாநி-எல்லா ப்ராணிகளும் என்னிடத்தில் நிலைக்கொள்ளுகின்றன, அஹம் தேஷு ந ச அவஸ்த்தித: - நான் அவைகளில் இருக்கிறதில்லை (சார்ந்திருக்கவில்லை). ஐச்வரம் மே யோகம் பச்ய-ஈச்வரத்தன்மையாகிய எனது யோகத்தைப்பார். மம ஆத்மா பூத ப்ருத்-எனது ஆத்மா ப்ராணிகளையெல்லாம் தாங்கிக்கொண்டிருக்கிறது, பூதபாவந: - ப்ராணிகளையெல்லாம் உண்டாக்குகிறது. ச பூதஸ்த்த: ந - ஆனால் பூதங்களின்மேல் (நான்) சார்ந்திருக்கவில்லை,

**यथाऽऽकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगोमहान् ।**
**तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥ ६ ॥**

6. யதா ஆகாஶஸ்தித: நித்யம் வாயு: ஸர்வத்ரக: மஹாந்
   ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்தாநி இதி உபதாரய.

ஸர்வத்ரக: மஹாந் வாயு: - எங்கிலும் சென்று நிறைந்திருப்பதும் மஹத்தானதுமான வாயுவானது, யதா நித்யம் ஆகாஶஸ்தித: - எப்படி எப்போதும் ஆகாயத்தில் (ஒட்டாமல்) தங்கி இருக்கிறதோ, ததா - அப்படியே, ஸர்வாணி பூதாநி - எல்லாப் பிராணிகளும், மத்ஸ்தாநி இதி உபதாரய - என்னிடத்தில் தங்கியிருப்பதாக அறிந்துகொள்.

**सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।**
**कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ ७ ॥**

7. ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம்
   கல்பக்ஷயே புந: தாநி கல்பாதௌ விஸ்ருஜாமி அஹம்.

ஹே கௌந்தேய!, கல்பக்ஷயே-கல்பமுடிவில், ஸர்வபூதாநி - சகல பூதங்களும், மாமிகாம் ப்ரக்ருதிம் யாந்தி - எனது மாயையில் ஒடுங்குகிறது. கல்பாதௌ - கல்ப ஆரம்பத்தில், தாநி - அவைகளை, புந: - மறுபடியும், அஹம் - நான், விஸ்ருஜாமி - தோன்றச் செய்து ஸ்ருஷ்டிக்கிறேன்.

**प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।**
**भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८ ॥**

8. ப்ரக்ருதிம் ஸ்வாம் அவஷ்டப்ய விஸ்ருஜாமி புந: புந:
   பூதக்ராமம் இமம் க்ருத்ஸ்நம் அவஶம் ப்ரக்ருதே: வஶாத்

ஸ்வாம் ப்ரக்ருதிம்-என் வசமான ப்ரக்ருதியை (மாயையை), அவஷ்டப்ய-ஆசிரயித்துக்கொண்டு, ப்ரக்ருதே: வஶாத்-மாயைக்கு வசமாய் உள்ளடங்கி, அவஶம் - ஸ்வாதீனமற்றிருக்கும், இமம் க்ருத்ஸ்நம் பூதக்ராமம் - இந்த எல்லா பூதக்கூட்டங்களையும், புந:

புந:-மீண்டும் மீண்டும், விஸ்ருஜாமி - சிருஷ்டிக்கிறேன் (தோன்றி ஒடுங்கச் செய்கிறேன்).

न च मां तानि कर्माणि निबध्नन्ति धनंजय ।
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९ ॥

9. ந ச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய
உதாஸீநவத் ஆஸீநம் அஸக்தம் தேஷு கர்மஸு.

ஹே தநஞ்ஜய!, தாநிகர்மாணி - அந்த (ஸ்ருஷ்டி- ஸ்திதி ஸம்ஹாரம் அல்லது தோற்ற ஒடுக்கம்) கர்மங்கள், உதாஸீநவத்,ஆஸீநம் - உதாஸீநனைப்போல் இருக்கிறவும், தேஷு கர்மஸு அஸக்தம் - அந்தக் கர்மங்களில் பற்று இல்லாமலிருக்கிறவுமான, மாம்- என்னை, ந நிபத்நந்தி - கட்டுப்படுத்துவதில்லை (பந்திப்பதில்லை).

मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनाऽनेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ १० ॥

10. மயா அத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸ சராசரம்
ஹேதுநா அநேந கௌந்தேய ஜகத் விபரிவர்ததே.

ஹே கௌந்தேய!, ப்ரக்ருதி: - பிரகிருதியானது (மாயை), அத்யக்ஷேண மயா - சாக்ஷியாயிருக்கும் என் உதவியால், ஸ சராசரம் ஸூயதே - சராசரத்துடன் கூடிய ப்ரபஞ்சத்தை பிறப்பிக்கின்றது. அநேந ஹேதுநா - இந்தக் காரணத்தினால், ஜகத் - ஜகத்தானது, விபரிவர்ததே - திரும்பித்திரும்பிவந்துகொண்டே யிருக்கிறது.

अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥ ११ ॥

11. அவஜாநந்தி மாம் மூடா: மாநுஷீம் தநும் ஆஶ்ரிதம்
பரம் பாவம் அஜாநந்த: மம பூதமஹேஶ்வரம்.

பூதமஹேஶ்வரம் - பூதங்களுக்கெல்லாம் தலைவனான, மம பரம் பாவம்-எனது மேலான நிலைமையை, அஜாநந்த: மூடா:-தெரிந்து

கொள்ளாத மூடர்கள், மாநுஷீம் தநும் ஆஶ்ரிதம் மாம் - மனித சரீரத்தைக்கொண்டிருக்கிற என்னை, அவஜாநந்தி - அவமதிக்கிறார்கள்.

मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः ।
राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२ ॥

12. மோகாஶா: மோககர்மாண: மோகஜ்ஞாநா: விசேதஸ:
ராக்ஷஸீம் ஆஸுரீம் ச ஏவ ப்ரக்ருதிம் மோஹிநீம் ஶ்ரிதா:.

(தே - அவர்கள்), மோகாஶா: - உபயோகமற்ற ஆசையையுடையவர்கள், மோககர்மாண: - உபயோகமற்ற கர்மங்களையுடையவர்கள், மோகஜ்ஞாநா: - வீணான ஞானத்தையுடையவர்கள், விசேதஸ: - அறிவில்லாதவர்கள், மோஹிநீம் - மயக்கத்தையுண்டாக்கும், ராக்ஷஸீம் - இராக்ஷஸத்தனமாயும், ஆஸுரீம் - அசுரத்தனமாயுமுள்ள, ப்ரக்ருதிமேவ ச - சுவபாவத்தையே, ஶ்ரிதா:- அடைந்தவர்கள்.

महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः ।
भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३ ॥

13. மஹாத்மாந: து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதிம் ஆஶ்ரிதா:
பஜந்தி அநந்ய மநஸ: ஜ்ஞாத்வா பூதாதிம் அவ்யயம்.

ஹே பார்த்த!, மஹாத்மா நஸ்து - உத்தமமானவர்கள் மாத்திரமே, தைவீம் ப்ரக்ருதிம் ஆஶ்ரிதா:-தேவதைகளின் இயல்பைக் கொண்டவர்களாய், மாம்-என்னை, பூதாதிம்-பூதங்களுக்கு மூல காரணனையும், அவ்யயம்-அழிவற்றவனையும், ஜ்ஞாத்வா-அறிந்து, அநந்யமநஸ: - வேறொன்றிலும் செல்லாத மனதுடன், பஜந்தி- பூஜிக்கின்றார்கள்.

सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।
नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥ १४ ॥

14. ஸததம் கீர்தயந்தஃ மாம் யதந்தஃ ச த்ருடவ்ருதாஃ
நமஸ்யந்தஃ ச மாம் பக்த்யா நித்யயுக்தாஃ உபாஸதே.

(தே-அவர்கள்), ஸததம் மாம் கீர்தயந்தஃ - எப்போதும் என் குண விசேஷங்களைப்பற்றி பேசுகின்றவர்களாயும், யதந்தஃ - (தர்மம் செய்வதில்) முயற்சி யுடையவர்களாயும், த்ருடவ்ருதாஃ-உறுதியான விரதமுடையவர்களாயும், நித்யயுக்தாஃ-எப்போதும் மனது ஒருநிலைப்பட்டவராயும், பக்த்யா - பக்தியுடன், நமஸ்யந்தஃ - நமஸ்கரிப்பவர்களாய், மாம் உபாஸதே - என்னைத் தொழுகின்றார்கள்.

ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।
एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५ ॥

15. ஜ்ஞாநயஜ்ஞேந ச அபி அந்யே யஜந்தஃ மாம் உபாஸதே
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விச்வதோமுகம்.

ஜ்ஞாநயஜ்ஞேந யஜந்தஃ அந்யே - ஜ்ஞாநமாகிற யஜ்ஞத்தினால் வழிபடுகின்ற மற்றவர்கள், மாம் ச அபி - பரமாத்மாவான என்னையே, ஏகத்வேந - ஒன்றாக (அத்வைதமாக), உபாஸதே - உபாஸிக்கிறார்கள். ப்ருதக்த்வேந - (வேறுசிலர்) த்வைதபாவனையுடன் (உபாஸிக்கின்றனர்). விச்வதோமுகம் - விச்வரூபியாய் (எங்கும் நிறைந்துள்ள) என்னை, பஹுதா உபாஸதே - (சிலர்) அநேக விதமாய் உபாஸிக்கின்றனர்.

अहंक्रतुरहं यज्ञः स्वधाऽहमहमौषधम् ।
मंत्रोऽहमहमेवाऽऽज्यमहमग्निरहं हुतम् ॥ १६ ॥

16. அஹம் க்ரதுஃ அஹம் யஜ்ஞஃ ஸ்வதா அஹம் அஹம் ஔஷதம்
மந்த்ரஃ அஹம் அஹம் ஏவ ஆஜ்யம் அஹம் அக்நிஃ அஹம் ஹுதம்.

அஹம் க்ரதுஃ - நானே க்ரது என்னும் வேதகர்மம், அஹம் யஜ்ஞஃ - நானே யஜ்ஞம், அஹம் ஸ்வதா-நானே (பிதுர்) அன்னம், அஹம் ஔஷதம் - நானே ஔஷதம், அஹம் மந்த்ரஃ - நானே மந்

திரம், அஹம் ஆஜ்யம்- நானே ஹவிஸ், அஹம் அக்நி: - நானே அக்கினி, அஹம் ஏவ ஹுதம் - நானேதான் ஹோமமாகிய தொழில்

पिताऽहमस्य जगतो माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोङ्कार ऋक्साम यजुरेव च ॥ १७ ॥

17. பிதா அஹம் அஸ்ய ஜகத: மாதா தாதா பிதாமஹ:
வேத்யம் பவித்ரம் ஓங்கார: ருக் ஸாம யஜு: ஏவ ச.

அஸ்ய ஜகத:-இந்தப் பிரபஞ்சத்துக்கு, பிதா மாதா பிதாமஹ: தாதா - தகப்பனும், தாயும், பாட்டனும், கர்ப பலனைக் கொடுப்பவனும் (நானே), வேத்யம் பவித்ரம் ஓம்கார: - அறியவேண்டிய வஸ்துவும், பரிசுத்தப்படுத்துபவனும், ஓங்காரமும், ருக் ஸாம யஜு:-ரிக்வேத ஸாமவேத யஜுர்வேதமும், அஹமேவ - நானே.

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥ १८ ॥

18. கதி: பர்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: சரணம் ஸுஹ்ருத்
ப்ரபவ: ப்ரளய: ஸ்தானம் நிதானம் பீஜம் அவ்யயம்.

கதி: - பிராணிகளால் அடையப்படும் கர்மபலனும், பர்தா-போஷகனும், ப்ரபு:-தலைவனான ஈச்வரனும், ஸாக்ஷி-எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருப்பவனும், நிவாஸ: - (பிராணிகளுக்கு) இருப்பிடமும், சரணம் - புகலிடமும், ஸுஹ்ருத் - (ப்ரதிபலனைக்கருதாது) உபகரிப்பவனும், ப்ரபவ: - உற்பத்திஸ்தானமும், ஸ்தானம் - நிலைத்திருக்குமிடமும், ப்ரளய: - ஒடுங்குமிடமும், நிதானம் - வைப்பிடமும் (களஞ்சியம்), அவ்யயம் பீஜம் - அழிவில்லாத விதையும், (அஹமேவ - நானே).

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९ ॥

19. தபாமி அஹம் அஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாமி உத்ஸ்ருஜாமி ச
அம்ருதம் ச ஏவ ம்ருத்யு: ச ஸத் அஸத் ச அஹம் அர்ஜுந.

ஹே அர்ஜுந !,-அஹம் தபாமி-நான் வெப்பத்தை யுண்டாக்கு கிறேன், அஹம் - நான், வர்ஷம் நிக்ருஹ்ணாமி-மழையை நிறுத்து கிறேன், உத்ஸ்ருஜாமி - (மழையை) உண்டாக்குகிறேன் (வரு ஷிக்கச் செய்கிறேன்), அம்ருதம் ச ம்ருத்யுஶ்ச - சாவின்மையும் மரணமும், ஸத் அஸத் ச-ஸத்தும் அஸத்தும், அஹமேவ-நானே.

त्रैविद्या मां सोमपाः पूतपापा
यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।
ते पुण्यमासाद्य सुरेन्द्रलोक
मश्नन्ति दिव्यान्दिवि देवभोगान् ॥ २० ॥

20. த்ரைவித்யா: மாம் ஸோமபா: பூதபாபா:
யஜ்ஞை: இஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே
தே புண்யம் ஆஸாத்ய ஸுரேந்த்ர லோகம்
அஶ்நந்தி திவ்யாந் திவி தேவ போகாந்.

யே-எவர்கள், த்ரைவித்யா:-மூன்று வேதமு மறிந்து, ஸோம பா:-ஸோமபானம் செய்தவர்களாய், பூதபாபா: - பாபம் நீங்கின வர்களாய், யஜ்ஞை: - யஜ்ஞங்களால், மாம் இஷ்ட்வா - என்னை பூஜித்து, ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே-ஸ்வர்கபதவியை வேண்டுகின் றார்களோ, தே - அவர்கள், புண்யம் ஸுரேந்திர லோகம் ஆஸாத்ய-புண்ணியமான தேவேந்திர உலகத்தையடைந்து, திவி-திவ்யலோகத்தில், திவ்யாந் தேவபோகாந் - திவ்யமான தேவ போகங்களை, அஶ்நந்தி - அனுபவிக்கிறார்கள்.

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं
क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना
गतागतं कामकामा लभन्ते ॥ २१ ॥

21. தே தம் புக்த்வா ஸ்வர்க லோகம் விஶாலம்
க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விஶந்தி

ஏவம் த்ரயீ தர்மம் அநுப்ரபந்நா:
கதாகதம் காம காமா: லபந்தே.

தே - அவர்கள், தம் விசாலம் ஸ்வர்க லோகம் புக்த்வா - அந்த விசாலமான ஸ்வர்க்க லோக (ஸுகங்களை) அனுபவித்து, புண்யே க்ஷீணே-புண்யம் கழிந்தபிறகு, மர்த்ய லோகம் விசந்தி - மனித உலகத்தை வந்தடைகிறார்கள். ஏவம் த்ரயீ தர்மம் - இவ்விதம் மூன்று வேதத்தில் சொல்லப்பட்ட தர்மத்தையும், அநுப்ர பந்நா:-பின் பற்றி, காம காமா: - உலகவிஷயத்தில் விருப்பமுள்ளவர்களாய், கதாகதம் லபந்தே - போவதையும் வருவதையும் (ஜனனமரணத்தை) அடைகிறார்கள்.

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ २२ ॥

22. அநந்யா: சிந்தயந்த: மாம் யே ஜநா: பர்யுபாஸதே
தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாமி அஹம்.

யே ஜநா:-எந்த மனிதர்கள், அநந்யா:-என்னிலிருந்து வேறு அல்லாதவராய், மாம் சிந்தயந்த: - என்னையே சிந்திப்பவராய், பர்யுபாஸதே - செவ்வையாய் உபாஸிக்கின்றார்களோ, நித்ய அபி யுக்தாநாம் - எப்போதும் தியானத்தில் நிலைத்துள்ள, தேஷாம் - அவர்களுடைய, யோக க்ஷேமம் - யோக க்ஷேமத்தை, அஹம் வஹாமி - நான் வஹிக்கிறேன் (ஏற்றுக்கொள்ளுகிறேன்).

येऽप्यन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥ २३ ॥

23. யே அபி அந்யதேவதா: பக்தா: யஜந்தே ச்ரத்தயா அந்விதா:
தே அபி மாம் ஏவ கௌந்தேய யஜந்தி அவிதிபூர்வகம்.

ஹே கௌந்தேய !, யே அபி-மற்று எவர்களும், அந்யதேவதா: பக்தா: - இதர தேவதைகளிடம் பக்தி யுள்ளவர்களாய், ச்ரத்தயா அந்விதா: - ச்ரத்தையுடன்கூட, யஜந்தே-பூஜிக்கின்றார்களோ, தே அபி-அவர்களும், அவிதிபூர்வகம்-முறைப்படி யின்றி (வேதோக்த), மாமேவ யஜந்தி - என்னையே பூஜிக்கின்றனர்.

**अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।**
**न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥ २४ ॥**

24. அஹம் ஹி ஸர்வ யஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச
ந து மாம் அபிஜாநந்தி தத்வேந அத: ச்யவந்தி தே.

ஸர்வ யஜ்ஞாநாம்-எல்லா யஜ்ஞங்களுக்கும், போக்தா ச ப்ரபு - போக்தாவும் ப்ரபுவும், அஹமேவ ஹி - நானே யன்றோ. து - ஆனால், தே - அவர்கள், மாம் - என்னை, தத்வேந - உண்மை யானபடி, ந அபிஜாநாதி - அறிகிறதில்லை. அத: - அதனால், ச்யவந்தி - தவறுகிறார்கள் (புநர்ஜன்ம மடைகிறார்கள்).

**यान्ति देवव्रता देवान् पितॄन्यान्ति पितृव्रताः ।**
**भूतानि यान्ति भूतेज्या यान्ति मद्याजिनोऽपिमाम् ॥**

25. யாந்தி தேவவ்ரதா: தேவாந் பித்ரூந் யாந்தி பித்ருவ்ரதா:
பூதாநி யாந்தி பூதேஜ்யா:, யாந்தி மத்யாஜிந: அபி மாம்.

தேவவ்ருதா: தேவாந் யாந்தி-தேவதைகளைக்குறித்து விரத மிருப்பவர் தேவதைகளை யடைகிறார்கள். பித்ருவ்ரதா: பித்ரூந் யாந்தி - பிதுர்க்களைக்குறித்து விரதமிருப்பவர் பித்ருக்களை யடைகிறார்கள். பூதேஜ்ய: பூதாநி யாந்தி - பூதங்களை வணங்குபவர்கள் பூதங்களை யடைகிறார்கள். மத் யாஜிநோபி மாம் யாந்தி - என்னை உபாஸிப்பவர்களோ என்னையே யடைகிறார்கள்.

**पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।**
**तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥ २६ ॥**

26. பத்ரம் புஷ்பம் பலம் தோயம் ய: மே பக்த்யா ப்ரயச்சதி
தத் அஹம் பக்த்யுபஹ்ருதம் அச்நாமி ப்ரயதாத்மந:.

ய:-எவன், பத்ரம் புஷ்பம் பலம் தோயம்-இலை, புஷ்பம், பழம், ஜலம் (இவற்றை), பக்த்யா - பக்தியுடன், மே ப்ரயச்சதி - என் பொருட்டு நிவேதனம் செய்கின்றானோ, ப்ரயதாத்மந: - அந்த பரி சுத்த புத்தியுள்ளவன், பக்த்யுபஹ்ருதம் தத் - பக்தியுடன் அர்ப்

பித்த அதை, அஹம் அஶ்னாமி - நான் (அங்கீகரித்து) புசிக்கிறேன்.

**यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।**
**यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥ २७ ॥**

27. யத் கரோஷி யத் அஶ்னாஸி யத் ஜுஹோஷி ததாஸி யத்
யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்பணம்.

ஹே கௌந்தேய !, யத் கரோஷி - எதைச் செய்கின்றாயோ, யத் அஶ்னாஸி-எதை புசிக்கிறாயோ, யத் ஜுஹோஷி - எதை ஓமம் செய்கிறாயோ, யத் ததாஸி - எதைக் கொடுக்கிறாயோ, யத் தபஸ்யஸி - எந்த தவத்தைச் செய்கிறாயோ, தத் - அதை (யெல்லாம்), மதர்ப்பணம் குருஷ்வ - எனக்கு அர்ப்பித்துச் செய்வாயாக.

**शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः ।**
**संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८ ॥**

28. ஶுபாஶுபபலை: ஏவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனை:
ஸந்யாஸயோக யுக்தாத்மா விமுக்த: மாம் உபைஷ்யஸி.

ஏவம்-இவ்விதமாய், சுபாசுபபலை: கர்மபந்தனை: - நல்லனவும் தீயனவுமான பலன்களையுடைய கர்மபந்தத்திலிருந்து, மோக்ஷ்யஸே - விடுபடுவாய். ஸந்யாஸயோக யுக்தாத்மா - (நீ) ஸந்நியாஸ யோகத்துடன் கூடின மனதினனாய், விமுக்த: (கர்மத்திலிருந்து) விடுபட்டு, மாம் உபைஷ்யஸி - என்னை வந்தடைவாய்.

**समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।**
**ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥ २९ ॥**

29. ஸம: அஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்ய: அஸ்தி ந ப்ரிய:
யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு ச அபி அஹம்.

ஸர்வ பூதேஷு-எல்லாப்பிராணிகளிடத்திலும், அஹம் ஸம:- நான் சமமாயிருக்கிறேன். மே த்வேஷ்ய: நாஸ்தி - எனக்கு சத்துரு (ஒருவரும்) இல்லை, ப்ரிய: ந - மித்திரன் (எவனும்) இல்லை.

து - ஆனால், யே - எவர்கள், மாம் - என்னை, பக்த்யா பஜந்தி - பக்தியுடன் உபாஸிக்கின்றார்களோ, தே மயி - அவர்கள் என்னிடம் (இருக்கிறார்கள்). அஹமபி - நானும், தேஷு ச - அவர்களிடம் (இருக்கிறேன்).

अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥

30. அபிசேத் ஸுதுராசார: பஜதே மாம் அநந்யபாக்
ஸாது: ஏவ ஸ: மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸித: ஹி ஸ:.

ஸுதுராசாரோ அபி - (ஒருவன்) தீயொழுக்கமுடையவனானாலும், அநந்யபாக்-அந்யதேவதைகளையன்றி, மாம் பஜதே சேத்-என்னைப் பூஜிப்பானேயானால், ஸ: ஸாதுரேவ மந்தவ்ய: - அவன் நல்லவனென்றே நினைக்கவேண்டும். ஹி - ஏனெனில், ஸ:-அவன், ஸம்யக் வ்யவஸித:-சிறந்த உறுதிபுத்தியை யுடையவன்.

क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्तिं निगच्छति ।
कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥ ३१ ॥

31. க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஶஶ்வத் ஶாந்திம் நிகச்சதி
கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணஶ்யதி.

(ஸ:-அவன்), க்ஷிப்ரம் தர்மாத்மா பவதி - சீக்கிரத்திலேயே (துராசாரத்தைவிட்டு என் அனுக்கிரகத்தால்) நல்லொழுக்கத்தில் மனது உடையவனாய் ஆகிறான். ஶஶ்வத் ஶாந்திம் நிகச்சதி - எப்போதும் மன அமைதியை அடைகிறான். ஹே கௌந்தேய !, மே பக்த: - எனது பக்தன், ந ப்ரணஶ்யதி - கெட்டுப்போவதில்லை (என்பதை), ப்ரதிஜாநீஹி - உறுதியாகச் சொல்லுவாயாக.

मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥

32. மாம் ஹி பார்த வ்யபாஶ்ரித்ய யே அபி ஸ்யு: பாபயோநய:
ஸ்திரிய: வைஶ்யா: ததா ஶூத்ரா: தே அபி யாந்தி பராம்
[கதிம்

ஹே பார்த்த!, பாபயோநய: - தாழ்ந்த பிறவியையுள்ளவர் களும், ஸ்திரிய: - ஸ்திரீகளும், வைஶ்யா: - வைஶ்யர்களும், ததா - அப்படியே, ஶூத்ரா:-ஶூத்திரர்களும், யேபி ஸ்யு:-யாவர்களோ, தேபி - அவர்களும், மாம்-என்னை, வ்யபாஶ்ரித்ய - ஆஶ்ரயித்து, பராம் கதிம் யாந்தி-உத்தம பதவியை அடைகிறார்கள்.

किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।
अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३ ॥

33\. கிம் புந: ப்ராஹ்மணா: புண்யா: ஭க்தா: ராஜர்ஷய: ததா
அநித்யம் அஸுகம் லோகம் இமம் ப்ராப்ய ஭ஜஸ்வ மாம்.

புண்யா: பக்தா: ப்ராஹ்மணா: - புண்ணியஞ்செய்துள்ள பக்தி யுடன்கூடிய பிராம்மணர்களும், ததா ராஜர்ஷய: - அப்படியே (ஜனகர், விஶ்வாமித்ரர்) முதலான ராஜரிஷிகளும், (உத்தம பதவியை யடைவார்களென்பதை), கிம் புந:-மறுபடி கூறவும் வேண்டுமோ? (அவசியமில்லை), அநித்யம் அஸுகம் இமம் லோகம் ப்ராப்ய - நிலை யற்றதும், சுகமற்றதுமான இவ்வுலகத்தை யடைந்து (இருக்கும் நீ), மாம் பஜஸ்வ - என்னை தொழக்கடவாய்.

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥ ३४ ॥

34\. மந்மநா: ஭வ மத்பக்த: மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாம் ஏவ ஏஷ்யஸி யுக்த்வா ஏவம் ஆத்மாநம் மத்பராயண:.

மந்மநா: - என்னிடம் மனதை வைத்து, மத்பக்த:-என்னிடம் பக்தியுடையவனாய், மத்யாஜீ-என்னை பூஜிக்கிறவனாய், ஭வ - ஆவாயாக. மாம் நமஸ்குரு - என்னை வணங்கவேண்டும். ஏவம் யுக்த்வா- இவ்விதம் மனது ஒருநிலைப்பட்டு, மத்பராயண: - என்னையே மேலான அடையும்பொருளாய்க் கருதி, ஆத்மாநம் மாமேவ - பரமாத்மாவாகிய என்னையே, ஏஷ்யஸி - அடைவாய்.

इति श्रीमद्भगवद्गीता० राजविद्या राजगुह्ययोगो नाम नवमोऽध्यायः ।

---

श्रीभगवानुवाच—

भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।
यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ १ ॥

1. பூய: ஏவ மஹாபாஹோ ஶ்ருணு மே பரமம் வச:
யத் தே அஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா.

ஹே மஹாபாஹோ!, ப்ரீயமாணாய-என் உபதேசத்தால் ஸந்துஷ்டியடையும், தே ஹிதகாம்யயா - உன் நலத்தைக்கோறி, அஹம் யத் வக்ஷ்யாமி - நான் எதைச் சொல்லுகிறேனோ, தத் மே பரமம்வச:-அந்த எனது மேலான வார்த்தையை, பூய ஏவ ஶ்ருணு-மறுபடியுமே கேட்பாயாக.

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २ ॥

2. ந மே விது: ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய:
அஹம் ஆதி: ஹி தேவாநாம் மஹர்ஷீணாம் ச ஸர்வஶ:.

மே ப்ரபவம்-எனது பிரபாவம் அல்லது உத்பத்தியை, ஸுரகணா: ந விது: - தேவர்களது கூட்டங்கள் அறியவில்லை; மஹர்ஷய: ந - மஹரிஷிகளும் (அறிய) இல்லை. ஹி - ஏனெனில், அஹம் - நான், தேவாநாம் மஹர்ஷீணாம் ச ஸர்வஶ: ஆதி: - தேவர் மகரிஷிகளைவிட எல்லாவிதத்திலும் முதன்மையானவன்.

यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।
असम्मूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३ ॥

3. யஃ மாம் அஜம் அநாதிம் ச வேத்தி லோக மஹேஶ்வரம்
அஸம்மூடஃ ஸஃ மர்த்யேஷு ஸர்வபாபைஃ ப்ரமுச்யதே.

யஃ-எவன், மாம்-என்னை, அஜம்-பிறப்பற்றவனையும், அநாதிம் ச - ஆதியற்றவனையும், லோக மஹேஶ்வரம் - உலகங்களுக்கெல்லாம் தலைவனான ஈஶ்வரனையும், வேத்தி - அறிகிறானோ, ஸஃ - அவன், மர்த்யேஷு - மனிதர்களுக்குள், அஸம்மூடஃ - மயங்காதவன், ஸர்வ பாபைஃ ப்ரமுச்யதே-ஸகல பாபங்களினின்றும் விடுபடுகிறான்.

बुद्धिर्ज्ञानमसम्मोहः क्षमा सत्यं दमः शमः ।
सुखं दुःखं भवोऽभावो भयं चाभयमेव च ॥ ४ ॥
अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।
भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥ ५ ॥

4. புத்திஃ ஜ்ஞானம் அஸம் மோஹஃ க்ஷமா ஸத்யம் தமஃ ஶமஃ
ஸுகம் துஃகம் பவஃ அபாவஃ பயம் ச அபயம் ஏவ ச

5. அஹிம்ஸா ஸமதா துஷ்டிஃ தபஃ தானம் யஶஃ அயஶஃ
பவந்திஃ பாவாஃ பூதானாம் மத்தஃ ஏவ ப்ருதக்விதாஃ.

புத்திஃ - புத்தி, ஞானம் - ஞானம், அஸம் மோஹஃ - மோஹமின்மை, க்ஷமா - பொறுமை, ஸத்யம் - உண்மை, தமஃ-வெளி இந்திரிய அடக்கம், ஶமஃ-அந்தக்கரண ஒடுக்கம், சுகம் துக்கம் - இன்பதுன்பம், பவஃ அபாவஃ-பிறப்பு, இறப்பு, பயம் அபயம் ச-அச்சம், தைரியம், அஹிம்ஸா - ஜீவஹிம்சை செய்யாமை, ஸமதா-மனது (சஞ்சலமின்றி) சமநிலையிலிருப்பது (நடுவுநிலைமை), துஷ்டிஃ- (கிடைத்தமட்டில்) திருப்தி, தபஃ - தவம், தானம் - பிறருக்குக் கொடுத்தல் (கைம்மாறு கருதாமல்), யஶஃ அயஶஃ-கீர்த்தி அபகீர்த்தி (முதலான), ப்ருதக்விதாஃ பாவாஃ - பலவிதத் தன்மைகள், பூதானாம் ஏவ - பிராணிகளின்பொருட்டு, மத்த ஏவ பவந்தி - என்னிடத்திலிருந்தே யுண்டாகின்றன.

महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥ ६ ॥

6. மஹர்ஷய꞉ ஸப்த பூர்வே சத்வார꞉ மநவ꞉ தத்தா
மத்³பாவா꞉ மாநஸா꞉ ஜாதா꞉ யேஷாம் லோகே இமா꞉ ப்ரஜா꞉.

லோகே இமா꞉ ப்ரஜா꞉ - உலகிலுள்ள இந்தப் பிராணிகளெல்லாம், யேஷாம் - எவர்களுடைய (சிருஷ்டியோ), (தே) ஸப்த மஹர்ஷய꞉ - (அந்த) ஸப்தரிஷிகளும், ததா - அப்படியே, பூர்வே சத்வார꞉ மநவ꞉ - பூர்வீகர்களான 4 மனுக்களும், மத்பாவா꞉ - என் தியானத்தை யுடையவர்களாய், மாநஸா ஜாதா꞉ - என் மாநஸீகத்தினால் (ஸங்கல்பம் அல்லது எண்ணம்) உண்டானவர்கள்.

एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वतः ।
सोऽविकम्पेन योगेन युज्यते नात्र संशयः ॥ ७ ॥

7. ஏதாம் விபூ⁴திம் யோக³ம் ச மம ய꞉ வேத்தி தத்வத꞉
ஸ꞉ அவிகம்பேந யோகே³ந யுஜ்யதே ந அத்ர ஸம்ஶய꞉.

ய꞉ - எவன், ஏதாம் மம விபூதிம் யோகம் ச - இந்த எனது விபவத்தையும் யோகத்தையும், தத்வத꞉ வேத்தி - உண்மையான படி அறிகின்றானோ, ஸ꞉ - அவன், அவிகம்பேந யோகேந - ஸ்திரமான யோகத்துடன், யுஜ்யதே - கூடுகிறான். அத்ர ஸம்ஶய꞉ ந - இதில் ஸந்தேகம் இல்லை.

अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्त्तते ।
इति मत्वा भजन्ते मां बुधा भावसमन्विताः ॥ ८ ॥

8. அஹம் ஸர்வஸ்ய ப்ரப⁴வ꞉ மத்த꞉ ஸர்வம் ப்ரவர்ததே
இதி மத்வா ப⁴ஜந்தே மாம் பு³தா⁴꞉ பா⁴வஸமந்விதா꞉.

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவ꞉-நான் எல்லாவற்றிற்கும் உற்பத்திஸ்தானம் (சிருஷ்டிகர்த்தா), மத்த꞉ ஸர்வம் ப்ரவர்ததே - என்னிடத்திலிருந்தே சகலமும் தலைப்படுகின்றன, இதி மத்வா - இங்ஙனம் அறிந்து, புதா꞉ - ஞானிகள், பாவ ஸமந்விதா꞉ - என் பாவத்தை மனதில் வைத்து தியானித்துக்கொண்டு, மாம் பஜந்தே - என்னைத் தொழுகின்றார்கள்.

मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् ।
कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥ ९ ॥

9. மச்சித்தா: மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்
கதயந்த: ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச.

மச்சித்தா: - என்னிடத்தில் சித்தத்தை வைத்து, மத்கதப்ராணா: - என்னிடத்திலே (அவர்களது) ஆத்மாவை அர்ப்பித்து, மாம் - என்னை, பரஸ்பரம் - ஒருவருக்கொருவர், போதயந்த: - போதித்துக்கொண்டும், கதயந்தஸ்ச - கீர்த்தனம் செய்துகொண்டும், நித்யம் - எப்போதும், துஷ்யந்தி ச ரமந்திச - ஸந்தோஷித்து மகிழ்ச்சி யடைகின்றார்கள்.

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १० ॥

10. தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம் ப்ரீதி பூர்வகம்
ததாமி புத்தி யோகம் தம் யேந மாம் உபயாந்தி தே.

தே - அவர்கள், யேந - எதனால், மாம் உபயாந்தி - என்னை வந்து அடைகின்றார்களோ, தம் புத்தியோகம் - அந்த புத்தி யோகத்தை, ப்ரீதிபூர்வகம் பஜதாம் ஸததயுக்தாநாம் தேஷாம் - அன்புடன் தொழுகின்ற எப்போதும் என்னிடம் மனதை நிலைநிறுத்திய அவர்களுக்கு, ததாமி - கொடுக்கிறேன்.

तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

11. தேஷாம் ஏவ அநுகம்பார்த அஹம் அஜ்ஞாநஜம் தம:
நாஸயாமி ஆத்மபாவஸ்த: ஜ்ஞாநதீபேந பாஸ்வதா.

தேஷாம் - அவர்களது, அஜ்ஞாநஜம் தம: - அவிவேகத்திலிருந்து உண்டான இருளை, அஹம் ஆத்மபாவஸ்த்த: - நான் அவர்களது அந்தக்கரணத்திலேயே யிருந்துகொண்டு, பாஸ்வதா ஜ்ஞாந தீபேந-பிரகாசத்தையுடைய ஞானமாகிய விளக்கினால், அநு

கம் பார்த்தமேவ - (அவர்கள்மீதுள்ள) கருணையினாலேயே, நாஶயாமி - நசிக்கச்செய்கிறேன்.

**परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।**
**पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२ ॥**

**आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।**
**असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३ ॥**

12. பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவாந்
புருஷம் ஶாஶ்வதம் திவ்யம் ஆதிதேவம் அஜம் விபும்.

13. ஆஹு: த்வாம் ருஷய: ஸர்வே தேவர்ஷி: நாரத: ததா
அஸித: தேவல: வ்யாஸ: ஸ்வயம் ச ஏவ ப்ரவீஷி மே.

அர்ஜுனன் வாக்கியம்.—

பரம் ப்ரஹ்ம - பரப்ரம்மமும், பரம்தாம - மேலான ஒளியும், பரமம் பவித்ரம் - உத்தமமான பரிசுத்த வஸ்துவும், பவாந் - தாங்களே ; ஸர்வேரிஷய: - சகலரிஷிகளும், த்வாம் - தங்களை, திவ்யம் புருஷம் - திவ்யபுருஷராயும், ஶாஶ்வதம் - எப்போதுமுள்ளவராயும், ஆதிதேவம் - முதற்கடவுளாயும், அஜம் - பிறப்பில்லாதவராயும், விபும் - ஸர்வ வியாபியாயும், ஆஹு: - கூறுகிறார்கள். ததா - அவ்விதமே, தேவர்ஷி: நாரத: - தேவரிஷியான நாரதரும், அஸித: தேவல: வ்யாஸ: ஆஹு:-அஸிதர், தேவலர், வியாஸர் இவர்களும் சொல்லுகின்றனர். ததா - அப்படியே, த்வம் ச ஸ்வயமேவ - தானாகவே தாங்களும், மே ப்ரவீஷி - எனக்கு அருளிச்செய்கிறீர்கள்.

**सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।**
**न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥ १४ ॥**

14. ஸர்வம் ஏதத் ருதம் மந்யே யத் மாம் வதஸி கேஶவ
ந ஹி தே பகவந் வ்யக்திம் விது: தேவா: ந தானவா:.

ஹே கேஶவ!, மாம் - எனக்கு, யத்வதஸி - எதைச் சொல்லுகிறீர்களோ, ஏதத் ஸர்வம் - இதையெல்லாம், ருதம்

மந்யே- உண்மையாக நம்புகிறேன். ஹே பகவந் !, தே வ்யக்திம் - தமது வடிவத்தை, தேவா: ந விது: தாநவா: ந- தேவர்களும், அஸுரர்களும் அறியவேயில்லை.

**स्वयमेवात्मनाऽऽत्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।**
**भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५ ॥**

15. ஸ்வயமேவ ஆத்மநா ஆத்மாநம் வேத்த த்வம் புருஷோத்தம
பூதபாவந பூதேஶ தேவதேவ ஜகத்பதே.

ஹே புருஷோத்தம !, பூதபாவந - பூதங்களை ஸ்ருஷ்டித்த வரே !, பூதேஶ - பூதங்களுக்குத் தலைவரே !, தேவதேவ - தேவர் களுக்குத்தேவ !, ஜகத்பதே - ஜகத்பதியே, த்வம் - தாங்கள், ஆத் மாநம் - தங்களை, ஆத்மநா - தங்களாலே, ஸ்வயமேவ - தானாகவே, வேத்த - அறிகிறீர்கள்.

**वक्तुमर्हस्यशेषेण दिव्याह्यात्मविभूतयः ।**
**याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६ ॥**

16. வக்தும் அர்ஹஸி அஶேஷேண திவ்யா: ஹி ஆத்ம விபூதய:
யாபி: விபூதிபி: லோகாந் இமாந் த்வம் வ்யாப்ய திஷ்டஸி.

த்வம் இமாந் லோகாந் - தாங்கள் இந்த உலகங்களை, யாபி: விபூதி: - எந்த விபவத்தினால், வ்யாப்ய திஷ்டஸி - வியாபித்துக் கொண்டிருக்கிறீர்களோ, திவ்யா ஹி ஆத்மவிபூதய: - அந்த திவ்யத்தன்மையான தங்கள் விபவங்களை, அஶேஷேண - மீதி யின்றி, வக்தும் அர்ஹஸி - தெரிவிப்பதற்குத் தகுதியானவர் (தாங்களே).

**कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिन्तयन् ।**
**केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया ॥ १७ ॥**

17. கதம் வித்யாம் அஹம் யோகிந் த்வாம் ஸதா பரிசிந்தயந்
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்ய: அஸி பகவந் மயா.

ஹே யோகிந், ஹே பகவந் !, அஹம் - நான், ஸதா-எப்போதும், த்வாம்-தங்களை, பரிசிந்தயந் - தியானிப்பவனாய், கதம் வித்யாம் - எப்படி யறிவேன் ? கேஷு கேஷு ச பாவேஷு - எந்த எந்த பாவனையில் (மூர்த்தம்) மயா - என்னால், சிந்த்ய: அஸி - தியானிக்கத்தகுந்தவர் ஆகிறீர்.

**विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन ।**
**भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥ १८ ॥**

18. விஸ்தரேண ஆத்மந: யோகம் விபூதிம் ச ஜநார்தந
பூய: கதய த்ருப்தி: ஹி ச்ருண்வத: ந அஸ்தி மே அம்ருதம்.

ஹே ஜநார்தந !, ஆத்மந: யோகம் விபூதிம் ச - தங்களது யோகத்தையும், வைபவத்தையும், விஸ்தரேண பூய: கதய - விரிவாக மீண்டும் சொல்லவேண்டும், ஹி - ஏனெனில், அம்ருதம் ச்ருண்வத: மே - அம்ருதத்தைக்கேட்கும் எனக்கு, த்ருப்தி: நாஸ்தி - திருப்தி இல்லை.

**श्रीभगवानुवाच—**

**हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।**
**प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥ १९ ॥**

19. ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா: ஹி ஆத்ம விபூதய:
ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட ந அஸ்தி அந்த: விஸ்தரஸ்ய மே.

**பகவான் வாக்கியம்—**

ஹே குருச்ரேஷ்ட !, திவ்யா: ஆத்ம விபூதய: ப்ராதாந்யத:- திவ்யத்தன்மை பொருந்திய என் விபூதிகளில் பிரதானமானவைகளை, ஹந்த தே கதயிஷ்யாமி - இப்போது உனக்குச் சொல்லுகிறேன், ஹி - ஏனெனில், மே விஸ்தரஸ்ய - எனது விபூதிகளுக்கு, அந்த: ந அஸ்தி - முடிவு இல்லை.

**अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।**
**अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च ॥ २० ॥**

20. அஹம் ஆத்மா குடாகேஶ ஸர்வபூதாஶயஸ்தித꞉
அஹம் ஆதி꞉ ச மத்யம் ச பூதாநாம் அந்த꞉ ஏவ ச.

ஹே குடாகேஶ!, ஸர்வ பூதாஶயஸ்தித꞉ ஆத்மா அஹம் - ஸர்வ பிராணிகளின் ஹ்ருதயத்திலுமிருக்கிற பரமாத்மா நானே, அஹம் - நான், பூதாநாம் ஆதிஶ்ச மத்யம் ச அந்தஶ்ச - ஆதியாகவும், நடுவாகவும், முடிவாகவும் (உள்ளவன்).

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१ ॥

21. ஆதித்யாநாம் அஹம் விஷ்ணு꞉ ஜ்யோதிஷாம் ரவி꞉ அம்ஶுமாந்
மரீசி꞉ மருதாம் அஸ்மி நக்ஷத்ராணாம் அஹம் ஶஶீ.

அஹம் ஆதித்யாநாம் விஷ்ணு꞉ - நான் ஆதித்யர்களுக்குள் விஷ்ணு, ஜ்யோதிஷாம் அம்ஶுமாந் ரவி꞉ - வெளிச்சத்தைக் கொடுப்பவற்றுள் பரவியகிரணங்களையுடைய சூரியன், மருதாம் மரீசி꞉ அஸ்மி - மருத்துக்களுள் மரீசியாயிருக்கிறேன், நக்ஷத்ராணாம் அஹம் ஶஶீ - நக்ஷத்திரங்களுக்குள் நான் சந்திரன்.

वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।
इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥ २२ ॥

22. வேதாநாம் ஸாமவேத꞉ அஸ்மி தேவாநாம் அஸ்மி வாஸவ꞉
இந்த்ரியாணாம் மந꞉ ச அஸ்மி பூதாநாம் அஸ்மி சேதநா.

வேதாநாம் ஸாமவேத꞉ அஸ்மி-வேதங்களுள் ஸாமவேதமாக இருக்கிறேன். தேவாநாம் வாஸவ꞉ அஸ்மி - தேவர்களுள் இந்திரனாக இருக்கிறேன். இந்த்ரியாணாம் மநஶ்ச அஸ்மி - இந்திரியங்களுக்குள் மனதாக இருக்கிறேன். பூதாநாம் சேதநா அஸ்மி - பிராணிகளுக்குள் உணர்ச்சியாக இருக்கிறேன்.

रुद्राणां शंकरश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।
वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥ २३ ॥

**23.** ருத்ராணாம் ஶங்கர: ச அஸ்மி வித்தேஶ: யக்ஷரக்ஷஸாம்
வஸூநாம் பாவக: ச அஸ்மி மேரு: ஶிகரிணாம் அஹம்.

அஹம் ருத்ராணாம் ஶங்கர: அஸ்மி-நான் ருத்திரர்களுள் சங்கரனாக இருக்கிறேன், யக்ஷரக்ஷஸாம் வித்தேஶ: ச - யக்ஷராக்ஷஸருள் குபேரன், வஸூநாம் பாவகஶ்ச - வஸுக்களுள் அக்கினி, ஶிகரிணாம் மேரு: அஸ்மி - மலைச்சிகரங்களுள் மேருவாக இருக்கிறேன்.

**पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।**
**सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥ २४ ॥**

**24.** புரோதஸாம் ச முக்யம் மாம் வித்தி பார்த ப்ருஹஸ்பதிம்
ஸேநாநீநாம் அஹம் ஸ்கந்த: ஸரஸாம் அஸ்மி ஸாகர:.

ஹே பார்த்த !, புரோதஸாம் - புரோகிதர்களுக்குள், மாம் - என்னை, முக்யம் ப்ரஹஸ்பதிம் ச வித்தி - முதன்மையான ப்ரஹஸ்பதியாக அறிவாயாக, அஹம் ஸேநாநீநாம் ஸ்கந்த: - நான் சேனாதி பதிகளுள் குமாரமூர்த்தி, ஸரஸாம் ஸாகர: அஸ்மி - ஜலாசயங்களுள் சமுத்திரமா யிருக்கிறேன்.

**महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।**
**यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥ २५ ॥**

**25.** மஹர்ஷீணாம் ப்ருகு: அஹம் கிராம் அஸ்மி ஏகம் அக்ஷரம்
யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞ: அஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய:.

அஹம் மஹர்ஷீணாம் ப்ருகு: - நான் மஹர்ஷிகளில் ப்ருகு மஹாரிஷி, கிராம் ஏகம் அக்ஷரம் அஸ்மி - பதங்களுள் ஒப்பற்ற ஓம் என்னும் அக்ஷரமாயிருக்கிறேன். யஜ்ஞாநாம் ஜபயஜ்ஞ: - யஜ்ஞங்களுக்குள் ஜபமாகிய யஜ்ஞம், ஸ்தாவராணாம் ஹிமாலய: அஸ்மி - ஸ்தாவரங்களுள் ஹிமோத்கிரியாயிருக்கிறேன்.

**अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।**
**गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥ २६ ॥**

26. அஶ்வத்த2: ஸர்வவ்ருக்ஷாணாம் தே3வர்ஷீணாம் ச நாரத3:
க3ந்த4ர்வாணாம் சித்ரரத2: ஸித்3தா4நாம்கபிலோ முநி:.

ஸர்வவ்ருக்ஷாணாம் அஶ்வத்த: - எல்லாவ்ருக்ஷங்களுள் அரச மரம் (நான்), தேவர்ஷீணாம் நாரத: - தேவரிஷிகளுள் நாரத ருஷி (யாயிருக்கிறேன்), கந்தர்வாணாம் சித்ரரத: - கந்தர்வர்களுள் சித்ரரதன், ஸித்தாநாம் கபிலோமுநி: - ஸித்தர்களுள் கபிலமுனி (நான்).

**उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।**
**ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥ २७ ॥**

27. உச்சை:ஶ்ரவஸம் அஶ்வாநாம் வித்3தி4 மாம் அம்ருதோத்3ப4வம்
ஐராவதம் க3ஜேந்த்3ராணாம் நராணாம் ச நராதி4பம்.

அஶ்வாநாம் அம்ருதோத்பவம் உச்சைஶ்ரவஸம் - அஶ்வங்களுள் அம்ருதத்துடன் உண்டான உச்சைஶ்ரவஸம் என்னும் குதிரையாகவும், கஜேந்திராணாம் ஐராவதம் - சிறந்த யானைகளுள் ஐராவதமாயும், நராணாம் நராதிபம் ச - மனிதர்களுள் அரசனாகவும், மாம் வித்தி - என்னை அறிவாயாக.

**आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् ।**
**प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणामस्मि वासुकिः ॥ २८ ॥**

28. ஆயுதா4நாம் அஹம் வஜ்ரம் தே4நூநாம் அஸ்மி காமது4க்
ப்ரஜந: ச அஸ்மி கந்த3ர்ப: ஸர்பாணாம் அஸ்மி வாஸுகி:.

அஹம் ஆயுதாநாம் வஜ்ரம் - நான் ஆயுதங்களுக்குள் வஜ்ராயுதம், தேநூநாம் காமதுக் அஸ்மி - பசுக்களுள் காமதேனுவாயிருக்கிறேன், ப்ரஜந: கந்தர்ப: அஸ்மி - பிரஜைகளை பிறப்பிக்கும் மன்மதனுயிருக்கிறேன். ஸர்ப்பாணாம் வாஸுகிஶ்ச அஸ்மி-ஸர்ப்பங்களுள் வாஸுகியாயிருக்கிறேன்.

**अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।**
**पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९ ॥**

29. அநந்த꞉ ச அஸ்மி நாகாநாம் வருண꞉ யாத³ஸாம் அஹம்
பித்ரூணாம் அர்யமா ச அஸ்மி யம꞉ ஸம்யமதாம் அஹம்.

அஹம் நாகாநாம் அநந்த꞉ - நான் நாகங்களுள் அநந்தன், யாதஸாம் வருண꞉ ச அஸ்மி - ஜலதேவதைகளுள் வருணனயிருக்கிறேன், அஹம் பித்ரூணாம் அர்யமா - நான் பித்ருதேவதைகளுள் அர்யமாவாகவும், ஸம்யமதாம் யம꞉ ச அஸ்மி - தண்டிப்பவருள் யமனுயுமிருக்கிறேன்.

**प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।**
**मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३० ॥**

30. ப்ரஹ்லாத³꞉ ச அஸ்மி தை³த்யாநாம் கால꞉ கலயதாம் அஹம்
ம்ருகா³ணாம் ச ம்ருகே³ந்த்³ர꞉ அஹம் வைநதேய꞉ ச பக்ஷிணாம்.

தைத்யாநாம ப்ரஹ்லாத꞉ - தைத்தியர்களுள் ப்ரஹ்லாதனையும், கலயதாம் கால꞉ ச அஹம் அஸ்மி - கணக்கிடுகிறவர்களுள் காலமாக நானிருக்கிறேன். ம்ருகாணாம் ம்ருகேந்த்ரஶ்ச - மிருகங்களுள் மிருக அரசனை சிங்கம், பக்ஷீணாம் வைநதேயஶ்ச அஹம் - பக்ஷிகளுள் நான் விநதாபுத்திரனை கருடன்.

**पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।**
**झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१ ॥**

31. பவந꞉ பவதாம் அஸ்மி ராம꞉ ஶஸ்த்ரப்⁴ருதாம் அஹம்
ஜ²ஷாணாம் மகர꞉ ச அஸ்மி ஸ்ரோதஸாம் அஸ்மி ஜாஹ்நவீ.

பவதாம் பவந꞉ - பரிசுத்தம் செய்யும் வஸ்துக்களுள் வாயுவாகவும், ஶஸ்த்ர ப்ருதாம்ராம꞉ அஹமஸ்மி - ஆயுதந் தரித்தவர்களுள் ராமராகவும் நானிருக்கிறேன். ஜஷாணாம் மகர꞉ ச அஸ்மி - மீன்களுள் மகர மீனுயிருக்கிறேன். ஸ்ரோதஸாம் ஜாஹ்நவீ அஸ்மி - நதிகளுள் கங்காநதியாயிருக்கிறேன்.

**सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।**
**अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२ ॥**

32. ஸர்காணாம் ஆதி: அந்த: ச மத்யம் ச ஏவ அஹம் அர்ஜுந
அத்யாத்ம வித்யா வித்யாநாம் வாத: ப்ரவததாம் அஹம்.

ஹே அர்ஜுந!, ஸர்காணாம் - ஸிருஷ்டிகளுக்கு, ஆதி: மத்யம் ச அந்தஶ்ச அஹமேவ-அடி நடு முடிவு நானே, அஹம் வித்யாநாம் அத்யாத்மவித்யா - நான் வித்தைகளுக்குள் ஆத்மாவைப்பற்றிய வித்தையாயும், ப்ரவததாம் வாத: அஸ்மி - தர்க்கிப்பவர்களது வாதமாயுமிருக்கிறேன்.

**अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताऽहं विश्वतोमुखः ॥ ३३ ॥**

33. அக்ஷராணாம் அகார: அஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச
அஹம் ஏவ அக்ஷய: கால: தாதா அஹம் விஶ்வதோ முக:.

அக்ஷராணாம் அகார:-எழுத்துக்களுள்-அ என்னும் எழுத்தாயும், ஸாமாஸிகஸ்ய த்வந்த்வ: அஸ்மி-தொகைக்கூட்டத்தில் "த்வந்த்வம்" என்னும் ஸமாஸமாயிருக்கிறேன் (உம்மைத் தொகை). அக்ஷய: கால: அஹமேவ-ஓயாத காலம் நானே. விஶ்வதோமுக: தாதா அஹம் - எங்கும் முகமுள்ளவனாய் (ஸர்வவியாபி) கர்மபலனைக் கொடுப்பவன் நானே.

**मृत्युः सर्वहरश्चाह मुद्भवश्च भविष्यताम् ।
कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥ ३४ ॥**

34. ம்ருத்யு: ஸர்வஹர: ச அஹம் உத்பவ: ச பவிஷ்யதாம்
கீர்த்தி: ஶ்ரீ: வாக் ச நாரீணாம் ஸ்ம்ருதி: மேதா த்ருதி: க்ஷமா.

ஸர்வஹர: ம்ருத்யுஶ்ச-எல்லாவற்றையும் அபகரிக்கும் ம்ருத்யுவும், பவிஷ்யதாம் உத்பவஶ்ச - சுபத்தையடையத் தகுந்தவர்களது ஓங்கிய செல்வமும், நாரீணாம் - ஸ்திரீகளுள், கீர்த்தி:-கீர்த்தியும், ஶ்ரீ: - ஐஶ்வர்யமும், வாக் - வாக்கும், ஸ்ம்ருதி: - நினைவும், மேதா - அறிவும், த்ருதி: - தைர்யமும், க்ஷமா ச - பொறுமையும், அஹம் - நானே.

बृहत्साम तथा साम्नां गायत्री छन्दसामहम् ।
मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः ॥ ३५ ॥

35. ப்ருஹத்ஸாம தயா ஸாம்நாம் காயத்ரீ சந்தஸாம் அஹம்
மாஸாநாம் மார்கசீர்ஷ: அஹம் ருதூநாம் குஸுமாகர:.

ததா - அப்படியே, ஸாம்நாம் ப்ருஹத்ஸாம - ஸாமங்களில் ப்ருஹத்ஸாமமாயும், சந்தஸாம் காயத்ரீ அஹம் - சந்தங்களில் காயத்ரீநானே, மாஸாநாம் மார்கசீர்ஷ: - மாதங்களுள் மார்கழி மாதமும், ருதூநாம் குஸுமாகர: அஹம்-ருதுக்களுள் புஷ்பிக்கும் காலம் (வஸந்தம்) நான்.

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥३६॥

36. த்யூதம் சலயதாம் அஸ்மி தேஜ: தேஜஸ்விநாம் அஹம்
ஜய: அஸ்மி வ்யவஸாய: அஸ்மி ஸத்வம் ஸத்வவதாம் அஹம்.

அஹம் சலயதாம் த்யூதம் - நான் வஞ்சகர்களது சூதாகவும், தேஜஸ்விநாம் தேஜ: அஸ்மி - ஒளியுள்ளவர்களுடைய ஒளியாயுமிருக்கிறேன். அஹம் ஜய: வ்யவஸாய: அஸ்மி - நான் வெற்றியும் முயற்சியுமாயிருக்கிறேன். ஸத்வவதாம் ஸத்வம் அஸ்மி - நான் நல்ல குணமுடையவர்களுடைய ஸத்துவ குணமாயிருக்கிறேன்.

वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनंजयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥ ३७ ॥

37. வ்ருஷ்ணீநாம் வாஸுதேவ: அஸ்மி பாண்டவாநாம் தநஞ்ஜய:
முநீநாம் அபி அஹம் வ்யாஸ: கவீநாம் உசநா கவி:.

வ்ருஷ்ணீநாம் வாஸுதேவ: - யாதவர்களுள் வாஸுதேவனும், பாண்டவாநாம் தநஞ்ஜய: - பாண்டவர்களுள் அர்ஜுனனும், முநீநாம் அபி வ்யாஸ: - முநிவர்களுள் வேதவியாஸராயும், கவீநாம் உசநா கவி: அஹம் அஸ்மி - கவிகளுள் சுக்ரனும் நானிருக்கிறேன்.

दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८ ॥

38. தண்டः தமயதாம் அஸ்மி நீதிः அஸ்மி ஜிகீஷதாம் [அஹம்.
மௌநம் ச ஏவ அஸ்மி குஹ்யாநாம் ஜ்ஞாநம் ஜ்ஞாநவதாம்

தமயதாம் தண்டः அஸ்மி - தண்டிப்பவருள் செங்கோலாக இருக்கிறேன். ஜிகீஷதாம் நீதிः அஸ்மி - ஜயத்தை விரும்புகிறவர்களுள் நீதியாயிருக்கிறேன். குஹ்யாநாம் மௌநம் ச - ரகஸ்யங்களுள் மௌநமும், ஜ்ஞாநவதாம் ஜ்ஞாநம் அஹமேவ அஸ்மி - ஞானிகளின் ஞானமும் நானுகவே யிருக்கிறேன்.

यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।
न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् ॥ ३९ ॥

39. யத் ச அபி ஸர்வபூதாநாம் பீஜம் தத் அஹம் அர்ஜுந
ந தத் அஸ்தி விநா யத் ஸ்யாத் மயா பூதம் சராசரம்.

ஹே அர்ஜுந !, ஸர்வ பூதாநாம் ச யத்பீஜம் - சகல பொருள்களுக்கும் எது விதையோ, தத் அஹமபி - அது நானே; சராசரம் யத் பூதம் ஸ்யாத் - ஜங்கம தாவரங்களாகிய எந்த வஸ்து (உலகத்தில்) இருக்கிறதோ, தத்-அதெல்லாம், மயாவிநா ந அஸ்தி- என்னை யன்றி இல்லை.

नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परन्तप ।
एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४० ॥

40. ந அந்தः அஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப
ஏஷः து உத்தேசதः ப்ரோக்தः விபூதேः விஸ்தரः மயா.

ஹே பரந்தப !, மம திவ்யாநாம் விபூதிநாம் அந்தः ந அஸ்தி - எனது திவ்யத்தன்மையுள்ள விபவங்களுக்கு முடிவு இல்லை. விபூதேः ஏஷது விஸ்தரः - விபவத்தின் இந்த விரிவானது, உத்தேசதः - ஒரு உத்தேசமாக (ஏதோ ஒரு சிறிதளவு), மயா ப்ரோக்தः - என்னுல் சொல்லப்பட்டது.

**यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।**
**तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसम्भवम् ॥ ४१ ॥**

41. யத்யத் விபூதிமத் ஸத்வம் ஶ்ரீமத் ஊர்ஜிதம் ஏவ வா
தத் தத் ஏவ அவகச்ச த்வம் மம தேஜோம்ஶ ஸம்பவம்.

விபூதிமத் ஶ்ரீமத் ஊர்ஜித மேவவா - மஹிமை, ஐஶ்வர்யம், உத்ஸாஹத்துடன்கூடிய, ஸத்வம் யத் யத் - வஸ்து எதெதுவோ, தத் தத் - அது எல்லாம், மம தேஜோம்ஶ ஸம்பவ மேவ - எனது ஒளியின் ஒரு அம்சத்திலிருந்து உண்டானதாக, த்வம் அவகச்ச - நீ அறிந்துகொள்வாயாக.

**अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।**
**विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥ ४२ ॥**

42. அதவா பஹுநா ஏதேந கிம் ஜ்ஞாதேந தவ அர்ஜுந
விஷ்டப்ய அஹம் இதம் க்ருத்ஸ்நம் ஏகாம்ஶேந ஸ்திதஃ ஜகத்.

ஹே அர்ஜுந!, அதவா - அன்றி, ஜ்ஞாதேந பஹுநா ஏதேந தவ கிம் - அறிந்துகொண்ட அநேகமான இதனால் உனக்கு என்ன (இத்தனை யெல்லாம் எதற்கு?), அஹம் இதம் க்ருத்ஸ்நம் ஜகத் - நான் இந்த ஸகலப்ரபஞ்சத்தையும், ஏக அம்ஶேந - (என்) ஒரு அம்சத்தினால், விஷ்டப்யஃ ஸ்திதஃ - தாங்கிக்கொண்டிருக்கிறேன்.

**इति श्रीमद्भगवद्गीता० विभूतियोगो नाम दशमोऽध्यायः ।**



---

## விச்வரூப ஸந்தர்சந யோகம்.

अर्जुन उवाच—

**मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम् ।**
**यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १ ॥**

1. *மதநுக்ரஹாய பரமம் குஹ்யம் அத்யாத்ம ஸம்ஜ்ஞிதம்*
*யத் த்வயா உக்தம் வச: தேந மோஹ: அயம் விகத: மம.*

அர்ஜுனன் வாக்கியம்—

*மதநுக்ரஹாய* - என்னை ஈடேற்றும்பொருட்டு, *அத்யாத்ம ஸம்ஜ்ஞிதம்* - அத்யாத்மம் என்னும் பெயருள்ள, *பரமம் குஹ்யம்* - மிக ரகஸ்யமான, *யத்வச:* - எந்த வாக்கியமானது, *த்வயா உக்தம்* - தங்களால் சொல்லப்பட்டதோ, *தேந* - அதனால், *மம அயம் மோஹ: விகத:* - எனது இந்த மயக்கமானது போய்விட்டது.

**भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।**
**त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २ ॥**

2. *பவாப்யயௌ ஹி பூதாநாம் ச்ருதௌ விஸ்தரச: மயா*
*த்வத்த: கமல பத்ராக்ஷ மாஹாத்ம்யம் அபி ச அவ்யயம்.*

*ஹே கமலபத்ராக்ஷ* - தாமரை இதழ்போன்ற கண்களையுடையவரே!, *பூதாநாம் பவாப்யயௌ* - பூதங்களின் பிறப்பு இறப்புக்கள், *த்வத்த:* - தங்களிடமிருந்து, *மயா* - என்னால், *விஸ்தரச: ஹி ச்ருதௌ* - விரிவாகவே கேட்கப்பட்டன. *அவ்யயம் மாஹாத்ம்யமபி ச* - அழிவில்லாத (தமது) மஹத்துவமும் கூட (கேட்கப்பட்டது).

एवमेतद्यथाऽऽत्थ त्वमात्मानं परमेश्वर ।
द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३ ॥

3. ஏவம் ஏதத் யதா ஆத்த த்வம் ஆத்மாநம் பரமேஶ்வர
த்ரஷ்டும் இச்சாமி தே ரூபம் ஐஶ்வரம் புருஷோத்தம.

ஹே பரமேஶ்வர !, த்வம் - தாங்கள், ஆத்மாநம் - தங்களைக் குறித்து, யதா ஆத்த - எப்படிச் சொல்லுகின்றீர்களோ, ஏதத் ஏவம் - அது அப்படித்தான். ஹே புருஷோத்தம !, தே ஐஶ்வரம் ரூபம் - தங்களது ஈஶ்வர ரூபத்தை, த்ரஷ்டும் இச்சாமி - பார்க்க இஷ்டப்படுகிறேன்.

मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४ ॥

4. மந்யஸே யதி தத் ஶக்யம் மயா த்ரஷ்டும் இதி ப்ரபோ
யோகேஶ்வர ததஃ மே த்வம் தர்ஶய ஆத்மாநம் அவ்யயம்.

ஹே ப்ரபோ !, தத் மயா த்ரஷ்டும் ஶக்யம் இதி - அந்த (ரூபம்) என்னால் பார்ப்பதற்கு முடியும் என்று, மந்யஸேயதி - (தாங்கள்) எண்ணினால், ததஃ - அப்போது, ஹே யோகேஶ்வர !, த்வம் - தாங்கள், அவ்யயம் ஆத்மாநம் - அழிவில்லாத தங்கள் உருவத்தை, மே தர்ஶய - எனக்குக் காட்டவேண்டும்.

श्रीभगवानुवाच—

पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ५ ॥

5. பஶ்ய மே பார்த ரூபாணி ஶதஶஃ அத ஸஹஸ்ரஶஃ
நாநாவிதாநி திவ்யாநி நாநா வர்ணாக்ருதீநி ச.

பகவான் வாக்கியம்—

ஹே பார்த்த !, நாநாவிதாநி - பலவிதங்களாயும், திவ்யாநி - தெய்வத்தன்மை பொருந்தியதாயும், நாநாவர்ணாக்ருதீநி ச - பல

நிறங்களையும் உருவங்களையு முடையனவாயும்; ஶதஶ: அத ஸஹஸ்ரஶ:- நூற்றுக்கணக்காயும் பின்னும் ஆயிரக்கணக்காயு முள்ள, மே ரூபாணி பஶ்ய - எனது ரூபங்களைப்பார்.

**पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।**
**बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥**

6. பஶ்ய ஆதித்யாந் வஸூந் ருத்ராந் அஶ்விநௌ மருத: ததா
பஹூநி அத்ருஷ்ட பூர்வாணி பஶ்ய ஆஶ்சர்யாணி பாரத.

ஹே பாரத!, ஆதித்யாந் வஸூந் ருத்ராந் அஶ்விநௌ மருத: பஶ்ய - ஆதித்யர், வஸுக்கள், ருத்திரர், அஶ்விநீ தேவதைகள் மருத்துக்களையும் பார்; ததா - அவ்விதமே, அத்ருஷ்ட பூர்வாணி - (இதற்கு) முன் பார்க்கப்படாத ஆஶ்சர்யாணி பஶ்ய: ஆச்சரியங்களைப்பார்.

**इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।**
**मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥ ७ ॥**

7. இஹ ஏகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்நம் பஶ்ய அத்ய ஸ சராசரம்
மம தேஹே குடாகேஶ யத் ச அந்யத் த்ரஷ்டும் இச்சஸி.

ஹே குடாகேஶ!, மம இஹ தேஹே ஏகஸ்தம்-எனது இந்த தேகத்தின் ஒரு பாகத்திலிருக்கும், ஸ சராசரம் ஜகத் க்ருத்ஸ்நம் - சராசரங்களுடன் கூடிய ஜகத் முழுவதையும், அத்ய பஶ்ய - இப்போது பார்ப்பாயாக. அந்யத் ச யத் த்ரஷ்டும் இச்சஸி - வேறு இன்னும் எதைப் பார்க்க இச்சிக்கின்றாயோ, தத் பஶ்ய - அதையும் (நீ) பார்.

**न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा ।**
**दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥ ८ ॥**

8. ந து மாம் ஶக்யஸே த்ரஷ்டும் அநேந ஏவ ஸ்வ சக்ஷுஷா
திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோகம் ஐஶ்வரம்.

அநேந ஏவ ஸ்வசக்ஷுஷா - உனது இந்த கண்களினாலேயே மாம் த்ரஷ்டும் ந ஶக்யஸே து - என்னைப் பார்த்தல் முடியாது, தே திவ்யம் சக்ஷுஃ ததாமி - உனக்குத் தெய்வத்தன்மைவாய்ந்த கண்களை (ஞானக்கண் - அறிவுக்கண்) கொடுக்கிறேன். மே ஐஶ்வரம் யோகம் பஶ்ய - எனது ஈஶ்வர யோக மஹிமையைப் பார்.

सञ्जय उवाच--

**एवमुक्त्वा ततो राजन्महायोगेश्वरो हरिः ।**
**दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥ ९ ॥**

9. ஏவம் உக்த்வா ததஃ ராஜந் மஹா யோகேஶ்வரஃ ஹரிஃ
தர்ஶயாமாஸ பார்தாய பரமம் ரூபம் ஐஶ்வரம்.

ஸஞ்ஜயன் வாக்கியம்—

ஹே ராஜன்!, ஹே திருதராஷ்ட்ர மஹாராஜ!, மஹா யோகேஶ்வரஃ ஹரிஃ - சிறந்த யோகங்களுக்குத் தலைவரான ஹரியானவர், ஏவம் உக்த்வா - இவ்விதம் சொல்லி, தத - பிறகு, பரமம் ஐஶ்வரம் ரூபம் - சிறந்த (தனது) ஈஶ்வர ரூபத்தை, பார்த்தாய - அர்ஜுனன்பொருட்டு தர்ஶயாமாஸ - காண்பித்தார்.

**अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।**
**अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥**

10. அநேக வக்த்ரநயநம் அநேகாத்புத தர்ஶநம்
அநேக திவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம்.

அநேக வக்த்ர நயநம் - அநேகம் முகங்களையும் கண்களையும், அநேக அத்புத தர்ஶநம் - அநேகம் அழகிய காக்ஷிகளையும், அநேக திவ்ய ஆபரணம் - அநேகம் அழகிய ஆபரணங்களையும், திவ்ய அநேகோத்யதாயுதம் - திவ்யமான அநேக ஆயுதங்களை உடைய (ரூபத்தைக் காண்பித்தார்).

**दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् ।**
**सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतोमुखम् ॥ ११ ॥**

11. திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தானுலேபநம்
ஸர்வ ஆஸ்சர்யமயம் தேவம் அநந்தம் விஸ்வதோமுகம்.

திவ்ய மால்யாம்பரதரம்- அழகிய புஷ்பங்களையும் ஆடைகளையும் அணிந்துகொண்டும், திவ்ய கந்தாநுலேபநம் - திவ்யமான பரிமள வஸ்துக்களைப் பூசிக்கொண்டும், ஸர்வ ஆஸ்சர்ய மயம் தேவம்-மிகவும் ஆச்சர்யமாயும், பிரகாசிப்பதாயும், அநந்தம் விஸ்வதோ முகம்- எங்கும் முகங்களை யுடையதாயுமுள்ள (விஸ்வரூபத்தைக் காண்பித்தார்).

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥१२॥

12. திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபத் உத்திதா
யதி பாஃ ஸத்ருஸீ ஸா ஸ்யாத் பாஸஃ தஸ்ய மஹாத்மந.

ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பாஃ - ஆயிரம் சூர்யர்களது பிரகாசமானது, யுகபத் திவி உத்திதா பவேத்யதி - ஒரே காலத்தில் ஆகாயத்தில் உண்டாயிருக்குமானால், ஸா - அது, தஸ்ய மஹாத்மநஃ பாஸஃ - அந்த மஹாத்மாவின் பிரகாசத்துக்கு, ஸத்ருஸீ ஸ்யாத் - ஒப்பாகும்.

तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥ १३ ॥

13. தத்ர ஏகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்நம் ப்ரவிபக்தம் அநேகதா
அபஸ்யத் தேவ தேவஸ்ய ஸரீரே பாண்டவஃ ததா.

தேவ தேவஸ்ய தத்ர ஸரீரே - தேவாதி தேவரது அந்த விஸ்வரூப சரீரத்தில், அநேகதா ப்ரவிபக்தம் - பலவாருகப் பிரிந்துள்ள, க்ருத்ஸ்நம் ஜகத் - சகல பிரபஞ்சத்தையும், ஏகஸ்தம் - ஒரு பாகத்திலிருப்பதாக, ததா - அப்போது, பாண்டவஃ அபஸ்யத் - அர்ஜுனன் பார்த்தான்.

ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनञ्जयः ।
प्रणम्य शिरसा देवं कृताञ्जलिरभाषत ॥ १४ ॥

**14.** *ததஃ ஸஃ விஸ்மய ஆவிஷ்ட ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜயஃ*
*ப்ரணம்ய ஶிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிஃ அபாஷத.*

*ததஃ ஸஃ தனஞ்ஜயஃ - பிறகு அந்த அர்ஜுனன், விஸ்மய ஆவிஷ்டஃ ஹ்ருஷ்டரோமா - ஆச்சர்யமும் மயிர் சிலிர்ப்பு முடையவனாய், தேவம் ஶிரஸா ப்ரணம்ய - பகவானைத் தலையால் நன்கு வணங்கி, க்ருதாஞ்ஜலிஃ - கை கூப்பிக்கொண்டு, அபாஷத - சொல்லலுற்றான்.*

**अर्जुन उवाच —**

पश्यामि देवांस्तव देव देहे
सर्वांस्तथा भूतविशेषसंघान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थ
मृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥ १५ ॥

**15.** *பஶ்யாமி தேவாந் தவ தேவ தேஹே*
*ஸர்வாந் ததா பூதவிஶேஷ ஸங்காந்*
*ப்ரஹ்மாணம் ஈஶம் கமலா ஸநஸ்தம்*
*ருஷீந் ச ஸர்வாந் உரகாந் ச திவ்யாந்.*

அர்ஜுனன் வாக்கியம்—

*ஹே தேவ!, தவ தேஹே - தங்கள் சரீரத்தில், ஸர்வாந் தேவாந் - எல்லா தேவர்களையும், ததா - அப்படியே, பூத விஶேஷ ஸங்காந் - பிராணிகளின் பல வகுப்புகளின் திரள்களையும், கமலா ஸநஸ்தம் ஈஶம் ப்ரஹ்மாணம் - கமலாஸனத் திலிருக்கும் ஈஶ்வர ஞான ப்ரம்மாவையும், ஸர்வாந் ருஷீம் ச - சகல ரிஷிகளையும், திவ்யாந் உரகாம் ச - திவ்யமான ஸர்ப்பங்களையும், பஶ்யாமி - பார்க்கின்றேன்.*

अनेकबाहूदरवक्त्रनेत्रं
पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।

नान्तं न मध्यं न पुनस्तवादिं
पश्यामि विश्वेश्वर विश्वरूपम् ॥ १६ ॥

16. அநேக பாஹூதர வக்த்ர நேத்ரம்
பஶ்யாமி த்வா ஸர்வத: அநந்த ரூபம்
ந அந்தம் ந மத்யம் ந புந: தவ ஆதிம்
பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூபம்.

ஹே விஶ்வேஶ்வர!, ஹே விஶ்வரூப!, அநேக பாஹூதர வக்த்ர நேத்ரம் - அநேகம் கைகள், வயிறுகள், முகங்கள் கண்களையும், அநந்த ரூபம் - அநேக ரூபங்களையு முடைய, த்வா - தங்களை, ஸர்வத: பஶ்யாமி - எங்கிலும் பார்க்கிறேன். புந: தவ ஆதிம் ந பஶ்யாமி - ஆனால் தங்களது முதலை நான் காணவில்லை, மத்யம் ந அந்தம் ந - நடுவையும் முடிவையும் காணவில்லை

किरीटिनं गदिनं चक्रिणं च
तेजोराशिं सर्वतो दीप्तिमन्तम् ।
पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्ताद्
दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥ १७ ॥

17. கிரீடிநம் கதிநம் சக்ரிணம் ச
தேஜோ ராஶிம் ஸர்வத: தீப்திமந்தம்
பஶ்யாமி த்வா துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்
தீப்த அநல அர்க்கத்யுதிம் அப்ரமேயம்.

கிரீடிநம் கதிநம் சக்ரிணம் ச - கிரீடம், கதை, சக்ராயுதம் இவைகளை யுடையவராயும், தேஜோராஶிம்- பிரகாசத்தின் கூட்டமாயும், ஸர்வத: தீப்திமந்தம்-எங்கிலும் காந்தியையுடைய வராயும், துர் நிரீக்ஷ்யம் - கஷ்டத்துடன் காணத் தகுந்தவராயும், தீப்த அநல அர்க்கத்யுதிம் - ஜ்வலிக்கின்ற அக்கினி, சூர்யன் இவற்றின் ஒளி போன்ற பிரகாசத்தை யுடையவராயும் உள்ள, த்வா - தங்களை, ஸமந்தாத் பஶ்யாமி - எங்கிலும் பார்க்கிறேன்.

त्वमक्षरं परमं वेदितव्यं
त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता
सनातनस्त्वं पुरुषो मतो मे ॥ १८ ॥

18. த்வம் அக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வம் அஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதாநம்
த்வம் அவ்யயః ஶாஶ்வத தர்ம கோப்தா
ஸநாதநః த்வம் புருஷஃ மதஃ மே.

த்வம் வேதிதவ்யம் பரமம் அக்ஷரம் - தாங்கள் அறியப் பட வேண்டிய மேலான அழிவற்ற வஸ்து, த்வம் அஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதாநம் - தாங்கள் இந்தப் பிரபஞ்சத்துக்கு மேலான ஆதாரம், த்வம் அவ்யய: - தாங்கள் மாறுதலற்றவர், ஶாஶ்வத தர்ம கோப்தா - சாசுவதமான தர்மங்களை ஸம்ரக்ஷிப்பவர், த்வம் ஸநாதநஃ புருஷஃ - எப்போதுமுள்ள பரம புருஷர் (என்று), மே மதஃ என்னால் தெரிந்து கொள்ளப படுகிறீர்.

अनादिमध्यान्तमनन्तवीर्य
मनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।
पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं
स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥ १९ ॥

19. அநாதி மத்யாந்தம் அநந்த வீர்யம்
அநந்த பாஹும் ஶஶி ஸூர்ய நேத்ரம்
பஶ்யாமி த்வா தீப்த ஹுதாஶ வக்த்ரம்
ஸ்வதேஜஸா விஶ்வம் இதம் தபந்தம்.

அநாதி மத்யாந்தம் - அடி நடு முடிவற்றவராயும், அநந்த வீர்யம் - மிகுந்த பராக்கிரம முடையவராயும், அநந்த பாஹும் - அளவற்ற கைகளை யுடையவராயும், சசி சூர்ய நேத்ரம் - சந்திர சூர்யர்களைக் கண்களாக உடையவராயும், தீப்த ஹுதாஶ வகத்ரம் -

ஜ்வலிக்கும் அக்கினியை முகமாக வுடையவராயும், ஸ்வதேஜஸா - தமது ஒளியினால், இதம் விஶ்வம் தபந்தம் - இந்தப் பிரபஞ்சத்தை எரிக்கின்றவராயும் (உள்ள), த்வாம் பஶ்யாமி - தங்களைப் பார்க்கிறேன்.

द्यावापृथिव्योरिदमन्तरं हि
व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।
दृष्ट्वाऽद्भुतं रूपमुग्रं तवेदं
लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २० ॥

20. த்யாவாப்ருதிவ்யோ: இதம் அந்தரம் ஹி
வ்யாப்தம் த்வயா ஏகேந திஶ: ச ஸர்வா:
த்ருஷ்ட்வா அத்புதம் ரூபம் உக்ரம் தவ இதம்,
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மந்.

ஹே மஹாத்மந்!, த்யாவா ப்ருதிவ்யோ: இதம் அந்தரம் ஹி - ஆகாயம் பூமி இவற்றின் இடைப்பிரதேசமானது, த்வயா ஏகேந வ்யாப்தம் - தங்கள் ஒருவராலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது. ஸர்வா: திஶ: - எல்லா திக்குக்களும் (அப்படியே . தவ உக்ரம் அத்புதம் இதம் ரூபம் த்ருஷ்ட்வா - தங்களது பயங்கரமான ஆச்சரியமான இந்த விஶ்வரூபத்தைப் பார்த்து, லோகத்ரயம் ப்ரவ்யதிதம் - மூன்று உலகங்களும் பயப்படுகின்றன.

अमी हि त्वां सुरसंघा विशन्ति
केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।
स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसंघाः
स्तुवन्ति त्वां स्तुतिभिःपुष्कलाभिः ॥ २१ ॥

21. அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா: விஶந்தி
கேசித் பீதா: ப்ராஞ்ஜலய: க்ருணந்தி

ஸ்வஸ்தி இதி உக்த்வா மஹர்ஷிஸித்தஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி:

அமீ ஹி ஸுரஸங்கா: த்வாம் விசந்தி - இந்த தேவதைகளின் கூட்டங்கள் தங்களுக்குள் பிரவேசிக்கின்றன, கேசித் - சிலர், பீதா: - பயந்தவர்களாய், ப்ராஞ்ஜலய: - கூப்பின கையுடன், க்ருணந்தி - துதிக்கின்றனர், மஹர்ஷி ஸித்தஸங்கா: - மஹர்ஷிகள், சித்தர்கள், இவர்களது கூட்டங்கள், ஸ்வஸ்தி இதி உக்த்வா - 'வாழி' எனக்கூறி, புஷ்கலாபி: ஸ்துதிபி: - நிரம்பிய துதிகளால், த்வாம் ஸ்துவந்தி - தங்களை ஸ்தோத்திரம் செய்கிறார்கள்.

रुद्रादित्या वसवो ये च साध्या
विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।
गन्धर्वयक्षाः सुरसिद्धसङ्घा
वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२ ॥

22. ருத்ராதித்யா: வஸவ: யே ச ஸாத்யா:
விச்வே அச்விநௌ மருத: ச ஊஷ்மபா: ச
கந்தர்வயக்ஷா ஸுரஸித்த ஸங்கா:
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதா: ச ஏவ ஸர்வே.

ருத்ராதித்யா: - ருத்திரர்களும் ஆதித்தியர்களும், வஸவ: - வஸுக்களும், ஸாத்யா: - ஸாத்தியர்களும், விச்வே - விச்வ தேவர்களும், அச்விநௌ - அச்விநி தேவதைகளும், மருதச் - மருத்துக்களும், ஊஷ்ம பாச் - பித்ரு தேவதைகளும், கந்தர்வ யக்ஷா ஸுர ஸித்த ஸங்கா: - கந்தர்வர், யக்ஷர், அஸுரர், ஸித்தர் இவர்களது கூட்டங்களும், யே - எவர்களோ (அவர்கள்), ஸர்வே ச ஏவ - எல்லோருமே, விஸ்மிதா: - ஆச்சர்யத்துடன், த்வாம் - தங்களை, வீக்ஷந்தே - பார்க்கிறார்கள்.

रूपं महत्ते बहुवक्त्रनेत्रं
महाबाहो बहुबाहूरुपादम् ।

बहूदरं बहुदंष्ट्राकरालं
दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाऽहम् ॥ २३ ॥

23. ரூபம் மஹத் தே ப³ஹு-வக்த்ரநேத்ரம்
மஹாபா³ஹோ ப³ஹு-பா³ஹூரு-பாத³ம்
ப³ஹூத³ரம் ப³ஹு-த³ம்ஷ்ட்ராகராளம்
த்³ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதி²தா: ததா² அஹம்.

ஹே மஹாபாஹோ !, பஹு-வக்த்ரநேத்ரம் - அநேக முகங்களையும் கண்களையும், பஹு-பாஹூரு-பாதம் - பல கைகள், துடைகள், கால்களையும், பஹூதரம் - பல வயிறுகளையும், பஹு-தம்ஷ்ட்ராகராளம் - பல பயங்கரமான கோரப் பற்களையும் (உடைய), தே மஹத் ரூபம் - தமது மிகப்பெரிதான ரூபத்தை, த்ருஷ்ட்வா - பார்த்து, லோகா: ப்ரவ்யதிதா: - உலகங்கள் நடுங்குகின்றன, அஹம் ததா - நானும் அப்படியே (நடுக்க மடைகின்றேன்).

नभः स्पृशं दीप्तमनेकवर्णं
व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा
धृतिं न विन्दामि शमंच विष्णो ॥ २४ ॥

24. நப⁴: ஸ்ப்ருஶம் தீ³ப்தம் அநேகவர்ணம்
வ்யாத்தாநநம் தீ³ப்தவிஶாலநேத்ரம்
த்³ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதி²தாந்தராத்மா
த்⁴ருதிம் ந விந்தா³மி ஶமம் ச விஷ்ணோ.

ஹே விஷ்ணோ !, நப: ஸ்ப்ருஶம் - ஆகாயத்தை யளாவியிருக்கிறவராயும், தீப்தம் - பிரகாசத்துடன்கூடினவராயும், அநேக வர்ணம் - பலவர்ண முடையவராயும், வியாத்தாநநம் - திறந்த வாய்களை யுடையவராயும், தீப்தவிஶாலநேத்ரம் - ஜ்வலிக்கும் விசாலமான கண்களை யுடையவராயுமுள்ள, த்வாம் - தங்களை

த்ருஷ்ட்வா ஹி - பார்த்தவுடனேயே, ப்ரவ்யதிதாந்தராத்மா - மனம் நடுங்கி, த்ருதிம் ஶமம் ச ந விந்தாமி - தைரியம், மன அமைதி (இரண்டையும்) அடையவில்லை.

दंष्ट्राकरालानि च ते मुखानि
दृष्ट्वैव कालानलसन्निभानि ।
दिशो न जाने न लभे च शर्म
प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥

25. தம்ஷ்ட்ராகராளானி ச தே முகானி
த்ருஷ்ட்வா ஏவ காலானலஸந்நிபானி
திஶ: ந ஜானே ந லபே ச ஶர்ம
ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ.

தம்ஷ்ட்ராகராளானி ச - கோரப் பற்களினால் பயங்கரமாயும், காலானலஸந்நிபானி - ப்ரளயகால அக்கினிக்கு ஒப்பாயுமுள்ள, தே முகானி - தமது முகங்களை, த்ருஷ்ட்வா ஏவ - பார்த்தவுடனேயே, திஶ: ந ஜானே - திக்குக்கள் தெரியவில்லை, ஶர்ம ச ந லபே - சுகத்தையும் அடையவில்லை. ஹே தேவேஶ - தேவதைகளின் தலைவ!, ஹே ஜகந்நிவாஸ - ஜகத்துக்கு ஆதாரமானவரே, ப்ரஸீத - தாங்கள் பழைய உருவத்துடன் பிரஸன்னமாவீராக.

अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः
सर्वे सहैवावनिपालसंघैः ।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथाऽसौ
सहास्मदीयैरपि योधमुख्यैः ॥ २६ ॥

26. அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வே ஸஹ ஏவ அவனிபாலஸங்கை:
பீஷ்ம: த்ரோண: ஸூதபுத்ர: ததா அஸௌ
ஸஹ அஸ்மதீயை: அபி யோதமுக்யை:.

वक्त्राणि ते त्वरमाणा विशन्ति
दंष्ट्राकरालानि भयानकानि ।
केचिद्विलग्ना दशनांतरेषु
संदृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः ॥ २७ ॥

27. வக்த்ராணி தே த்வரமாணாः விஶந்தி
தம்ஷ்ட்ராகராளாநி பயாநகாநி
கேசித் விலக்நாः தஶநாந்தரேஷு
ஸம்த்ருஶ்யந்தே சூர்ணிதைः உத்தமாங்கைः

அமீ த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ராः ஸர்வே ச - இந்த திருதராஷ்டிரனது புத்திரர்கள் அனைவரும், அவநிபால ஸங்கைः ஸஹ ஏவ - அரசர்களது கூட்டங்களுடன் கூடவே, த்வாம் விஶந்தி - தங்களுக்குள் பிரவேசிக்கின்றனர். ததா - அவ்விதமே, பீஷ்மः த்ரோணः - பீஷ்மர், துரோணர், அஸௌ ஸூதபுத்ரः - இந்த ஸூதபுத்திரனை கர்ணன், அஸ்மதீயைः யோதமுக்யைः ஸஹ அபி - நம்மைச் சேர்ந்த முக்கியமான போர்த்தலைவர்களுடன் கூட, த்வா விஶந்தி - தங்களுக்குள் பிரவேசிக்கின்றனர்.

அமீ - இவர்கள் (யாவரும்), தம்ஷ்ட்ராகராளாநி பயாநகாநி தே வக்த்ராணி - கோரப் பற்களினால் குரூரமாயும் பயங்கரமாயுமுள்ள தங்களது வாய்க்குள், த்வரமாணாः விஶந்தி - அதிவேகமாய் பிரவேசிக்கின்றனர். கேசித் - சிலர், தஶநாந்தரேஷு - பற்களுக் கிடையில், விலக்நாः - அகப்பட்டு, சூர்ணிதைः உத்தமாங்கைः - பொடிப்பொடியாகப் போன தலைகளுடன், ஸமத்ருஶ்யந்தே - காணப்படுகிறார்கள்.

यथा नदीनां बहवोऽम्बुवेगाः
समुद्रमेवाभिमुखा द्रवन्ति ।
तथा तवामी नरलोकवीरा
विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥ २८ ॥

28. யதா₂ நதீ₃நாம் ப₃ஹவ: அம்பு₃வேகா₃:
ஸமுத்₃ரம் ஏவ அபி₄முகா₂: த்₃ரவந்தி
ததா₂ தவ அமீ நரலோகவீரா:
விஸ₂ந்தி வக்த்ராணி அபி₄விஜ்வலந்தி.

யதா - எப்படி, நதீநாம் பஹவ: அம்பு வேகா: - நதிகளது மிகுந்த வேகமான ஜலப்பிரவாகங்கள், ஸமுத்ரமேவ அபிமுகா: த்₃ரவந்தி - சமுத்திரத்தையே எதிர்நோக்கி ஓடுகின்றனவோ, ததா - அப்படியே, அமீ நரலோக வீரா: - இந்த பூலோக வீரர்களும், அபிவிஜ்வலந்தி - ஜ்வலித்துக்கொண்டிருக்கும், தவ வக்த்ராணி - தங்களது வாய்க்குள், விஸ₂ந்தி பிரவேசிக்கின்றனர்.

**यथा प्रदीप्तं ज्वलनं पतंगा**
**विशन्ति नाशाय समृद्धवेगाः ।**
**तथैव नाशाय विशन्ति लोका-**
**स्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥**

29. யதா₂ ப்ரதீ₃ப்தம் ஜ்வலநம் பதங்கா₃:
விஸ₂ந்தி நாஸ₂ாய ஸம்ருத்₃த₄வேகா₃
ததா₂ ஏவ நாஸ₂ாய விஸ₂ந்தி லோகா:
தவ அபி வக்த்ராணி ஸம்ருத்₃த₄வேகா₃:

யதா - எப்படி, பதங்கா: - விட்டிற் பூச்சிகள், ஸம்ருத்த வேகா: - அதிக பரபரப்புடன், ப்ரதீப்தம் ஜ்வலநம் - எரிந்துகொண்டிருக்கும் அக்கினியை, நாஸ₂ாய - (தங்கள்) நாசத்தின் பொருட்டு, விஸ₂ந்தி - பிரவேசிக்கின்றனவோ, ததா ஏவ - அப்படியே, லோகா: அபி - (இந்த) ஜனங்களும், நாஸ₂ாய - (தங்களது) நாசத்தின்பொருட்டு, ஸம்ருத்தவேகா: - மிகுந்த விசையுடன், தவ வக்த்ராணி விஸ₂ந்தி - தங்களது வாய்களுக்குள் பிரவேசிக்கின்றனர்.

**लेलिह्यसे ग्रसमानः समन्ता-**
**ल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः ।**

तेजोभिरापूर्यजगत्समग्रं
भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥ ३० ॥

30. லேலிஹ்யஸே க்ரஸமாந: ஸமந்தாத்
லோகாந் ஸமக்ராந் வதநை: ஜ்வலத்பி:
தேஜோபி: ஆபூர்ய ஜகத் ஸமக்ரம்
பாஸ: தவ உக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ.

ஹே விஷ்ணோ! ஸமக்ரம் ஜகத் - எல்லா ஜகத்தையும், தேஜோபி: (தங்கள்) பிரகாசத்தினால், ஆபூர்ய - நிரப்பிக் கொண்டு, ஸமக்ராந் - லோகாந் - ஸமஸ்த லோகங்களையும், ஜ்வலத்பி: வதனை:- பிரகாசமான வாய்களினால், க்ரஸ மாந: - விழுங்கிக் கொண்டு, ஸ்மந்தாத் லேலிஹ்யஸே - எங்கிலும் ருசி பார்க்கின்றீர்கள். தவ உக்ரா: பாஸ: - தங்களது உக்கிரமான ஒளிகள், ப்ரதபந்தி - தாபத்தை உண்டாக்குகின்றன.

आख्याहि मे को भवानुग्ररूपो
नमोऽस्तु ते देववर प्रसीद ।
विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं
न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१ ॥

31. ஆக்யாஹி மே க: பவாந் உக்ரரூப:
நம: அஸ்து தே தேவவர ப்ரஸீத
விஜ்ஞாதும் இச்சாமி பவந்தம் ஆத்யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம்.

உக்ரரூப: பவாந் க: - உக்கிரமான வடிவத்தை யுடைய தாங்கள் யார் (என்பதை), மே ஆக்யாஹி - எனக்குச் சொல்லுவீராக, தேவ வர - தேவர்களுக் கெல்லாம் தலைவ! தே நமோஸ்து - தங்களுக்கு நமஸ்காரம், ப்ரஸீத - அருள் புரிய வேண்டும், ஆத்யம் - முதலிலுள்ள, பவந்தம் - தங்களை, விஜ்ஞாதும் இச்சாமி - நன்றாக அறிவதற்கு விரும்புகிறேன். ஹி - ஏனெனில், தவ ப்ரவ்ருத்திம் - தமது செய்கைகளை, ந ப்ரஜாநாமி - (நான்) அறியவில்லை.

श्रीभगवानुवाच—

कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो
लोकान्समाहर्तुमिह प्रवृत्तः ।
ऋतेऽपि त्वां न भविष्यन्ति सर्वे
येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥ ३२ ॥

32 காலஃ அஸ்மி லோக க்ஷயக்ருத் ப்ரவ்ருத்ஃ
லோகாந் ஸமா ஹர்தும் இஹ ப்ரவ்ருத்தஃ
ருதே அபி த்வா ந ஃவிஷ்யந்தி ஸர்வே
யே அவஸ்திதாஃ ப்ரத்யநீகேஷு யோதாஃ.

கிருஷ்ணபகவான் வாக்கியம்.—

லோகக்ஷயக்ருத் காலஃ - உலகங்களுக்கு அழிவையுண்டாக்கும் யமனுய், ப்ரவ்ருத்தஃ அஸ்து - ப்ரவ்ருத்தித்து இருக்கிறேன், லோகாந் ஸமாஹர்தும் - உலகங்களை ஸம்ஹரிக்கும் பொருட்டு, இஹப்ரவ்ருத்தஃ - இப்போது தலைப்பட்டிருக்கிறேன். ப்ரத்யநீகேஷு அவஸ்திதாஃ யோதாஃ - எதிரி சேனையில் நிற்கும் வீரர்கள், ஸர்வே-எல்லோரும், த்வா ருதேபி-உன்னையன்றியும்கூட (நீபோர் செய்யாவிட்டாலும்), ந பவிஷ்யந்தி - இருக்கப்போகிறதில்லை.

तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व
जित्वा शत्रून्भुङ्क्ष्व राज्यं समृद्धम् ।
मयैवैते निहता पूर्वमेव
निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥

33. தஸ்மாத் த்வம் உத்திஷ்ட யஶஃ லஃஸ்வ
ஜித்வா ஶத்ரூந் ஃங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம்
மயா ஏவ ஏதே நிஹதாஃ பூர்வம் ஏவ
நிமித்தமாத்ரம் ஃவ ஸவ்யஸாசிந்.

தஸ்மாத் - ஆதலால், த்வம் உத்திஷ்ட - நீ எழுந்திருப்பாயாக. யஶ: லபஸ்வ - கீர்த்தியைப் பெறுவாயாக. ஶத்ரூந் ஜித்வா - பகைவர்களை ஜயித்து, ஸம்ருத்தம் ராஜ்யம் புங்க்ஷ்வ - பகைவரற்ற ராஜ்யத்தை அனுபவி. ஹே ஸவ்யஸாசிந்! பூர்வமேவ ஏதே மயா நிஹதா:- முன்னாலேயே இவர்கள் என்னால் கொல்லப்பட்டுள்ளார்கள். நிமித்த மாத்ரம் பவ - நீ (கொல்வதற்குக்) காரணமாக மாத்திரம் இருப்பாயாக.

द्रोणं च भीष्मं च जयद्रथं च
कर्णं तथाऽन्यानपि योधवीरान् ।
मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा
युध्यस्व जेताऽसि रणे सपत्नान् ॥ ३४ ॥

34. த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதம் ச
கர்ணம் ததா அந்யாந் அபி யோதவீராந்
மயா ஹதாந் த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா:
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்நாந்.

மயா ஹதாந் - என்னால் கொல்லப்பட்டுள்ள, த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதம் ச கர்ணம் - துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன், கர்ணன் இவர்களையும், ததா - அப்படியே, அந்யாநபி யோத வீராந் - மற்ற போர் வீரர்களையும், த்வம் ஜஹி - நீ (நிமித்தமாத்திரம்) கொல்வாயாக. யுத்யஸ்வ - யுத்தஞ்செய்; மாவ்யதிஷ்டா: - பயப்படாதே. ரணே - யுத்தத்தில், ஸபத்நாந் - பகைவர்களை, ஜேதாஸி - ஜயிப்பாய்.

सञ्जय उवाच—

एतच्छ्रुत्वा वचनं केशवस्य
कृतांजलिर्वेपमानः किरीटी ।

नमस्कृत्वा भूय एवाह कृष्णं
सगद्गं भीतभीतः प्रणम्य ॥ ३५ ॥

35. ஏதத் ஶ்ருத்வா வசநம் கேஶவஸ்ய
நமஸ்க்ருத்வா க்ருதாஞ்ஜலி: வேபமாந: கிரீடி
பூய: ஏவ ஆஹ க்ருஷ்ணம்,
ஸகத்கதம் பீத பீத: ப்ரணம்ய.

ஸஞ்ஜயன் சொல்.—

வேபமாந: கிரீடி - பயப்படுகின்ற கிரீடி, கேஶவஸ்ய ஏதத் வசநம் ஶ்ருத்வா - கேசவரது இந்த வசனத்தைக்கேட்டு- க்ருதாஞ்ஜலி: - கை கூப்பி, கிருஷ்ணம் நமஸ்க்ருத்வா - கிருஷ்ணனை நமஸ்கரித்து, பீதபீத: - மிகவும் நடுக்கத்துடன், ப்ரணம்ய - வணங்கி, ஸகத்கதம் - தழதழத்த குரலுடன், பூய ஏவ ஆஹ - மறுபடியும் சொல்லலுற்றான்.

अर्जुन उवाच—

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या
जगत्प्रहृष्यत्यनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवन्ति
सर्वे नमस्यन्ति च सिद्धसंघाः ॥ ३६ ॥

36. ஸ்தாநே ஹ்ருஷீகேஶ தவ ப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யதி அநுரஜ்யதே ச
ரக்ஷாம்ஸி பீதாநி திஶ: த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா:.

அர்ஜுனன் வசனம்.—

ஹே ஹ்ருஷீகேஶ!, தவப்ரகீர்த்யா - தங்களைப் புகழ்வதனால், ஜகத் ப்ரஹ்ருஷ்யதி - உலகம் மிகுந்த சந்தோஷமடைகிறது, அநு

ரஜ்யதே ச - மிகுந்த ப்ரீதியையுமடைகிறது. ரக்ஷாம்ஸி பீதாநி திஶோ த்ரவந்தி - ராக்ஷஸர்கள் பயந்து (பல) திக்குக்களிலும் ஓடுகின்றனர். ஸித்த ஸங்கா: ஸர்வே நமஸ்யந்தி ச - ஸித்தர்களது கூட்டங்கள் எல்லாம் (தங்களை) வணங்குகின்றன. ஸ்தாநே - (இதெல்லாம்) பொருத்தமானதே.

कस्माच्च ते न नमेरन्महात्मन्
गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।
अनन्त देवेश जगन्निवास
त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७ ॥

37. கஸ்மாத் ச தே ந நமேரந் மஹாத்மந்
கரீயஸே ப்ரஹ்மண: அபி ஆதிகர்த்ரே
அநந்த தேவேஶ ஜகந்நிவாஸ
த்வம் அக்ஷரம் ஸத் அஸத் தத் பரம் யத்.

ஹே மஹாத்மந்!, ப்ரம்மணோ அபி ஆதிகர்த்ரே - ப்ரம்மாவுக்குங்கூட முதற்காரணமான, கரீயஸே - மிகப்பெரியவரான, தேதங்களை, கஸ்மாத் ந நமேரந் - ஏன் வணங்காமலிருப்பார்கள்! ஹே அநந்த - அந்தமில்லாதவரே!, தேவேஶ - தேவர்களுக்கு ஈஶ!, ஜகந்நிவாஸ - ஜகத்துக்கு ஆதாரமானவரே! ஸத் அஸத் ச - ஸத்தும் அஸத்தும், பரம் - மேலானதும், அக்ஷரம் - முடிவற்றதும், யத் - எதுவோ, தத்ச த்வம் - அதுவும் தாங்களே.

त्वमादिदेवः पुरुषः पुराण-
स्त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्ताऽसि वेद्यं च परं च धाम
त्वया ततं विश्वमनन्तरूप ॥ ३८ ॥

38. த்வம் ஆதிதேவ: புருஷ: புராண:
த்வம் அஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதாநம்

வேத்தா அஸி வேத்யம் ச பரம் ச தாம
த்வயா ததம் விச்வம் அநந்த ரூப.

த்வம்- தாங்கள், ஆதிதேவ: - முதற்கடவுள், புராண: புருஷ:- பழமையான புருஷர், த்வம் - தாங்கள், அஸ்யவிச்வஸ்ய பரம் நிதாநம் - இந்தப் பிரபஞ்சத்திற்குச் சிறந்த ஆதாரம், வேத்தா - (எல்லாவற்றையும்) அறிகிறவராயும், வேத்யம் - அறியப்படுபொருளாயும், பரம் ச தாம அஸி - உயர்ந்த நிலையாயும் இருக்கின்றீர்கள். ஹே அநந்தரூப!, த்வயா விச்வம் ததம் - தங்களால் பிரபஞ்சமெல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கின்றன.

वायुर्यमोऽग्निर्वरुणः शशांकः
प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः
पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३९ ॥

39. வாயு: யம: அக்நி: வருண: சசாங்க:
ப்ரஜாபதி: த்வம் ப்ரபிதாமஹ: ச
நம: நம: தே அஸ்து ஸஹஸ்ர க்ருத்வ:
புந: ச பூய: அபி நம: நம: தே.

த்வம் - தாங்கள், வாயு: - வாயு, அக்நி- அக்கினி, வருண:- வருணன், சசாங்க: - சந்திரன், ப்ரஜாபதி: - ப்ரஜாபதி, ப்ரபிதாமஹ: - ப்ரபிதாமகன் (எல்லாமாக இருக்கின்றீர்கள்). ஸஹஸ்ர க்ருத்வ: - ஆயிரம் முறை, தே நமோ நம அஸ்து - தங்களுக்கு நமஸ்காரம் இருக்கட்டும் (நமஸ்கரிக்கின்றேன்). புநச்ச பூயோ அபி- மீண்டும் மீண்டும், தே நம: நம:- தங்களுக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.

नमः पुरस्तादथ पृष्ठतस्ते
नमोऽस्तु ते सर्वत एव सर्व ।

अनन्तवीर्यामितविक्रमस्त्वं
सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४० ॥

40. நம: புரஸ்தாத் அத ப்ருஷ்டத:
தே நம: அஸ்து தே ஸர்வத: ஏவ ஸர்வ
அநந்த வீர்யா அமித விக்ரம: த்வம்
ஸர்வம் ஸமாப்நோஷி தத: அஸி ஸர்வ:.

ஹே ஸர்வ-ஸர்வமுமானவரே!, தே புரஸ்தாத் ப்ருஷ்டத: நம: - தங்களை முன்னும் பின்னும் நமஸ்கரிக்கிறேன். அத ஸர்வத ஏவ தே நம: அஸ்து-அவ்விதமே எங்கிலுமே தங்களுக்கு நமஸ்காரம் இருப்பதாக, அநந்த வீர்யாமித விக்ரம: த்வம் - மிகுந்த வல்லமையையும் அளவில்லாத பராக்கிரமத்தையு முடைய தாங்கள், ஸர்வம் ஸமாப்நோஷி - சகலத்தையும் வியாபித்திருக் கின்றீர்கள். தத: ஸர்வ: அஸி - ஆதலின் (தாங்களே) எல்லா மாகின்றீர்கள்.

सखेति मत्वा प्रसभं यदुक्तं
हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेदं
मया प्रमादात्प्रणयेन वाऽपि ॥ ४१ ॥

41 ஸகா இதி மத்வா ப்ரஸபம் யத் உக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகே இதி
அஜாநதா மஹிமாநம் தவ இதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேந வா அபி.

यच्चावहासार्थमसत्कृतोऽसि
विहारशय्यासनभोजनेषु ।

एकोऽथवाऽप्यच्युत तत्समक्षं
तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥ ४२ ॥

42. யத் ச அபஹாஸார்தம் அஸத்க்ருத: அஸி
விஹார ஶய்யாஸந போஜநேஷு
ஏக: அத வா அபி அச்யுத தத் ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாம் அஹம் அப்ரமேயம்.

தவ இதம் மஹிமாநம் - தங்களது இந்த மஹிமையை, அஜாநதா - அறியாத, மயா - என்னால், ஸகே இதி மத்வா - ஸிநேஹிதன் என்று நினைத்து, ப்ரமாதாத் ப்ரணயேநவாபி - அசட்டை அல்லது அன்பினால், ஹே க்ருஷ்ண, ஹே யாதவ, ஹே ஸகே இதி-என் கிருஷ்ண, ஓ யாதவ, என் தோழா என்று, ப்ரஸபம் யத் உக்தம் - அலக்ஷியமாய் எது சொல்லப்பட்டதோ, விஹார ஶய்யாஸந போஜநேஷு ச - மேலும் விளையாடும்போதும் படுத்திருக்கும்போதும் உட்கார்ந்திருக்கும்போதும் சாப்பிடும்போதும், அதவா ஏக: - அன்றித் தனிமையாயிருக்கும்போதும், ஸமக்ஷமபி- பிறர் எதிரிலேனும், அபஹாஸார்தம் - பிரகாசமாக, தத் அஸத் க்ருத: அஸி யத் - அவ்விதம் அலக்ஷியமாய் நடத்தப்பட்டிருக்கின்றீர்கள் (என்பது) எதுவோ, ஹே அச்யுத !, தத் - அதையெல்லாம், அப்ரமேயம் த்வாம் - ரூபித்துக் காட்டமுடியாத தங்களை, அஹம் க்ஷாமயே - நான் மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

पिताऽसि लोकस्य चराचरस्य
त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो
लोकत्रयेऽप्यप्रतिमप्रभावः ॥ ४३ ॥

43. பிதா அஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வம் அஸ்ய பூஜ்ய: ச குரு: கரீயாந்
ந த்வத் ஸம: அஸ்தி அப்யதிக: குத: அந்ய:
லோகத்ரயே அபி அப்ரதிம ப்ரபாவ:

த்வம் - தாங்கள், அஸ்ய சராசரஸ்ய லோகஸ்ய - இந்த சரா சரங்களுடன்கூடிய உலகத்துக்கு, பிதா - தலைவர். பூஜ்யஃ - பூஜிக்கத்தகுந்தவர், கரீயாந் குருঃ - மிகப்பெரிய குருமூர்த்தி. த்வத் ஸமঃ ந அஸ்தி- தமக்குச் சமமானவர் கிடையாது. ஹே அப் ரதிம ப்ரபாவ - நிகரற்ற பிரபாவத்தை யுடையவரே!, லோகத்ர யேபி - மூன்றுலகிலுங்கூட, அப்யதிகঃ அந்யঃ குதঃ - தங்களுக்கு மேலான வேறு ஒருவர் ஏது ? (ஒருவருமில்லை).

तस्मात्प्रणम्य प्रणिधाय कायं
प्रसादये त्वामहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः
प्रियः प्रियायार्हसि देवसोढुम् ॥ ४४ ॥

**44.** தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாம் அஹம் ஈசம் ஈட்யம்
பிதா இவ புத்ரஸ்ய ஸகா இவ ஸக்யுঃ
ப்ரியঃ ப்ரியாயாঃ அர்ஹஸி தேவ ஸோடும்.

தஸ்மாத் - ஆதலால், அஹம் - நான், காயம் ப்ரணிதாய-சரீரத் தைக் கீழே கிடத்தி, ப்ரணம்ய- வணங்கி, ஈசம் ஈட்யம் த்வாம் - ஈசனும் துதிக்கத் தகுந்தவருமான தங்களை, ப்ரஸாதயே - மன் னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறேன். புத்ரஸ்ய பிதேவ - மகனுக் குத் தந்தை போலும், ஸக்யுঃ ஸகே இவ- தோழனுக்குத் தோழன் போலும், ப்ரியாயாঃ ப்ரியঃ (இவ) - பிரிய பத்தினிக்குப் பிரியன் போலும், ஹே தேவ !, ஸோடும் அர்ஹஸி - (என் குற்றங்களை) பொருத்துக் கொள்ளுவதற்குத் தகுந்தவராகிறீர்.

अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा
भयेन च प्रव्यथितं मनो मे ।
तदेव मे दर्शय देवरूपं
प्रसीद देवेश जगन्निवास ॥ ४५ ॥

45. அத்ருஷ்ட பூர்வம் ஹ்ருஷிதஃ அஸ்மி த்ருஷ்ட்வா
பயேந ச ப்ரவ்யதிதம் மநஃ மே
தத் ஏவ மே தர்ஶய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ.

அத்ருஷ்ட பூர்வம் த்ருஷ்ட்வா - முன் பாராத (விஶ்வரூபத்தை) பார்த்து, ஹ்ருஷிதஃ அஸ்மி - நான் சந்தோஷமுள்ளவனாயிருக்கிறேன். மே மநஃ - என் மனம், பயேந - பயத்தினால், ப்ரவ்யதிதம் ச - நடுங்கிக் கொண்டுமிருக்கிறது. ஹே தேவ !, ஹே ஜகந்நிவாஸ !- ஓ தேவ! ஜகத்துக்கு ஆதாரமானவரே ! தத் ரூபம் ஏவ - (தங்களது) அந்த (எப்போதுமுள்ள) ரூபத்தையே, மே தர்ஶய - எனக்குக் காட்டவேண்டும். ஹே தேவேஶ ! ப்ரஸீத - பிரஸன்னமாவீராக.

किरीटिनं गदिनं चक्रहस्त
मिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन
सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥

46. கிரீடிநம் கதிநம் சக்ர ஹஸ்தம்
இச்சாமி த்வாம் த்ரஷ்டும் அஹம் ததா ஏவ
தேந ஏவ ரூபேண சதுர் புஜேந
ஸஹஸ்ர பாஹோ பவ விஶ்வ மூர்த்தே.

கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தம் த்வாம் - கிரீடத்தையும் கதையையும் கையில் சக்கிராயுதத்தையுமுடைய தங்களை, ததைவ த்ரஷ்டும் அஹம் இச்சாமி - அவ்விதமாகவே பார்க்க நான் இச்சிக்கின்றேன், ஸஹஸ்ர பாஹோ விஶ்வ மூர்த்தே ! - 1000 கைகளுடன்கூடிய எங்கும் வியாபித்திருக்கும் மூர்த்தி !, சதுர் புஜேந தேந ஏவ ரூபேண பவ - நான்கு கைகளுடன் கூடிய அந்த (அழகிய சாந்த) ரூபத்துடன் இருப்பீராக.

श्रीभगवानुवाच—

मया प्रसन्नेन तवार्जुनेदं
रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनन्तमाद्यं
यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥ ४७ ॥

47. மயா ப்ரஸந்நேந தவ அர்ஜுன இதம்
ரூபம் பரம் தர்ஶிதம் ஆத்ம யோகாத்
தேஜோமயம் விஶ்வம் அநந்தம் ஆத்யம்
யத் மே த்வதந்யேந ந த்ருஷ்ட பூர்வம்.

பகவான் சொல்—

ஹே அர்ஜுந!, ப்ரஸந்நேந மயா - (உன்னை ரக்ஷிக்கும் விருப்பத்துடன்) ப்ரஸந்நமாகி யிருக்கும் என்னால், இதம் பரம் ரூபம் - இந்த மேலான ரூபம், ஆத்ம யோகாத் - என் சொந்த யோக மகிமையால், தவ தர்ஶிதம் - உனக்குக் காட்டப்பட்டது, தேஜோமயம் - ப்ரகாசமயமாய், விஶ்வம் - யாவுமாய், அநந்தம் - முடிவில்லாததாய், ஆத்யம் - பூர்வத்திலுள்ளதாய் (இருக்கும்), மே யத் - எனது எந்த ரூபமுள்ளதோ (அது), த்வத் அந்யேந - உன்னையன்றிப் பிறர் ஒருவராலும், ந த்ருஷ்ட பூர்வம் - முன்பு பார்க்கப் பட்டதில்லை.

न वेदयज्ञाध्ययनैर्न दानै
र्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवंरूपः शक्य अहं नृलोके
द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८ ॥

48. ந வேத யஜ்ஞாத்யயநை: ந தாநை:
ந ச கிரியாபி: ந தபோபி: உக்ரை:

ஏவம் ரூப: ஶக்ய: அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வத் அந்யேந குருப்ரவீர.

ஹே குருப்ரவீர !, கௌரவரில் சிறந்த வீர !, ஏவம் ரூப: அஹம் - இந்த வடிவத்தையுடைய நான், ந்ருலோகே - இம்மனித உலகத்தில், த்வத் அந்யேந - உன்னை யன்றி மற்றெவராலும், வேத யஜ்ஞாத்யயநை: - வேதம் யஜ்ஞம் இவைகளைப் படிப்பதனால், த்ரஷ்டும் ந ஶக்ய: - பார்க்க ஸாத்தியமானவனல்ல, தாநை: ந - தானங்களினாலும் (பார்க்க ஸாத்தியமானவனல்ல), க்ரியாபி: ந - கர்மங்களினாலும் அல்ல, உக்ரை: தபோபி: ச ந - உக்கிரமான தபஸி னாலும் அல்ல.

मा ते व्यथा मा च विमूढभावो
दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं
तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९ ॥

49. மா தே வ்யதா மா ச விமூடபாவ:
த்ருஷ்ட்வா ரூபம் கோரம் ஈத்ருக் மம இதம்
வ்யபேதபீ: ப்ரீதமநா: புந: த்வம்
தத் ஏவ மே ரூபம் இதம் ப்ரபஶ்ய.

மம - எனது, ஈத்ருக் கோரம் இதம் ரூபம் - இப்படிப்பட்ட கோரமான இந்த (ஸம்ஹார) ரூபத்தை, த்ருஷ்ட்வா - பார்த்து, தே வ்யதா மா - உனக்குப் பயம் வேண்டாம், விமூட பாவ: ச மா - மயக்கமும் வேண்டாம். த்வம் - நீ, வ்யபேதபீ: - பயம் நீங்கி, ப்ரீத மநா: - சந்தோஷமனதுடன், மே இதம் தத் ஏவ ரூபம் - எனது இந்த அதே (அனுக்கிரக) ரூபத்தை, புந: ப்ரபஶ்ய - மறுபடி பார்ப் பாயாக.

सञ्जय उवाच —

इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा
स्वकं रूपं दर्शयामास भूयः ।

आश्वासयामास च भीतमेनं
भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५० ॥

50. இதி அர்ஜுநம் வாஸுதேவஃ ததா உக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்ஶயாமாஸ பூயஃ
ஆஶ்வாஸயாமாஸ ச பீதம் ஏநம்
பூத்வா புநஃ ஸௌம்யவபுஃ மஹாத்மா.

ஸஞ்ஜயன் சொல்—

*வாஸுதேவஃ - வஸுதேவர் புத்ரரான பகவான், இதி அர்ஜுனம் உக்த்வா - இவ்விதம் அர்ஜுனனைப் பார்த்துச் சொல்லி, ததா - (சொன்ன) அவ்விதமே, ஸ்வகம் ரூபம் - தன் (பூர்வ) ரூபத்தை, பூயஃ தர்ஶயாமாஸ-மறுபடி காண்பித்தார். மஹாத்மா - மஹாத்மாவான கிருஷ்ண பகவான், புநஃ-மறுபடியும், ஸௌம்யவபுஃ பூத்வா - சாந்த உருவத்துடன் கூடினவராய், பீதம் ஏநம் - பயந்துள்ள இவனை (அர்ஜுனனை), ஆஶ்வாஸயாமாஸ ச - சமாதானப் படுத்தினார் (தேற்றினார்).*

अर्जुन उवाच—

दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।
इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥ ५१ ॥

51. த்ருஷ்ட்வா இதம் மாநுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜநார்தந
இதாநீம் அஸ்மி ஸம்வ்ருத்தஃ ஸசேதாஃ ப்ரக்ருதிம் கதஃ.

அர்ஜுனன் வாக்கியம்—

*ஹே ஜநார்த்தன!, தவ ஸௌம்யம் - தங்களது (அழகிய) சாந்தமான, இதம் மாநுஷம் ரூபம் த்ருஷ்ட்வா - இந்த மனித ரூபத்தைப் பார்த்து, இதாநீம் - இப்போது, ஸசேதாஃ - மனக்கலக்கம் நீங்கி, ப்ரக்ருதிம் கதஃ ஸம் வ்ருத்தஃ அஸ்மி - (என்) இயற்கை நிலையை யடைந்தவனா யிருக்கிறேன்.*

श्रीभगवानुवाच—

सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकांक्षिणः ॥ ५२ ॥

52. ஸுது³ர்த³ர்ஶம் இத³ம் ரூபம் த்³ருஷ்டவாந் அஸி யத் மம
தே³வா: அபி அஸ்ய ரூபஸ்ய நித்யம் த³ர்ஶந காங்க்ஷிண:.

பகவான் வாக்கியம்—

மம யத் ரூபம் த்ருஷ்ட்வாந் அஸி - எனது எந்த வடிவத்தை (நீ) பார்த்திருக்கிறாயோ, இதம் - இந்த (ரூபமானது), ஸுதுர்தர்ஶம் - பார்க்க அருமையானது. தேவா: அபி - தேவர்களும்கூட, அஸ்யரூபஸ்ய - இந்த ரூபத்தின், தர்ஶநம் - தரிசனத்தை (காண்பதற்கு), நித்யம் காங்க்ஷிண: - எப்போதும் ஆவல் கொண்டிருக்கின்றனர்.

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ ५३ ॥

53. ந அஹம் வேதை³: ந தபஸா ந தா³நேந ந ச இஜ்யய
ஶக்ய: ஏவம் விதோ⁴: த்³ரஷ்டும் த்³ருஷ்டவாந் அஸி மாம் யதா².

த்வம் - நீ, மாம் யதா த்ருஷ்டவாந் அஸி - என்னை எவ்விதம் பார்த்திருக்கிறாயோ, ஏவம் வித: அஹம் - அவ்விதமான நான், வேதை: த்ரஷ்டும் ந ஶக்ய: - வேதங்களைப் படிப்பதனால் பார்ப்பதற்கு சாத்தியமானவன் அல்ல, தபஸா ச ந தாநேந ந - தபஸினாலும் அல்ல தானத்தினாலும் அல்ல, இஜ்யயா ந - யஜ்ஞத்தினாலும் அல்ல.

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परंतप ॥ ५४ ॥

54. ப⁴க்த்யா து அநந்யயா ஶக்ய: அஹம் ஏவம் வித⁴: அர்ஜுன
ஜ்ஞாதும் த்³ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப.

ஹே பரந்தப ! ஹே அர்ஜுந !, அநந்யயா பக்த்யாது - வேறு விஷயத்தில் செல்லாத ஒரே நோக்கமான பக்தியினாலேயே, ஏவம்

விதஃ அஹம் - இவ்வித விஸ்வரூபியான நான், தத்வேந ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச - உண்மையானபடி அறிவதற்கும் பார்ப்பதற்கும், ப்ரவேஷ்டும் ச - அடைவதற்கும், ஶக்யஃ- முடியுமானவன்.

**मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः संगवर्जितः ।**
**निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥ ५५ ॥**

55. மத்கர்மக்ருத் மத்பரமஃ மத்஭க்தஃ ஸங்கவர்ஜிதஃ
நிர்வைரஃ ஸர்வ ஭ூதேஷு யஃ ஸஃ மாம் ஏதி பாண்டவ.

ஹே பாண்டவ !, மத் கர்மக்ருத் - என்பொருட்டு (எனக்கர்ப்பித்து) கர்மம் செய்பவனுய், மத்பரமஃ - என்னையே மேலாகக்கருதினவனுய், மத்பக்தஃ - என் பக்தனுய், ஸங்கவர்ஜிதஃ - பற்று அற்றவனுய், ஸர்வபூதேஷு நிர்வைரஃ - எல்லாப் பிராணிகளிடத்தும் துவேஷமற்றவனுய், யஃ ஸஃ - எவன் (இருக்கிறுனே) அவன், மாம் ஏதி - என்னை வந்தடைகிறுன்.

**इति श्रीमद्भगवद्गीता० विश्वरूपदर्शनयोगो नामैकादशोऽध्यायः ।**

பக்தி யோகம்.

अर्जुन उवाच—

**एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।**
**ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १ ॥**

1. ஏவம் ஸததயுக்தாঃ யே ஭க்தாঃ த்வாம் பர்யுபாஸதே [தமாঃ.
யே ச அபி அக்ஷரம் அவ்யக்தம் தேஷாம் கே யோகவித்

அர்ஜுனன் வினு—

யே பக்தாঃ- எந்த பக்தர்கள், ஏவம்- இவ்விதம், ஸததயுக்தாঃ- எப்போதும் ஒருநிலைப்பட்ட மனதுடன், த்வாம் - (ஸகுணப்ரம்ம மாகிய) தங்களை, பர்யுபாஸதே - உபாஸிக்கின்றார்களோ, யே ச அபி - மற்று எவர்கள், அவ்யக்தம் அக்ஷரம் - காண்பதற்கு முடியாத நாசமற்ற நிர்குணப்ரம்மத்தை (உபாஸிக்கின்றார்களோ), தேஷாம் - இவ்விருவருள், கே - யார், யோகவித்தமாঃ-யோகத்தை நன்றாய் அறிந்தவர்கள் ?

भगवानुवाच—

**मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।**
**श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २ ॥**

2. மயி ஆவேஶ்ய மநঃ யே மாம் நித்யயுக்தாঃ உபாஸதே
ஶ்ரத்தயா பரயா உபேதாঃ தே மே யுக்ததமாঃ மதாঃ.

பகவான் விடை—

யே - எவர்கள், மநঃ மயி ஆவேஶ்ய - மனதை என்னிடத்தில் செலுத்தி, நித்யயுக்தாঃ - எப்போதும் ஒருநிலைப்பட்ட மனதுடன், பரயா ஶ்ரத்தயா உபேதாঃ-மேலான முயற்சியுடன்கூடினவர்களாய், மாம் உபாஸதே - என்னைப் பூஜிக்கின்றார்களோ, தே யுக்ததமாঃ - அவர்கள் உயர்ந்த யோகிகள் (என்று), மே மதாঃ - எனது அபிப்பிராயம்.

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥
संनियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥

3. யே து அக்ஷரம் அநிர் தேஶ்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே
ஸர்வத்ரகம் அசிந்த்யம் ச கூடஸ்தம் அசலம் த்ருவம்.

4. ஸந்நியம்ய இந்த்ரியக்ராமம் ஸர்வத்ர ஸம புத்தயஃ
தே ப்ராப்நுவந்தி மாம் ஏவ ஸர்வபூத ஹிதே ரதாஃ.

யே து - மற்று எவர்கள், இந்திரியக்ராமம் ஸந்நியம்ய - இந்திரக் கூட்டத்தை நன்றாக அடக்கி, ஸர்வத்ர ஸம புத்தயஃ - எப்போதும் சமபுத்தியுடையவர்களாய், ஸர்வ பூத ஹிதே ரதாஃ-எல்லா ஜீவன்களுக்கும் ஹிதத்தையே எண்ணுகின்றவர்களாய், அநிர்தேஶ்யம் - ரூபித்துக்காட்ட முடியாததும், அவ்யக்தம் - காண முடியாததும், ஸர்வத்ரகம்-எங்கிலும் வியாபித்திருப்பதும், அசிந்த்யம் - சிந்திக்க முடியாததும், கூடஸ்தம் - கூடஸ்தமாயும், அசலம் - சலன மற்றதும், த்ருவம் - சாச்வதமானதும், அக்ஷரம் - அழிவில்லாததுமான நிர்க்குணப்ரம்மத்தை, பர்யுபாஸதே - செவ்வையாய் உபாஸிக்கின்றார்களோ, தே - அவர்கள், மாமேவ ப்ராப்நுவந்தி - என்னையே வந்தடைகின்றனர்.

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥

5 க்லேஶஃ அதிகதரஃ தேஷாம் அவ்யக்த ஆஸக்த சேதஸாம்
அவ்யக்தா ஹி கதிஃ துஃகம் தேஹவத்பிஃ அவாப்யதே.

அவ்யக்த ஆஸக்த சேதஸாம் தேஷாம் - காணமுடியாத நிர்குணப்ரம்மத்தினிடம் ஆஸக்தி (பற்று) யுடைய மனதையுடைய அவர்களுக்கு, க்லேஶஃ அதிகதரஃ - கஷ்டம் அதிகமானது, ஹி -

ஏனென்றால், அவ்யக்தா கதி: - நிர்குணப்ரம்ம உபாஸனை செய்யும் வழியானது, தேஹவத்பி: - தேகாபிமான முடையவர்களால், துக்கம் அவாப்யதே - கஷ்டத்துடன் அரிதாக அடையப்படுகிறது.

ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥ ६ ॥

तेषामहं समुद्धर्ता मृत्युसंसार सागरात् ।
भवामि न चिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७ ॥

6. யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்யஸ்ய மத்பரா:
அநந்யேந ஏவ யோகேந மாம் த்யாயந்த: உபாஸதே.

7. தேஷாம் அஹம் ஸமுத்தர்தா ம்ருத்யுஸம்ஸார ஸாகராத்
பவாமி ந சிராத்பார்த மயி ஆவேஶித சேதஸாம்.

யேது - மற்று எவர்கள், ஸர்வாணி கர்மாணி - (அவர்களது) எல்லாக் கர்மங்களையும், மயி ஸந்யஸ்ய - என்னிடம் அர்ப்பித்து, மத்பரா:-என்னையே மேலாகக்கொண்டு, அநந்யேநைவ யோகேந - வேறொன்றில் செல்லாமல் என்னிடத்திலேயே செலுத்தப்பட்ட யோகயுக்தியுடன், மாம் த்யாயந்த: உபாஸதே - என்னைத் தியானித்து உபாஸிக்கின்றார்களோ, மயி ஆவேஶித சேதஸாம் தேஷாம் - என்னிடம் செலுத்தப்பட்ட மனதையுடைய அவர்களை, ந சிராத் - அதி சீக்கிரத்தில், ம்ருத்யுஸம்ஸார ஸாகராத் - சாவுடன்கூடின ஸம்ஸார ஸாகரத்திலிருந்து, ஸமுத்தர்தா - கரையேற்றுகிறவனாக, அஹம் பவாமி - நான் ஆகிறேன்.

मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८ ॥

8. மயி ஏவ மந: ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேஶய
நிவஸிஷ்யஸி மயி ஏவ அத ஊர்த்வம் ந ஸம்ஶய:.

மய்யேவ மந ஆதத்ஸ்வ - என்னிடத்திலேயே மனதை நிலை நிறுத்து, மயி புத்திம் நிவேசய - என்னிடத்தில் புத்தியைச் செலுத்து, அத ஊர்த்வம் - அதற்குமேல், மய்யேவ - என்னிடத்திலேயே, நிவஸிஷ்யஸி- நீ வசிப்பாய், ந ஸம்சயঃ-(இதில்) சந்தேகமில்லை.

**अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।**
**अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय ॥ ९ ॥**

9. அத சித்தம் ஸமாதாதும் ந சக்னோஷி மயி ஸ்திரம்
அப்யாஸயோகேந ததঃ மாம் இச்ச ஆப்தும் தநஞ்ஜய.

ஹே தநஞ்ஜய !, மயி - என்னிடத்தில், சித்தம் ஸ்திரம் ஸமாதாதும் - சித்தத்தை உறுதியாக நிலை நிறுத்துவதற்கு (Concentrate), ந சக்னோஷி - (உனக்கு) சக்தி யில்லாவிட்டால், அதঃ ததঃ - ஆனல் பிறகு, அப்யாஸயோகேந - அப்பியாஸ யோகத்தினல், மாம் ஆப்தும் இச்ச - என்னை அடைவதற்கு இஷ்டப்படுவாயாக.

**अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्म परमोभव ।**
**मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि ॥ १० ॥**

10. அப்யாஸே அபி அஸமர்தঃ அஸி மத்கர்ம பரமঃ பவ
மதர்தமபி கர்மாணி குர்வந் ஸித்திம் அவாப்ஸ்யஸி.

அப்யாஸே அபி - அப்பியாஸத்திலும், அஸமர்த்தঃ அஸி- (நீ) சமர்த்தனு யில்லாவிட்டால், மத் கர்ம பரமঃ பவ - என்பொருட்டு கர்மம் செய்வதில் மேலானவனுக இருப்பாயாக. மதர்தம் அபி கர்மாணி குர்வந் அபி - என்பொருட்டு கர்மம் செய்கிறவனுயினும், ஸித்திம் அவாப்ஸ்யஸி - ஸித்தியை அடைவாய்.

**अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।**
**सर्वकर्म फलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११ ॥**

11. அத ஏதத் அபி அசக்தঃ அஸி கர்தும் மத்யோகம் ஆச்ரித
ஸர்வ கர்ம ஃபலத்யாகம் ததঃ குரு யதாத்மவாந்.

ஏதத் அபி கர்தும் அமக்தஃ அஸி அத ததஃ - இதையும் செய்வதற்கு சக்தி யற்றனையானல் பிறகு, மத் யோகம் ஆஶ்ரிதஃ - என் விஷயமான பக்தி யோகத்தை ஆஶ்ரயித்துக்கொண்டு, யத ஆத்மவாந் - மனதை அடக்கினவனுய், ஸர்வ கர்ம பலத்யாகம் குரு - எல்லாக் கர்மங்களின் பலனை (இச்சிக்காமல்) விட்டுவிடுவதைச் செய்.

**श्रेयो हि ज्ञानमभ्यासाज्ज्ञानाद्ध्यानं विशिष्यते ।**
**ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छान्तिरनन्तरम् ॥ १२ ॥**

12. ஶ்ரேயஃ ஹி ஜ்ஞாநம் அப்யாஸாத் ஜ்ஞாநாத் த்யாநம் விஶிஷ்யதே
த்யாநாத் கர்ம பலத்யாகஃ த்யாகாத் ஶாந்திஃ அநந்தரம்.

ஜ்ஞாநம்-ஞானமானது, அப்யாஸாத் ஶ்ரேயோ ஹி- அப்பியாஸத்தைக்காட்டிலும் மேலானதன்றே; தியாநம் - தியானமானது, ஜ்ஞாநாத் விஶிஷ்யதே - ஞானத்தைக்காட்டிலும் சிறந்தது; கர்மபலத்யாகஃ - கர்மபலனை விட்டுவிடுதல், த்யாநாத் விஶிஷ்யதே - தியானத்தைவிட மேலானது. த்யாகாத் - தியாகத்தினல் (பலனை விடுவதால்), ஶாந்திஃ அநந்தரம் பவதி - ஒழிவு அல்லது மனச்சாந்தி உடனே உண்டாகிறது.

**अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।**
**निर्ममो निरहंकारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥**
**सन्तुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।**
**मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥ १४ ॥**

13. அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ரஃ கருணஃ ஏவ ச
நிர்மமஃ நிரஹங்காரஃ ஸமதுஃகஸுகஃ க்ஷமீ.

14. ஸந்துஷ்டஃ ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஶ்சயஃ
மயி அர்பித மநோபுத்திஃ யஃ மத்பக்தஃ ஸஃ மே ப்ரியஃ.

ஸர்வ பூதாநாம் அத்வேஷ்டாஃ - ஸர்வ ஜீவன்களிடத்திலும் த்வேஷமற்று, மைத்ரஃ - (எல்லோரிடமும்) மித்திரனுய், கருணஃ -

கருணையுள்ளவனுய், க்ஷமீ - பொறுமையுள்ளவனுய், நிர்மம: - எனது என்னும் அபிமானமற்றவனுய், நிர் அஹங்கார: - நான் என்னும் எண்ணமில்லாதவனுய், ஸமதுக்கஸுக: - ஸுகதுக்கங்களை ஸமமாக எண்ணுபவனு ், ஸததம் ஸந்துஷ்ட:- எப்போதும் சந்துஷ்டியுடன் கூடினவனுய், யோகீ - யோகியாய், யத ஆத்மா - மனதை அடக்கினவனுய், த்ருடநிஸ்சய: - திடச்சித்த முள்ளவனுய், மயி ஏவ அர்பித மனோபுத்தி:- என்னிடத்திலேயே செலுத்தின மனது புத்தியுடையவனுய் இருக்கிற, மத்பக்த: ய:- எனது பக்தன் எவனே, ஸ: மே ப்ரிய:- அவன் எனக்குப் பிரியமானவன்.

**यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।**
**हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥ १५ ॥**

15. யஸ்மாத் ந உத்விஜதே லோக: லோகாத் ந உத்விஜதே ச ய:
ஹர்ஷாமர்ஷபயோத்வேகை: முக்த: ய: ஸ: ச மே ப்ரிய:.

லோக: - உலகமானது, யஸ்மாத் ந உத்விஜதே - எவனிடத்தில் பயப்படுவதில்லையோ, ச ய: - மற்று எவன், லோகாத் ந உத்விஜதே - உலகத்தினிடம் பயப்படுவதில்லையோ, ய: - எவன், ஹர்ஷாமர்ஷபயோத்வேகை: முக்த: - சந்தோஷம், கோபம், அச்சம், மனக்கலக்கம் இவைகளிலிருந்து விடுபட்டவனே, ஸ ச மே ப்ரிய: - அவன் எனக்கு பிரியமானவன்.

**अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।**
**सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६ ॥**

16. அநபேக்ஷ: ஸுசி: தக்ஷ: உதாஸீந: கதவ்யத:
ஸர்வாரம்பபரித்யாகீ ய: மத்பக்த: ஸ: மே ப்ரிய:.

அநபேக்ஷ: - அபேக்ஷையின்றி, ஸுசி: - (மனதும் சரீரமும்) பரிசுத்தமுள்ளவனுய், தக்ஷ: - ஸமாத்தனுய், உதாஸீந: - (எது நேர்ந்தாலும் அதில்) உதாஸீன முடையவனுய், கதவ்யத: - பயமற்றவனுய், ஸர்வாரம்பபரித்யாகீ - எல்லா முயற்சிகளையும்

விட்டவனும் (இருக்கின்ற), மத்பக்தஃ- என் பக்தன், யஃ- எவனோ, ஸஃ மே ப்ரியஃ - அவன் எனக்குப் பிரியமானவன்.

यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥ १७ ॥

17. யஃ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந ஶோசதி ந காங்க்ஷதி
ஶுபாஶுபபரித்யாகீ பக்திமாந் யஃ ஸ மே ப்ரியஃ.

யஃ ந ஹ்ருஷ்யதி - எவன் சந்தோஷிக்கிறதில்லையோ (அபரிமிதமாய்), ந த்வேஷ்டி- வெறுக்கிறதில்லையோ, ந ஶோசதி -வருந்துகிறதில்லையோ, ந காங்க்ஷதி - விரும்புகிறதில்லையோ, ஶுபாஶுப பரித்யாகீ-(எவன்) நன்மை தீமைகளை விட்டவனோ, பக்திமான் யஃ- எவன் பக்திமானோ, ஸஃ-மே ப்ரியஃ அவன் எனக்குப் பிரியமானவன்.

समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥ १८ ॥
तुल्यनिन्दास्तुतिर्मौनी सन्तुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९ ॥

18. ஸமஃ ஶத்ரௌ ச மித்ரே ச ததா மாநாபமாநயோஃ
ஶீதோஷ்ணஸுகதுஃகேஷு ஸமஃ ஸங்கவிவர்ஜிதஃ.

19. துல்யநிந்தாஸ்துதிஃ மௌநீ ஸந்துஷ்டஃ யேந கேநசித்
அநிகேதஃ ஸ்திரமதிஃ பக்திமாந்மே ப்ரியஃ நரஃ.

ஶத்ரௌ ச மித்ரே ச ஸமஃ - பகைவன் நண்பன் இவர்களிடம் சமமாயும், ததா - அப்படியே, மாநாபமாநயோஃ - மானம் அவமானத்திலும், ஶீதோஷ்ணஸுகதுக்கேஷு ஸமஃ - குளிரிலும் வெப்பத்திலும் இன்ப துன்பம் இவைகளிலும் சமமாயும், ஸங்கவிவர்ஜிதஃ - பற்று அற்றவனும், துல்யநிந்தாஸ்துதிஃ- இகழ்ச்சி புகழ்ச்சி இவற்றை சமமாகக்கருதி, மௌநீ - மௌநமுடையவனும், யேந கேநசித் ஸந்துஷ்டஃ - எது கிடைத்தாலும்

அதில் திருப்தியுடையவனாய், அநிகேதः - வஸிக்க இடமில்லாத வனாயும், ஸ்திரமதி:-ஸ்திரபுத்தியுடையவனாயும், பக்திமான் நர: - பக்தியுடனும் கூடிய மனிதன், மே ப்ரிய: - எனக்குப் பிரியமான வன்.

ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते ।
श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥

20. யே து ধர்ம்ய அம்ருதம் இதம் யথா உக்தம் பர்யுபாஸதே
ஶ்ரத்ধாநா: மத்பரமா: ভக்தா: தே அதீவ மே ப்ரியா:.

யே து-மற்று எவர்கள், தர்ம்யாம்ருதம் இதம் - தர்மத்துடன் கூடிய இந்த அம்ருதத்தை, யத: உக்தம் - சொன்னபிரகாரம், பர்யுபாஸதே - நன்றாக அனுஷ்டிக்கிறார்களோ, ஶ்ரத்ததாநா: - நம்பிக்கையுடன், மத்பரமா: பக்தா: - என்னை மேலாகக் கருதின பக்தர்களோ, தே - அவர்கள், மே அதீவ ப்ரியா: - எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.

इति श्रीमद्भगवद्गीता० भक्तियोगो नाम द्वादशोऽध्यायः ।

अर्जुन उवाच—

प्रकृतिं पुरुषं चैव क्षेत्रं क्षेत्रज्ञमेव च ।
एतद्वेदितुमिच्छामि ज्ञानं ज्ञेयं च केशव ॥ १ ॥

1. ப்ரக்ருதிம் புருஷம் ச ஏவ க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞம் ஏவ ச
ஏதத் வேதிதும் இச்சாமி ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ச கேஶவ.

அர்ஜுனன் வினா—

ஹே கேஶவ!, ப்ரக்ருதிம் புருஷம் சைவ - ப்ரக்ருதி புருஷனைப்பற்றியும், க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞமேவ ச - க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞனைப்பற்றியும், ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ச - அறிவு அறியவேண்டியது, ஏதத் - இவற்றை, வேதிதும் இச்சாமி - அறிந்துகொள்ள இச்சிக்கிறேன்.

भगवानुवाच—

इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते ।
एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥ २ ॥

2. இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரம் இதி அபிதீயதே
ஏதத் ய: வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ: இதி தத்வித:.

பகவான் விடை—

ஹே கௌந்தேய!, இதம் சரீரம் - இந்த சரீரமானது, க்ஷேத்ரம் இதி அபிதீயதே - க்ஷேத்ரம் என்று வழங்கப்படுகிறது, ஏதத் ய: வேத்தி - இதை எவன் அறிகிறானோ, தம் - அவனை, க்ஷேத்ரஜ்ஞ இதி - க்ஷேத்ரஜ்ஞன் என்று, தத்வித: ப்ராஹு: - அவற்றை யறிந்தவர்கள் சொல்லுகின்றனர்.

**क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।**
**क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥ ३ ॥**

3. க்ஷேத்ரஜ்ஞம் ச அபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத
க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ: ஜ்ஞாநம் யத் தத் ஜ்ஞாநம் மதம் மம.

ஹே பாரத !, சர்வக்ஷேத்ரேஷு - எல்லா க்ஷேத்ரங்களிலும் (சரீரங்களிலும்) (இருக்கும்), க்ஷேத்ரஜ்ஞம் - க்ஷேத்ரஜ்ஞனை, மாம் ச அபி வித்தி - நானே என்று அறிவாயாக. க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ: ஜ்ஞாநம் யத் - க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞன் இவர்களைப்பற்றிய அறிவு எதுவோ, தத் ஜ்ஞாநம் - அது(வே) ஞானம் (என்பது), மம மதம் - எனது கொள்கை.

**तत्क्षेत्रं यच्च यादृक्च यद्विकारि यतश्च यत् ।**
**स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥ ४ ॥**

4. தத்க்ஷேத்ரம் யத் ச யாத்ருக் ச யத்விகாரி யத: ச யத்
ஸ: ச ய: யத்ப்ரபாவ: ச தத் ஸமாஸேந மே ஶ்ருணு.

தத் க்ஷேத்ரம் - அந்த க்ஷேத்ரமானது, யத் ச - எந்த உருவத்தையுடையது, யாத்ருக் ச - எவ்விதத் தன்மைகளையுடையது, யத்விகாரி- எந்த வேறுபாட்டை (மாறுதல்) உடையது, யதஶ்ச யத்- எதிலிருந்து எது உண்டானது, ஸ ச ய: - க்ஷேத்ரஜ்ஞன் யார், யத் ப்ரபாவஶ்ச - (அவன்) எப்படிப்பட்ட மேன்மையை யுடையவன், தத்-இவற்றை (யெல்லாம்), ஸமாஸேன- சுருக்கமாக, மே ஶ்ருணு- என்னிடமிருந்து கேட்பாயாக.

**ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।**
**ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ५ ॥**

5. ருஷிபி: பஹுதா கீதம் சந்தோபி: விவிதை: ப்ருதக்
ப்ரஹ்மஸூத்ரபதை: ச ஏவ ஹேதுமத்பி: விநிஶ்சிதை:.

ரிஷிபி: - ரிஷிகளால், பஹுதா - பலவிதமாயும், விவிதை: சந்தோபி: - பல சந்தஸ்களாலும், ப்ருதக் - தனித்தனியாயும், கீதம் - பாடப்பெற்றது (க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞன் - இவர்களின் தன்மை), ஹேதுமத்பி: விநிஸ்சிதை:- யுக்திகளுடன்கூடிய சந்தேக மற்ற ஞானத்தை உண்டாக்குகிற, ப்ரஹ்மஸூத்ர பதை: ச ஏவ - பரப்ரம்மத்தைக் குறிக்கும் பதங்களினாலும் (கீதம் - பாடப் பெற்றது).

**महाभूतान्यहङ्कारो बुद्धिरव्यक्तमेव च ।**
**इन्द्रियाणि दशैकं च पंच चेन्द्रियगोचराः ॥ ६ ॥**

**इच्छा द्वेषः सुखं दुःखं सङ्घातश्चेतना धृतिः ।**
**एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ७ ॥**

6. மஹாபூதாநி அஹங்கார: புத்தி: அவ்யக்தம் ஏவ ச
இந்த்ரியாணி தஸ ஏகம் ச பஞ்ச ச இந்த்ரிய கோசரா:.

7. இச்சா த்வேஷ: ஸுகம் து:கம் ஸங்காத: சேதநா: த்ருதி:
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரம் உதாஹ்ருதம்.

மஹாபூதாநி - ப்ருதிவி முதலிய 5 ஸூக்ஷ்ம பூதங்களான தன்மாத்திரைகளும், அஹங்கார: - அகங்கார தத்துவமும், புத்தி - புத்தி (யென்னும் மகதத்துவமும்), அவ்யக்தமேவ ச - அவ்யக்தமும் (மாயை), இந்திரியாணி தச - ஞானேந்திரியம் கர்மேந்திரியம் இவை பத்தும், ஏகம் ச - மனது ஒன்றும், இந்திரிய கோசரா: பஞ்ச ச - இந்திரிய விஷயங்கள் ஐந்தும், இச்சா த்வேஷ ஸுகம் துக்கம்-விருப்பு, வெறுப்பு, ஸுகம், துக்கம் இவைகளும், ஸங்காத: - (தேக இந்திரியங்களின்) சேர்க்கையும், சேதநா - மனோ விருத்தியும், த்ருதி: - தைரியமும் (ஆகிய), ஸ விகாரம் - விகாரங்களுடன் (இந்திரிய) கூடிய, ஏதத் க்ஷேத்ரம் - இந்த சரீரமானது, ஸமாஸேந உதாஹ்ருதம் - சுருக்கமாய் சொல்லப்பட்டது.

**अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।**
**आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ८ ॥**

इन्द्रियार्थेषु वैराग्यमनहङ्कार एव च ।
जन्ममृत्युजराव्याधि दुःखदोषानुदर्शनम् ॥ ९ ॥

असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ १० ॥

मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ ११ ॥

अध्यात्मज्ञाननित्यत्वं तत्वज्ञानार्थदर्शनं ।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥ १२ ॥

8. அமாநித்வம் அதம்பித்வம் அஹிம்ஸா க்ஷாந்தி: ஆர்ஜவம்
ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தைர்யம் ஆத்மவிநிக்ரஹ:.

9. இந்த்ரியார்த்தேஷு வைராக்யம் அநஹங்கார: ஏவ ச
ஜந்ம ம்ருத்யு ஜரா வ்யாதி து:க்க தோஷாநுதர்ஶநம்.

10. அஸக்தி: அநபிஷ்வங்க: புத்ரதார க்ருஹாதிஷு
நித்யம் ச ஸம சித்தத்வம் இஷ்டா நிஷ்டோபபத்திஷு.

11. மயி ச அநந்ய யோகேந பக்தி: அவ்யபிசாரிணீ
விவிக்த தேஶ ஸேவித்வம் அரதி: ஜநஸம்ஸதி.

12. அத்யாத்ம ஜ்ஞாந நித்யத்வம் தத்வஜ்ஞாநார்த்ததர்ஶநம்
ஏதத் ஜ்ஞாநம் இதி ப்ரோக்தம் அஜ்ஞாநம் யத் அத: அந்யதா.

அமாநித்வம் - தற்புகழ்ச்சியின்மை, அதம்பித்வம் - டம்ப மின்மை, அஹிம்ஸா - ஜீவஹிம்ஸை செய்யாமை, க்ஷாந்தி:- பொறு மை, ஆர்ஜவம் - கபடமில்லாத சீலத்தன்மை, ஆசார்ய உபாஸநம் - குருஸேவை, ஶௌசம் - சரீரமனச்சுத்தம், ஸ்தைர்யம் - உறுதி, ஆத்ம விநிக்ரஹ: - தன்னடக்கம், இந்திரியார்த்தேஷு வைராக்யம் - இந்திரிய விஷயங்களில் பற்றின்மை, அநஹங்கார: ஏவ ச - தான் என்னும் அகங்காரமின்மை, ஜந்ம ம்ருத்யு ஜரா வியாதி துக்க தோஷ அநுதர்ஶநம்-பிறப்பு இறப்பு, மூப்பு, வியாதி, துக்கம் இவற்

றின் தீமையை உணர்தல், புத்ரதாரக்ருஹாதிஷு-புத்ரன், மனைவி, வீடு இவற்றின்மீது, அஸக்தி: அநபிஷ்வங்க: - ஆசையின்மையும் (மற்றவைகளில்) அபிமாநமின்மையும், இஷ்ட அநிஷ்ட உபபத்திஷு - வேண்டியனவும் வேண்டாதனவும் நேரும்போது, நித்யம் ஸம சித்தத்வம்- எப்போதும் ஸமமான புத்தியும், மயி ச - என்னிடத்தில், அநந்ய யோகேந அவ்யபிசாரிணீ பக்தி: - அந்யமல்லாத யோகத்துடன் கூடிய பிறழாத பக்தியும், விவிக்த தேஶஸேவித்வம் - தனியிடத்திலிருக்க விருப்பமும், ஜந ஸம்ஸதி அரதி: - ஜனக்கூட்டத்தில் அருவெறுப்பும், தத்வ ஜ்ஞாநார்த்த தர்ஶநம் - உண்மையறிவின் பலனாகிய (பகவானை எப்போதும்) சிந்தித்தலும் (ஆகிய), ஏதத்-இந்த இருபதும், ஜ்ஞாநம் இதி ப்ரோக்தம்-ஞானம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அத: அந்யதா யத் - இவைகளுக்கு வேறானது எவைகளோ, தத் அஜ்ஞாநம் - அவை (யெல்லாம்) அஜ்ஞானம்.

ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वाऽमृतमश्नुते ।
अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥ १३ ॥

13. ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யத்ஜ்ஞாத்வா அம்ருதம் அஶ்நுதே
அநாதிமத் பரம் ப்ரஹ்ம ந ஸத் தத் ந அஸத் உச்யதே.

ஜ்ஞேயம் யத் - எது அறியப்படவேண்டியதோ, யத் ஜ்ஞாத்வா - எதையறிந்து, அம்ருதம் அஶ்நுதே - (ஒருவன்) பிறப்பின்மையை யடைவானோ, தத் ப்ரவக்ஷ்யாமி - அதை விரிவாகச் சொல்லுகின்றேன். அநாதிமத் பரம் ப்ரஹ்ம தத் - ஆதியில்லாத மேலான ப்ரம்மமென்று (சொல்லப்படும்) அந்த வஸ்து, ஸத் ந உச்யதே அஸத் ந - ஸத்தாகவும் சொல்லப்படுகிறதில்லை, அஸத்தாகவும் சொல்லப்படுகிறதில்லை.

सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखं ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ १४ ॥

14. ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வத: அக்ஷி ஶிரோமுகம்
ஸர்வத: ஶ்ருதிமத் லோகே ஸர்வம் ஆவ்ருத்ய திஷ்டதி.

தத் - அந்த பரப்ரஹ்மம், ஸர்வதঃ பாணிபாதம் - எல்லா இடங்களிலும் கைகளையும் கால்களையும் உடையது, ஸர்வதঃ அக்ஷி ஶிரோமுகம் - எங்கிலும் கண்களையும், தலைகளையும், முகங்களையும் உடையது, ஸர்வதঃ ஶ்ருதிமத் - எங்கிலும் செவிகளையுடையது, லோகே - உலகத்தில், ஸர்வம் ஆவ்ருத்ய திஷ்டதி - எல்லாவற்றையும் வியாபித்துக்கொண்டு இருக்கிறது.

सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १५ ॥

15. ஸர்வேந்த்ரியகுணாபாஸம் ஸர்வேந்த்ரியவிவர்ஜிதம்
அஸக்தம் ஸர்வப்ருத் ச ஏவ நிர்குணம் குணபோக்த்ரு ச.

ஸர்வேந்திரிய குணபாஸம் - (அந்த ப்ரம்மம்) எல்லா இந்திரியங்களின் தொழில்களால் விளங்குவது, ஸர்வேந்திரிய விவர்ஜிதம் - (ஆனாலும்) ஸகல இந்திரியங்களும் அற்றது, அஸக்தம் - (ஒன்றிலும்) பற்றில்லாதது (சார்பில்லாதது), ஸர்வப்ருத் ச ஏவ - (ஆயினும்) எல்லாவற்றையும் தாங்குவது, நிர்குணம் - குணங்களற்றது, குண போக்த்ரு ச - (ஆனால்) குணங்களை அனுபவிப்பது.

बहिरन्तश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥ १६ ॥

16. பஹிঃ அந்தঃ ச பூதாநாம் அசரம் சரம் ஏவ ச [தத்.
ஸூக்ஷ்மத்வாத் தத் அவிஜ்ஞேயம் தூரஸ்தம் ச அந்திகே ச

தத் - அந்த ப்ரம்மம், பூதாநாம் பஹிঃ அந்தஶ்ச - பூதங்களின் வெளியிலும் உள்ளேயுமிருப்பது, அசரம் சரம் ஏவ ச - அசரப் பொருளும் சரப்பொருளுமானது, ஸூக்ஷ்மத்வாத் அவிஜ்ஞேயம் (அது) மிக நுட்பமாயிருப்பதால் அறிவதற்கு அரிதானது, தத் தூரஸ்தம் ச அந்திகே ச- அது தூரத்திலும் சமீபத்திலுமுள்ளது-

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १७ ॥

17. அவிபக்தம் ச பூதேஷு விபக்தம் இவ ச ஸ்திதம்
பூதபர்த்ரு ச தத் ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச.

தத் ஜ்ஞேயம்-அந்த அறியப்படவேண்டிய பரப்ரம்மம், அவிபக்தம் ச - பிரிவில்லாதது, பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம்- (ஆயினும்) பூதங்களில் வெவ்வேறாய், பிரிக்கப்பட்டதுபோல் இருப்பது; பூத பர்த்ரு ச - பூதங்களைத் தாங்குவது (ரக்ஷிப்பது), க்ரஸிஷ்ணு - எல்லாவற்றையும் (தன்னிடம் லயப்படுத்திக்கொள்வது) விழுங்குவது, ப்ரபவிஷ்ணு ச - (சகலத்தையும்) உண்டாக்குவது.

ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥ १८ ॥

18. ஜ்யோதிஷாம் அபி தத் ஜ்யோதிः தமஸः பரம் உச்யதே
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாந கம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம்.

தத் - அப்பரப்ரம்மம், ஜ்யோதிஷாமபி ஜ்யோதிः - ஒளிகளுக்குள் ஒளியாயுள்ளது, தமஸः பரம் உச்யதே - அஜ்ஞானத்துக்கு அதிதமானது என்று சொல்லப்படுகிறது. ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாந கம்யம் - அறிவு, அறியவேண்டியது, அறிவினல் அடையப்படுவது இம்மூன்றுமானது, ஸர்வஸ்ய ஹ்ருதி விஷ்டிதம் - எல்லாருடைய ஹிருதயத்திலும் உள்ளது.

इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।
मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १९ ॥

19. இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ச உக்தம் ஸமாஸதः
மத்பக்தः ஏதத் விஜ்ஞாய மத்பாவாய உபபத்யதே.

இதி - இவ்விதமாய், க்ஷேத்ரம் ததா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ச - க்ஷேத்ரம் அப்படியே ஞானம் அறிய வேண்டிய பரப்ரம்மம் இவைகள், ஸமாஸதः உக்தம் - சுருக்கமாய் சொல்லப்பட்டன. மத் பக்தः - எனது பக்தன், ஏதத் விக்ஞாய - இவற்றை யறிந்து, மத் பாவாய உபபத்யதே - என் நிலைமையை யடையத் தகுதியுடையவனுகிறான்.

